# பண்டைத் தமிழ் இலக்கியங்களில்
# சிவன்

*1984-ம் ஆண்டு ஆகஸ்ட் திங்களில் ஆய்வியல் நிறைஞர் (எம். ஃபில்) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெற்ற ஆய்வேடு.*

**ச. இரேணுகா** எம்.ஏ., எம்.ஃபில்,
எம்.எட்., டிப்.,மொழியியல்.,
விசாரத்(இந்தி),
விரிவுரையாளர்,
செவாலியர் டி. தாமஸ் எலிசபத்
மகளிர் கல்லூரி,
செம்பியம், சென்னை-600011.

97, பஜனை கோயில் தெரு,
சூளைமேடு, சென்னை-600094.
1989

# பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவன்


| | |
|---|---|
| முதற் பதிப்பு | |
| (C) உரிமை | ஆசிரியர்க்கே |
| ஆசிரியர் | ச. இரேணுகா. |
| வெளியிட்ட நாள் | 28-11-1989 |
| நூலின் அளவு | கிரௌன் |
| பக்கங்கள் | 152+16 |
| படிகள் | 1000 |
| விலை | ரூ. 17 |

அச்சிட்டது — அகஸ்தியர் அச்சகம்,
97 பஜனை கோயில் தெரு,
சூளைமேடு, சென்னை-94.

பதிப்பாளர் — ஆசிரியர் ச. இரேணுகா,
97 பஜனை கோயில் தெரு,
சூளைமேடு, சென்னை-94.

# காணிக்கை



திரு. க. சண்முகசுந்தரம் - திருமதி. துளசியம்மாள்
என் அன்பார்ந்த பெற்றோர்கட்கு இந்நூலைக்
காணிக்கையாகப் படைக்கிறேன்,

ச. இரேணுகா.

# சிறப்புரை

## டாக்டர் பொற்கோ

பேராசிரியர் - தலைவர், தமிழிலக்கியத்துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவன் என்ற தலைப்பில் திருமதி இரேணுகா அவர்கள் எம்.ஃபில் பட்டப் பேற்றுக்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு வழங்கிய ஆய்வேடு இப்பொழுது நூல் உருவில் வெளிவருகிறது. சிறந்த ஆய்வுகள் இப்படி நூல் உருவில் வெளிவருவது ஆய்வாளருக்கு ஊக்கம் அளிப்பதாகவும் பொது மக்களுக்குப் பயன் அளிப்பதாகவும் அமையும்.

பழங்காலத் தமிழ்ச் சமுதாயம் சிவனைப் பற்றி என்ன கருத்து கொண்டிருந்தது, சிவனை எப்படிப்பட்ட வடிவங்களில் கண்டது என்பன போன்ற செய்திகளை உணர்ந்துகொள்ளப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் மிகப் பெரிய அளவுக்கு உதவுகின்றன. பண்டைத் தமிழ் இலக்கியங்களின் துணைகொண்டு ஆய்வுசெய்து மேற் குறித்த செய்திகளைத் திருமதி இரேணுகா அவர்கள் இந்த நூலில் எடுத்து விளக்கியிருக்கிறார்.

சங்க காலத்திற்கு முற்பட்ட சிவனைப் பற்றியும் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் காட்டும்சிவனைப் பற்றியும் ஆராய்ந்து செய்திகளைத் தொகுத்துக் கூறிய ஆசிரியர் சிவனைப் பற்றிக் காணும் கதைக் குறிப்புகளை எல்லாம் எடுத்து விளக்குகிறார். சிவனைப் பற்றிய காட்சிகளையும் கதைகளையும் விளக்கியதோடு ஆசிரியர் மிகவும் நுட்பமாகவும் தெளிவாகவும் ஆராய்ந்து சிவனைப் பற்றிய தத்துவக் கோட்பாடுகளை விளக்கியிருப்பது இங்கே பெரிதும் பாராட்டத்தக்கது. இவற்றோடு இன்னும் ஒரு படி மேலே சென்று சிவன் என்ற ஒரு கருத்து எப்படி வளர்ச்சி பெற்றது என்பதைப் பற்றியும் ஆசிரியர் ஆராய்ந்திருக்கிறார்.

பரந்துபட்ட இலக்கியப் பயிற்சியும் நுட்பமான ஆய்வுத் திறமும் தத்துவம், வரலாறு போன்ற பிறதுறை அறிவும் இல்லாதவர்கள் இத்தகைய ஆய்வில் ஈடுபடமுடியாது. இந்த ஆய்வுக்குரிய சிறப்புத் தகுதிகள் எல்லாம் வாய்க்கப் பெற்ற திருமதி இரேணுகா இந்த ஆய்வின் எல்லையைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் என்ற அளவில் சுருக்கிக்கொண்டு மிகச் சிறப்பாக ஆய்வை நிறைவேற்றி இருக்கிறார். இந்த ஆய்வு இத்தகைய ஆய்வுகளுக்கு ஒரு சிறந்த முன்னோடியாகவும் விளங்குகிறது என்பதை இங்கே மகிழ்ச்சியோடு குறிப்பிடவேண்டும். இத்தகைய ஆய்வுகளில் தொடர்ந்து ஈடுபட ஆசிரியருக்கு வாய்ப்புகள் அமையவேண்டும். ஆசிரியருடைய ஆய்வுப் பணிகள் இப்படி நூலாகத் தொடர்ந்து வெளிவரத் தக்க வகையில் தமிழகம் அவருக்கு ஊக்கம் அளிக்கவேண்டும் என்று எதிர்ப்பார்க்கிறோம்.

பொற்கோ

சென்னை,
20-11-1989.



ஆசிரியர் பி. ஏ. வில் இலக்கிய வரலாற்றில் இரண்டாம் பரிசு பெறுகிறார்.

# அணிந்துரை

நடன. காசிநாதன். எம். ஏ.,
இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை,
தமிழ்நாடு அரசு, சென்னை - 600028.

தமிழ் நாட்டில் சிறப்புடன் விளங்கிய தெய்வ வழிபாடு களில் சிவவழிபாடு குறிப்பிடத்தக்க வழிபாடாகும். இவ் வழிபாடு குறித்து தமிழ் நாட்டில் பல ஆய்வுகள் வெளி வந்தபோதிலும் இதைக் குறித்த முழுமையான ஆய்வாக இந் நூல் வெளிவந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் சிவன் என்ற சொல் காணப்படா விட்டாலும் அக்கடவுளின் பண்புநலன்களைக் குறிக்கும் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன; சிவனது செயல்கள் குறிப்புக்களாக பாடல்களிடையே தரப்பட்டுள்ளன என்று கூறிப் பலச் செய்திகளை ஆய்வடிப்படையில் இந் நூலில் ஆசிரியர் திரட்டித் தந்துள்ளார். பண்டைத் தமிழிலக்கியங் களின் பெருமையும் அந் நூல்களில் காணப்படும் செய்திக ளின் அருமையும் அண்மை காலத்தில் வெளிநாட்டவரால் அறிந்து பெரிதும் போற்றி ஆய்வுசெய்யப்பெற்று வரப்படு கின்றன. இவ்வேளையில் சிவனைப் பற்றிய பண்டைத் தமிழிலக்கியச் செய்திகளை அனைவருக்கும் பயன்படும் வகையில் நூலாசிரியர் திரட்டித் தந்துள்ளது பாராட்டத் தக்கது,

இந் நூலில் சங்க காலத்திற்கு முன்பு நிலவிய சிவவழி பாட்டினையும் ஆசிரியர் எடுத்துக் கூறியுள்ளார். சங்க காலத்திற்குப் பின்னர் தோன்றிய காப்பியங்களையும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் காணப்படும் குறிப்புக் களையும் எடுத்தாய்ந்துள்ளார். சிவனைப் பற்றிய கதை களையும் சிவனது தத்துவக்கோட்பாட்டையும் இந் நூல் எடுத்து விளக்குகின்றது.

சிவனது வடிவ வளர்ச்சியையும் உருவ அமைதியையும் சிற்பங்களோடு ஒப்பிட்டு ஆய்வுசெய்யும் ஆய்வாளர்களுக்கு இந் நூல் சிந்தனையைத் தூண்டும் நல்விருந்தாக அமையும் என்பதில் ஐயமில்லை. சிவனைப் பற்றிய செய்திகளைத் தமிழில் தரும் இந் நல்லாய்வைத் தமிழ்கூறும் நல்லுலகம் போற்றி வரவேற்கும் என எதிர்ப்பார்ப்போமாக!

நடன. காசிநாதன்



ஆசிரியர் தமிழ்க் கட்டுரைப் போட்டியில் முதற் பரிசு பெறுகிறார்.

# நூல் நலம்

**க. சண்முகசுந்தரம்,**
**97, பஜனை கோயில் தெரு,**
**சூளைமேடு, சென்னை-94**

இந் நூல் ஆய்வாளர்க்குப் பெரு நலம் பயக்க வல்லது. ஆசிரியர் இதுவரைச் சிவனைப் பற்றி யாரும் சொல்லாத செய்திகளைச் சொல்லியிருப்பது போற்றத்தக்கது. அவர் முதல் இயலில் சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட இலச்சினைகளில் ஒன்றில் உள்ள கொம்பு கொண்ட உருவமும் விலங்குகளும் புராணக் காலத்துச் சிவனையும் மகிடாசூரனைக் கொன்ற சக்தியையும் நினைவுபடுத்துவதாகக் கூறுவது ஆய்வாளர் நினைவில் இருக்கவேண்டியது.

இரண்டாவது இயலில் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் காட்டும் சிவனுடைய திருக்கோலம், குணங்கள், செயல்கள் இன்னும் பலவற்றை அட்டவணைப்படுத்திக் காட்டியிருப்பது ஆசிரியரின் உழைப்பைப் புலப்படுத்துகிறது. இது கல்வி வல்லார்க்குப் பயன்தர வல்லது.

மூன்றாவது இயலில் ஆசிரியர் சிவனைப்பற்றி இதிகாச புராணங்களில் கூறியுள்ள கதைகளுக் கேற்பப் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் கதைக் குறிப்புகள் உள்ளவைகளை எடுத்துக்காட்டுவது புதுமையானது. சில கதைகளுக்கு மூலமாக வேதங்களில் உள்ள கதைகளை எடுத்துக் காட்டியிருப்பது சமயப் பற்றுள்ளவர் அறியவேண்டிய செய்தியாகும், ஒரே கதையைப் பலவிதமாகப் படைப்பாளிகள் தத்தம் மனம்போலக் கூறியுள்ளதை ஆசிரியர் எடுத்துக்கூறுகிறார்.

நான்காவது இயலில் சிவன் பற்றிய தத்துவக் கோட்பாடுகள் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவைகள் முடிந்தமுடிவான கருத்துகள் அன்று.

நீலகண்டம் இறைவனுடைய அருளாற்றலை விளக்குகிறது என்பதற்கு ஆதாரமாகத் திருவாசகம், திருச்சாயல் 11-ம் பாடலை ஆசிரியர் எடுத்துக்கூறுகிறார்.

*அண்டமொ டெண்டிசை தாங்கும் அதோமுகங்*
*கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை*
*உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்*
*வெண்டலை மாலை விரிசடை யோர்க்கே.*

—திருமூலர் திருமந்திரம் 521.

அதோமுகச் சிவன் உண்டது நஞ்சு அல்ல. அவன் ஆலகால விஷம் உயிரினங்களை அழிக்காதபடி அகிலம் எல்லாந் திரிய விழுங்கி அடக்கிக்கொண்டதால் அவனுடைய கண்டம் யானை உண்ட விளங்கனி போலக் கருத்துவிட்டதாகவும் திருமூலர் கூறினார் (திருமந்திரம் 2593).

ஆசிரியர் சிவனுடைய மூன்று கண்கள் இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்பனவற்றைக் குறிப்பதாகக் கூறப்படுவதை எடுத்துரைக்கிறார்.

*மலைமடந்தை விளையாடி வளையாடு கரத்தால்*
*மகிழ்த்தவள் கண் புதைத்தலுமே வல்லிருளாய் எல்லா*
*உலகுடன்றான் மூடவிருள் ஓடும்வகை நெற்றி*
*ஒற்றைக்கண் படைத்துகந்த உத்தமனூர் வினவில்...*

—சுந்தரர், திருக்கலயநல்லூர், 4.

உமை விளையாட்டாகத் தன் கண்ணை மூடியபோது ஏற்பட்ட இருளைப் போக்க சிவன் நெற்றிக் கண்ணைத் திறந்தான். இப் புராணக் கதையை அப்பரும் கூறினார் (பொது, தசபுராணம், பழம்பஞ்சுரம் 8).

*இழையார் அரவணி ஏகம்பர் நெற்றி விழியின் வந்த*
*பிழையா அருள்நம் பிராட்டியது....*

என்றார் பட்டினத்தார் (திருஏகம்பமுடையார் திருவந்தாதி 84). உமை தன் நாயகன் கண்களை மூடிய விளையாட்டு வினையாக முடிந்து அவள் காஞ்சியில் தவமிருந்து பதியைச் சேர்ந்தாள். இப்படிச் சமயக் குரவர்கள் சிவனைப் பற்றிக் கூறும் செய்திகளை ஆய்வுசெய்து டாக்டர் பட்டம் பெற ஆசிரியர்க்கு இறைவன் அருள்புரிவாராக.

க. சண்முகசுந்தரம்.

# மதிப்புரை

டாக்டர் சரஸ்வதி எலிசபெத் தாமஸ் L,G.C.G.
நிறுவனர்-செயலாளர்-தாளாளர்,
தாமஸ் கல்வி அறக் கட்டளை.
செம்பியம், சென்னை-600011.

''இறைவன் எனும் எழுத்தறிவித்தவன்''

பேரறிஞர் எமர்சன் கடவுள் கொள்கை விமர்சனம் செய்தபோது,

''THE GOD IS THE NOBLEST CREATION OF THE MANKIND''

என்று எழுதினார். மனித வளர்ச்சிக்காலங்களில், அவனின் படைப்புகளில் பெரிதும் உயர்வான படைப்பே 'இறைவன்' என்பதுதான் என்பார். தூய சிந்தனை வயப்பட்டால் இதன் தெளிவு புரியும். இங்கே எங்கள் செவாலியர் டி. தாமஸ் எலிசபெத் மகளிர் கல்லூரியின் தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியை திருமதி இரேணுகா கிருட்டிண மூர்த்தி தனது தெளிவுமிக்க சான்றுடை எண்ணப்போக்கால் இந்த ஆய்வு நூலை மிக அழகாகச் செய்துள்ளார். அவரின் அன்புக் கணவர் புலவர் பா. கிருட்டிணமூர்த்தியும் நம் செவாலியர். டி. தாமஸ் எலிசவெத் மேனிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியர் என்பதும், அவரின் அழகிய தமிழ் நடையில் ''தாமஸ் பிள்ளைத் தமிழ்'' கவிதைநூல் நமது நிறுவனர் அய்யா அவர்களின் நினைவைப் போற்றி வெளி வந்துள்ளது என்பதுவும் இங்கே என் நினைவுதனில் உயர்வாய் எண்ணப்பெறுகிறது. இந்த எழுத்தாளர் குடும்பம் எல்லா வளமும் பெற்று, இன்னும் பல நூல்கள் எழுதி வாழ வாழ்த்துகிறேன்.

திருமதி இரேணுகா தனது ஆய்வில் சிவலிங்க வடிவத்திற்கு ''தீ வடிவம்'' என்பது ஆதிக்கருத்தாகச் சொல்லும் அறிஞர்களின் அணியில் முடிவுசெய்வது சிறந்த ஒன்று உருத்திரன் மரபியலும் இங்கே எண்ணி அறிய வேண்டிய செய்தி. இளங்கோ அடிகளார் ''ஞாயிறு போற்றுதும்'

என்றும் ''திங்களைப் போற்றுதும்'' என்றும் ஒளிவடிவான உலக நாயகத்துவம் செய்ததாக சான்று கூறிச் சிலப்பதி காரத்தில் சிவவழிபாடு உண்டு என்பதற்கான '' பிறவா யாக்கை பெரியோன் கோயிலும்'' - ''இறையோன் கோயி லும்'' எனும் வரிகளில் ஆய்வை நிறைப்பது நயத்தக்கது.

சிவனாரின் மகன் அகத்தியன் என்று சங்க இலக்கியச் செய்தி ஒன்று உண்டு என்கிறார். பாரதமும் இராமாயண மும் 'சிவதனுசு' எனும் முதுகெலும்பால் நிமிர்ந்த கதை களையும் ஒப்பாய்கின்றார்.

ஆரியர்கள் ஹரப்பாவை அழித்தனர், சிவனை வழிப் பட்ட சிஸ்னதேவ இனத்தாரின் பகைவர் வேதம் ஓதிய ஆரியர் என்றும் சான்று காட்டுகிறார். சிவ வழிபாட்டில் வந்த திசை காட்டும் இவரின் ஆய்வு முயற்சியால் பலப் புராண முடிச்சுகள் நமக்குப் புரியத்துவங்குகின்றன.

தென்னாடுடைய சிவனே போற்றி என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி என்பதுவும் அதில் ஒன்று.

பேராசிரியை திருமதி இரேணுகா அவர்கள் தமது அடுத்து வருகின்ற டாக்டர் பட்ட ஆய்விற்கும் 'சிவனி லேயே' மேலும் சிறக்க வேண்டும். அதனில், சிவவழிபாட் டில் இந்திய - தமிழ்நாட்டு கால வரையறைத் தெளிவைச் சொல்லவேண்டும், தனது பண்டைத் தமிழ் கருத்துகளோடு அண்ட - பிண்டம் பொருள்நிறை முழுச் சிவனையும் நாம் அறிந்து வழிபட்டு மகிழ நூல் தந்து சிறப்புறும்படி வாழ்த்துகிறேன்,

சரஸ்வதி எலிசபெத் தாமஸ்.

# நன்றியுரை

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவன் என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு வாய்ப்பினைத் தந்ததோடு இந்த ஆய்வேட்டினை நூல் வடிவில் வெளியிடுவதற்கு அனுமதி தந்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு முதலில் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். University of Madra letter No.E/10/M.Phil/Jan 88 dated 13-4-89.

நான் நன்றாக ஆய்வுசெய்வதற்குத் தூண்டுகோலாக விருந்ததோடு நூல் நலம் எழுதித் தம் அகஸ்தியர் அச்சகத்தில் இந்த நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த என் தந்தையார்க்கு நன்றிக் கடமை பூண்டொழுகுவேன்.

எனது ஆய்வுக்குச் சிறந்த வழிகாட்டியாக விருந்து, ஆய்வு செம்மையாக அமைய நன்முறையில் நெறிப்படுத்தி வழிநடத்திய என் நெறியாளரும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் இலக்கியத்துறைத் தலைவருமாக விருந்த அமரர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களைப் போற்றுகிறேன்.

நான் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் இலக்கியத் துறையில் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காகப் பயிலும் போது ஆய்விற்குரிய நெறிமுறைகளையும் கருத்துகளையும் எடுத்துக்கூறி, என்னை நல்ல முறையில் ஆற்றுப்படுத்தியதுடன் இந் நூற்குச் சிறப்புரை வழங்கிய பேராசிரியர் டாக்டர் பொற்கோ, தலைவர், தமிழ் இலக்கியத்துறை, சென்னைப் பல்கலைக் கழகம், அவர்களுக்கு எஞ்ஞான்றும் கடப்பாடுடையேன்.

எனக்கு ஆய்விற்கான நூல்களைத் தந்து அறிவுரை வழங்கி யுதவிய பேராசிரியர் டாக்டர் கு. மோகனராசு, சென்னைப் பல்கலைக் கழகம், அவர்களுக்கு எனது நன்றி உரித்தாகும்.

ஆய்வுக்குத் தொடர்பான வடமொழி நூலினைத் தந்து உதவிய பேராசிரியர் டாக்டர் என். வீழிநாதன், தலைவர், வடமொழித்துறை, சென்னைப் பல்பலைக் கழகம், அவர்க்கும், அந் நூல்களிலுள்ள கருத்துகளை எடுத்துக் கூறிய டாக்டர் பி. கே. கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

ஆய்விற்கான பல்வேறு கருத்துகளை நேரில் கூறியுதவிய தத்துவப் பேராசிரியர் டாக்டர் வை. இரத்தின சபாபதி, சென்னைப் பல்கலைக் கழகம், அவர்க்கும் பேராசிரியர் சி. ஜகந்நாதாச்சார்யர் அவர்க்கும், பல அரிய நூல்களைத் தந்து உதவிய திரு. வி. ரங்கராஜன் அவர்க்கும், ஆய்விற்கான புகைப்படங்களைத் தந்துதவிய திரு. தி. சேஷசாயி அவர்க்கும் எனது நன்றி உரியதாகும்.

ஆய்விற்குத் தேவையான துணை நூல்களைத் தந்து உதவிய மறைமலையடிகள் நூலகத்தார்க்கும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நூலகத்தார்க்கும் எனது நன்றி.

இந் நூலின் அட்டைப் படத்திற்குத் திருப்புராந்தகன் புகைப்படமும் அணிந்துரையும் தந்தருளிய திரு. நடன. காசிநாதன், இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை, தமிழ்நாடு அரசு, சென்னை-28, அவர்களுக்கு மகிழ்ச்சியுடன் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கல்வித் தொண்டொன்றே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு கடமையாற்றி வரும் திருமதி சரஸ்வதி எலிசபெத் தாமஸ் அம்மையார் அவர்கள் தம் கல்லூரியில் எனக்குப் பணியளித்துப் புரந்ததோடு இந் நூலுக்கு அன்பு கனிந்து மதிப்புரை வழங்கியதற்கு அவர்க்கு என் வாழ்நாள் முழுதும் நன்றிக்கடப்பாடுடையேன்.

இந் நூல் வெளியீட்டுக்குப் பல்லாற்றானும் துணை புரிந்த என் வாழ்க்கைத் துணைவர் திரு. பா. கிருட்டிண மூர்த்தி எம். ஏ., எம். பில்., எம். எட்., தமிழ்த்துறைத் தலைவர், செவாலியர் டி. தாமஸ் எலிசபெத்மெட்ரிகுலேசன் ஆடவர் மேனிலைப் பள்ளி, அவர்களுக்கு என் அன்பு நிறைந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ச. இரேணுகா.

## குறுக்க விளக்கம்

அகம். — அகநானூறு

அகம். க. வா. — அகநானூறு, கடவுள் வாழ்த்து

அதர். — அதர்வண வேதம்

இரு. — இருக்கு வேதம்

இன்னா. க. வா. — இன்னா நாற்பது கடவுள் வாழ்த்து

இனிய. க. வா. — இனியவை நாற்பது கடவுள் வாழ்த்து

உரை. — உரையாசிரியர்

ஐங். — ஐங்குறுநூறு

ஐங். க. வா. — ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து

கலி. — கலித்தொகை

கலி. க. வா.— கலித்தொகை கடவுள் வாழ்த்து

கழகம். — சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

குறள். — திருக்குறள்

குறு. — குறுந்தொகை

சிலம்பு. — சிலப்பதிகாரம்

சிறு. — சிறுபாணாற்றுப்படை

சீவக. முக்தி. — சீவக சிந்தாமணி, முக்தி இலம்பகம்

தக்க. — தக்கயாகப் பரணி

தொ - ர். — தொகுப்பாசிரியர்

நாலடி. — நாலடியார்

நூ. பெ. — நூற் பெயர்

ப. — பக்கம்

ப - ள். — பக்கங்கள்

பதி. — பதிப்பாசிரியர்

பதிற்று. — பதிற்றுப்பத்து

பரி. — பரிபாடல்

பழ. — பழமொழி

பா. எண். — பாடல் எண்

பா / கா. எ. வ. — பாடல் / காதை எண்ணும் வரியும்

புறம். — புறநானூறு

புறம். க. வா. — புறநானூறு கடவுள் வாழ்த்து

பெரு. — பெரும்பாணாற்றுப்படை

மணி. — மணிமேகலை

மது. — மதுரைக்காஞ்சி

மலை. — மலைபடுகடாம்

முருகு. — திருமுருகாற்றுப்படை

மொழி. — மொழிப்பெயர்ப்பாசிரியர்

Ed. — Editor

P. — Page

T n. — Translation

## பொருளடக்கம்

# முன்னுரை

மனிதன் இயற்கையின் இன்றியமையாமையை உணர்ந்து அதற்கு முதன்மை கொடுத்து வழிபடத் தொடங்கினான். நெருப்பின் பயனை அறிந்த மனிதன் நாளடைவில் நெருப்பை வழிபட்டமை இதற்கு ஒரு சிறந்த சான்று. இத்தகைய மனித நிலையை உணருமிடத்து, 'கடவுள்' என்னும் சிந்தனை ஒரு குறிப்பிட்ட சமுதாய வளர்ச்சிக் கட்டத்தில் மனிதனால் படைக்கப்பட்ட கருத்து என்பது தெளிவு. வழிபாடுகளின் வளர்ச்சிநிலை காரணமாக நாளடைவில் பெருந் தெய்வங்கள் தோன்றின.

தொன்மைச் சமுதாய நிலையில் எழுந்த கடவுள் சிந்தனை நாளடைவில் 'சமயம்' என்ற நிலைக்கு வளர்ந்தது. மனித குழுக்களுக்கு ஏற்பச் சமயம் பல்வேறாகப் பெருகின. இவ்வாறு வளர்ந்த சமயங்களுள் சைவ சமயமும் ஒன்று. இச்சமயத்தின் முதன்மைக் கடவுள் 'சிவன்'. இக்கடவுள் கால நிலைகளுக்கும் சமுதாய வளர்ச்சிக்கும் ஏற்ப பல்வேறு வடிவங்களை உடையதாக விளங்குகிறது. சிவன் பற்றிய கருத்துகளும், கதைகளும், தத்துவக்கோட்பாடுகளும் கூட, காலத்திற்கு ஏற்ப உருவாக்கப்பட்டிருக்கின்றன. வடமொழி, தமிழ் முதலான மொழிகளிலுள்ள இலக்கியங்களிலும் சிவன் பற்றிய கருத்துகள் காலத்திற்கு ஏற்ப உருப்பெற்றிருக்கின்றன.

சிவன் பற்றிய ஆய்வினை மேற்கொண்டவர்கள் சில குறிப்பிட்ட நோக்குகளில் ஆய்ந்துள்ளனர். இத்தெய்வமே முதல் தெய்வம் என்றும், உலகம் முழுதும் இத்தெய்வ வழிபாடு இருந்தது என்றும், ஆரியருக்கு முற்பட்ட திராவிட நாகரிகத்தினர் இத்தெய்வத்தை வணங்கினர் என்றும், வேதக் கடவுளான உருத்திரன் சிவனே என்றும், வேதக் கடவுள் உருத்திரன் சிவன் அல்லன் வேறு தெய்வம்

என்றும், சிவனுக்குரிய பண்புகள் உலகிலுள்ள ஏனைய தெய்வங்களுடன் ஒத்துள்ளன என்றும், இவை போன்ற சில குறிப்பிட்ட நோக்குகளில் ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. சமுதாயக் கண்கொண்டு சிவனைப் பற்றித் தனித்து எவரும் ஆராயவில்லை என்பதால் 'பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவன்' என்னும் தலைப்பில் பண்டைத் தமிழிலக்கியங்களில் காணப்படும் 'சிவன்' பற்றிய செய்திகளைத் தொகுத்து அவற்றைச் சமுதாயத்திலுள்ள பண்பாட்டுக் கூறுகளுடன் ஒப்பிட்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பெறுகிறது.

## ஆய்வுத் தலைப்பு - விளக்கம்

'பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவன்' என்னும் தலைப்பில் பண்டைத் தமிழிலக்கியம் என்று கருதப்படுவதன் காலம், அவ் விலக்கியங்களில் 'சிவன்' என்ற சொல் வழக்கு ஆகியவற்றை விளக்கமாகக் காணலாம்.

### பண்டைத் தமிழிலக்கியம்

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர் தொல் பழங் காலம், சங்ககாலம் என்னும் பழங்காலம், இடைக்காலம், அண்மைக்காலம் என்று நான்கு வகையாகத் தமிழ்நாட்டின் வரலாற்றுக் காலங்களைப் பிரித்துக் கூறுவர்.[1] எனவே, இவ் வாய்வில் இடம்பெற்றுள்ள பண்டைக்காலம் என்னும் சொல் சங்ககாலம் என்பதை உணர்த்தும். அக்காலத்தில் தோன்றிய தமிழிலக்கியமே பண்டைத் தமிழிலக்கியம் ஆகும்.

### பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவன் என்னும் சொல் வழக்கு

''சிவன்'' என்னும் சொல் வழக்கு பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படவில்லை. அருகக் கடவுளைப் போற்றும் திருநாமங்களில் ஒன்றாக 'சிவகதி நாயகன்' (சிலம்பு 10 : 180) என்று இளங்கோவடிகள் கூறுகிறார். சிவனுக்கு வழங்கும் திருநாமங்களை அருகக் கடவுளுக்கும் வழங்குதல் மரபு.

திருத்தக்க தேவரும், 'நிருமலன் பாதஞ் சேரின் சிவகதி யடையலாமே' (சீவக. முக்தி . 507) என்றார். எனவே, சிவம். சிவன், சிவகதி என்னும் சொற்கள் தொன்று தொட்டே தமிழகத்தில் வழங்கி வருவதை அறியலாம். அவை சங்க காலத்திலேயே சிவனுக்கு வழங்கியிருக்கலாம். ஆனால் புலவர்கள் சிவனுடைய உறுப்பு நலன்களையும் ஆற்றலையும் மனங்கொண்டு பாடியதால் அவர்கள் முக்கண்ணன், கறைமிடற் றண்ணல் என்று சிவனைக் கூறினர்.

## சிவன் என்னும் சொல்

சிவன் என்னும் பெயர் எக்காலத்தில் எம்மொழியில் முதலில் தோன்றிற்று என்பதற்கான சான்றுகள் தெளிவாகக் கிடைக்கவில்லை.

சிவன் என்னும் சொல் தமிழ்ச்சொல் என்று டாக்டர் கிரையர்சன் கூறுகின்றார்.[2]

வேத இந்தியா (Vedic India) என்னும் நூலில் ரகோசின் என்பவர் சிவவழிபாடு ஆரியர் இங்கு வந்தபோது இந் நாட்டில் வாழ்ந்துவந்த ஆதிமக்களில் ஒரு வகையினர் வழிபட்டுவந்ததாகக் கூறுகிறார்.[3]

''சிவ என்ற சொல்லிலுள்ள சகர ஓசை ஆதியில் ஆரிய மொழியில் இல்லாத கபால ஒலி (Cerebral) எனப்படும். அத்தகைய ஒலிகள் திராவிடச் சார்பால் ஆரிய மொழியிற் புகுந்தன'' என்று ஆசிரியர் ராப்சன் கூறுகின்றார்.[4]

ஆசிரியர் 'ஹிம்ஸ்' என்ற சொல்லிலிருந்து 'ஸிம்ஹ' என்ற சொல் வருவது போல் 'வசி' என்ற சொல்லிலிருந்து 'சிவ' என்ற சொல் வந்தது என்றும், எங்கும் உள்ள கடவுளே சிவம் ஆயிற்று என்றும் கூறுவதுண்டு, ஆனால் சிவன் என்னும் சொல் வடமொழி நூல்களில் கூறப்படுவதற்கு முன்பே சிந்துவெளி நாகரிகத்தில் சிவலிங்கங்கள்

காணப்படுவதால் அக்காலத்து மக்கள் வழங்கிய மொழியின் தொடர்புடையதாகச் சிவன் என்னும் சொல் இருக்கலாம் என்று சர் ஜான் மார்ஷல் கூறுகிறார்.[5]

சிவன் என்பது சிவப்பு என்பதிலிருந்து பிறந்தது என்றும், சிவன் என்னும் சொல் மங்களம், சுகம், பாக்கியம், பேரானந்தம் என்னும் தத்துவப் பொருள் கூறுவது என்றும், சிவப்பு நிறமுடையவன் சிவன் என்றும் பலவாறு கூறப்படும். 'செம்மேனி யெம்மான்' என்பது வழக்கு.

## ஆய்வின் எல்லை

சங்க கால இலக்கியம் என்பது தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்றும், சங்கம் மருவிய காலத்து இலக்கியம் என்பது பதினெண்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை என்றும் கூறப்படும். இங்குச் சங்ககால, சங்கம் மருவிய கால இலக்கியங்களைப் பண்டைத் தமிழிலக்கியங்களாகக் கொண்டு ஆய்வு நிகழ்த்தப் பெறுகிறது. எனவே தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் தமிழ் இலக்கியங்களில் கூறப்படும் சிவன் பற்றிய செய்திகள் பண்டைத் தமிழிலக்கியத்தில் சிவன் பற்றிய செய்திகளாகும்.

பக்தி இலக்கியங்கள், புராண இதிகாசங்கள், வடமொழி வேத நூல்கள், திறனாய்வு நூல்கள் ஆகியன இவ்வாய்விற்குப் பயன்படும் துணை நூல்களாக அமைகின்றன.

## ஆய்வின் தன்மை

'பண்டைத் தமிழிலக்கியத்தில் சிவன்' என்னும் இவ்வாய்வில் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்ற சிவன் பற்றிய செய்திகளைத் தொகுத்து அவை சமுதாய நோக்குடன் ஆராயப்படுகின்றன. அதாவது சிவன் பற்றிய செய்திகள் அனைத்தும் மனிதனின் ஆரம்ப காலம் முதல் தொன்று தொட்டு எவ்வாறு வளர்ந்து வந்துள்ளன என்பது ஆராயப்படுகின்றது.

இவ்வாய்வு சிவன் பற்றிய கதைகள், சிவன் பற்றிய தத்துவக் கோட்பாடுகள், சிவன் - ஒரு கருத்து வளர்ச்சி என்னும் போக்குகளில் அமைவதால் சில இடங்களில் செய்திகள் திரும்பத் திரும்பச் சொல்லப்படுகின்றன. இந்த ஆய்வில் இத்தகைய நிலை தேவையான ஒன்றாக அமைந்துவிட்டது.

குறிப்புகள் இரண்டு வகைகளாகக் குறிக்கப்பெற்றுள் ளன. முதல் வகையில் பண்டைத் தமிழிலக்கியச் சான்று கள், வேதங்கள் முதலியவைகளை அடைப்புக் குறியுள் காணலாம். இரண்டாவது வகையில் ஏனைய இலக்கியச் சான்றுகள் எண்ணிடப்பட்டு அமைந்துள்ளன.

## ஆய்வமைப்பு

முன்னுரை, ஆய்வு முடிவுகள் நீங்கலாக,

1. சங்க காலத்திற்கு முற்பட்ட சிவன்
2. பண்டைத் தமிழிலக்கியங்கள் காட்டும் சிவன்
3. சிவன் பற்றிய கதைகள்
4. சிவன் பற்றிய தத்துவக் கோட்பாடுகள்
5. சிவன் - ஒரு கருத்து வளர்ச்சி

என ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

பண்டைத் தமிழிலக்கியக் காலத்திற்கு முன்பு இருந்த சிவன் பற்றிய வழிபாட்டு நிலைகளைத் தெரிந்துகொள்ளு தல் தேவை என்பதால், 'சங்க காலத்திற்கு முற்பட்ட சிவன்' என்ற முதல் இயல் அமைக்கப்பட்டது. இவ் வியலில் சிந்து சமவெளி நாகரிகக் காலம், வேதக் காலம், புராண இதிகாசக் காலம் என்ற மூன்று கால நிலைகளை அடிப் படையாகக் கொண்டு சிவன் பற்றிய செய்திகள் விளக் கப்படுகின்றன.

பண்டைத் தமிழிலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் சிவனைப் பற்றிய செய்திகளை அறிந்துகொள்ளுதல்

வேண்டும் என்பதால் ''பண்டைத் தமிழிலக்கியங்கள் காட்டும் சிவன்' என்ற இரண்டாம் இயல் எழுதப் பட்டது. இதில் பண்டைத் தமிழிலக்கியங்கள் காட்டும் சிவன் பற்றிய செய்திகள் ஆய்வு நோக்கில் தொகுத்துக் கூறப்படுகின்றன.

பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவன் தொடர்பான கதைக் குறிப்புகள் காணப்படுகின்றன. இக் குறிப்புகள் கதைகளாக வடமொழி வேதம், இதிகாசம், புராணங் களில் இடம் பெற்றுள்ளன. அதனால் பண்டைத் தமிழி லக்கியக் கதைக் குறிப்புகளையும், வடமொழி வேத, இதிகாச, புராணங்களின் கதைகளையும் ஒப்பு நோக்கி ஆராய்தல் உண்மை நிலையை அறிய இன்றியமையாத தாகும் என்பதால் 'சிவன் பற்றிய கதைகள்' என்ற மூன்றாம் இயல் படைக்கப்பட்டுள்ளது. இதில் வடமொழி வேதங்கள், இதிகாசப் புராணங்கள் கூறும் சிவனுடைய கதைகளை அடிப்படையாகக் கொண்டு, பண்டைத் தமிழிலக்கியங்களில் காணப்படும் 'சிவன்' பற்றிய கதைக் குறிப்புகள் ஆராயப்பட்டுள்ளன.

பண்டைத் தமிழிலக்கியங்களில் கூறப்பட்டுள்ள சிவன் பற்றிய செய்திகளுக்குச் சைவ சமய நூல்களும் சிவன் பற்றி ஆய்வாளர்கள் கூறும் தத்துவங்களும் விளக்கப்பட வேண்டும் என்பதால், 'சிவன் பற்றிய தத்துவக் கோட் பாடுகள்' என்ற நான்காம் இயல் அமைக்கப்பட்டது. இதில் கருத்துகள் ஒப்புநோக்கப்படுகின்றன.

பண்டைத் தமிழிலக்கியங்கள் சிவன் பற்றிக் கூறும் வடிவங்களையும் பொருள்களையும் சமுதாயத்தை அடிப் படையாகக் கொண்டு விளக்கப்படுதல் இன்றியமை யாமை என்பதால் 'சிவன் - ஒரு கருத்து வளர்ச்சி' என்ற ஐந்தாம் இயல் அமைக்கப்பட்டது. இவ் வியலில் சிவன் பற்றிய வடிவ மாற்றங்கள் கருத்து மாற்றங்கள் ஆகியன சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளுடன் விளக்கப்படுகின்றன.

'பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவன்'' என்ற ஆய்வின் மூலம் அறிந்த முடிவான கருத்துகள் ஆய்வு முடிபுகளாகக் கூறப்பெற்றுள்ளன.

இந்த ஆய்வை மேலும் விரிவாக நிகழ்த்தலாம். எனினும் ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வின் அளவும் காலமும் கருதி மேற்கண்ட திட்டத்தில் இந்த ஆய்வு நிறைவு செய்யப்பட்டுள்ளது.

## குறிப்புகள்

1. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர், தமிழ்நாட்டு வரலாறு (தொல் பழங்காலம்), ப. 27.
2. Dr. Grierson says, "The term 'Siva' is Tamil in its origin; the Conception of Rudra Siva has a tinge of Dravidian influence on the Aryans not only Philosophically but on their whole mode of thought".

   மேற்கோள் காண்க: திரு கா. சுப்பிரமணிய பிள்ளை, தமிழர் சமயம், ப. 44.
3. மேற்படி ப. 44.
4. மேற்படி ப. 44.
5. மேற் கோள்காண்க : ம. பாலசுப்ரமணிய முதலியார், 'சிவன்', கலைக் களஞ்சியம் - தொகுதி 4, ப. 711.

## அம்மையப்பன்



பிரகதீஸ்வரர் கோயில்
கங்கைகொண்ட சோழபுரம்

நீல மேனி வாலிழை பாகத்
தொருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே.

— ஐங். க. வா.

# 1. சங்க காலத்திற்கு முற்பட்ட சிவன்

1. சங்க காலத்திற்கு முற்பட்ட காலத்துச் சிவன் தொடர்பான செய்திகளை அறிந்துகொள்ள வடமொழி நூல்களும் அகழ்வாராய்ச்சிப் பொருள்களும் பெரிதும் உதவுகின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு சங்க காலத்திற்கு முற்பட்ட காலத்தைச் சிந்து சமவெளி நாகரிகக் காலம், வேதக்காலம், இதிகாசப் புராணக் காலம் எனப் பகுக்கலாம். சிந்து சமவெளி நாகரிகக் காலத்தை ஹரப்பா பண்பாட்டுக் காலம் என்று தொல்பொருள் ஆய்வாளர் அழைப்பர்.[1] இம் மூவகைப் பகுப்பின்வழி சங்க காலத்திற்கு முற்பட்ட காலத்துச் சிவன் தொடர்பான செய்திகளை இவ்வியலின்கண் ஆராயப்படுகிறது.

## 1. 1. சிந்துசமவெளி நாகரிக காலத்துச் சிவன் தொடர்பான செய்திகள்

தொல்பொருள் விவரங்கள் ஹரப்பா நாகரிக மக்களின் மதக் கண்ணோட்டங்கள் பற்றி அறிய ஓரளவு உதவுகின்றன. அரண்களிலும் நகரங்களின் உறைவிடப் பகுதிகளிலும் ஒருவகைக் கட்டிடங்கள் காணப்பட்டன. இவை கோயில்கள் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். சடங்கு முறைக் குளங்களும், மொகஞ்சதாரோவிலும் ஹரப்பாவிலும் கிடைத்த கற்சிற்பங்களும் இந்தக் கோயில்களுடன் தொடர்புள்ளவை என்றும் தெரியவருகிறது பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் கருத்துப் படி கோயில்களும் சில சிற்பங்களும் ஆண்கடவுளுக்கு உரியவை. இந்தக் கடவுள் பிற்காலத்தில் வழிபடுகடவுளான சிவனின் ஆதி வடிவம் என்ற கருத்தும் நிலவுகிறது.[2] இவற்றால் சிந்துசமவெளி காலத்து மக்கள் சிறந்த பண்பாட்டுடன் வாழ்ந்திருந்தனர் என்பதை அறியலாம்.

### 1.1.1 சிந்து சமவெளி நாகரிகத்தின் இருப்பிடம்

தொல்பொருள் ஆய்வு மூலம் பஞ்சாபில் இரவி நதியின் இடக்கரையில் ஹரப்பா நகரமும் சிந்து நதியின் வடகரையில் அதன் முகத்துவாரத்திலிருந்து சுமார் 250 கற்கள் தொலைவில் மொகஞ்சதாரோ நகரமும் கண்டு பிடிக்கப்பட்டன. இந் நகரங்களுடன் மூன்று சிறு பட்டணங்களும், சட்டிலஜ் நதியின் மேல்பாகத்திலுள்ள உருபரியிலிருந்து காதியாவாரிலுள்ள இரங்கபுரம்வரை பல ஊர்கள் புதைந்திருப்பதையும் ஆய்வாளர்களால் அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்டன. சிந்து சமவெளி நாகரிகம் சுமார் 950 மைல் தூரம் வடக்குத் தெற்காகப் பரவியிருந்தது.[3]

சிந்து சமவெளியில் புதைந்திருக்கும் ஊர்கள் கி. மு. மூன்றாம் ஆயிரம் ஆண்டின் முற்பாதியில் தோன்றி இரண்டாம் ஆயிரம் ஆண்டிலும் தொடர்ந்திருந்தன என்றும், ஹரப்பா நாகரிகம் எகிப்து, மெசப்பொத் தோமியா நாகரிகங்களைப் போலவே மதச் சார்புடைய தாய் இருந்ததாகத் தோன்றுகிறது என்றும், சிந்து சம வெளியில் கண்டெடுத்த இலச்சினைகள் பெரும்பாலும் சமயச் சார்பான சின்னங்களைக் கொண்டவை என்றும் ஏ. எல். பாசம் கூறுகிறார்.[4]

### 1. 1. 2. கொம்பு கொண்ட உருவங்களின் வழிபாடு

சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட மூன்று இலச்சினைகளில் கொம்புடைய கடவுளின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. மொகஞ்சதாரோவில் கிடைத்த ஒரு இலச்சினையில் பொறிக்கப்பட்ட உருவம் சிவனு டைய பசுபதி வடிவம் என சர் ஜான் மார்ஷல் ஆராய்ந்து கூறுகிறார்.[5] இவ் விலச்சினையில் பொறிக்கப்பட்டுள்ள உருவம் ஓர் பீடத்தின் மேல் அமர்ந்துகொண்டு கால் களை மடக்கிக் குதிகால்கள் இரண்டும் ஒன்றையொன்று தொடும் வண்ணம் யோகம் செய்வது போல் இருக்கிறது. இவ்வுருவம் ஆடையின்றி கழுத்தில் ஆரமும் கையில் கடகமும் அணிந்திருக்கிறது. தலையில் இரு கொம்புகள்



கொம்பு கடவுள்

உள்ளன. இவைகளுக்கிடையில் ஏதோ ஒன்று செடி போன்று காணப்படுகிறது. இவ் வுருவத்தின் வலப்புறத்தில் புலியும் யானையும், இடப்புறத்தில் காண்டாமிருகமும் எருமையும் இருக்கின்றன. பீடத்தின் கீழ் இரண்டு மான்கள் நிற்கின்றன. இவ் வுருவத்தின் ஆண்குறி நிமிர்ந்திருக்கிறது.[6] ஆனால் இது இடுப்பில் கட்டிய நாடாவின் முனையாக விருக்கும் என்று ஜான் மார்ஷல் கருதுகிறார்.[7] இவ்வுருவத்தின் முகம் கடும் புலியின் தோற்றம் போல் காணப்படுவதால் அது மனித முகம் இல்லை என்ற கருத்தும் நிலவுகிறது. தலையின் வலப்பக்கமும் இடப்பக்கமும் சிறு புடைப்புகள் காணப்படுகின்றன. இவ்விரு புடைப்புகளையும் இருவேறு முகங்களெனக் கொண்டு இவ்வுருவம் முந்து சிவன் என்று சர் ஜான் மார்ஷல் துணிந்து கூறுகிறார்.[8] இவ்வுருவம் மூன்று முகங்களை உடையதாக இருப்பதாலும் யோக நிலையில் அமர்ந்திருப்பதாலும் இதைச் சுற்றி விலங்குகள் இருப்பதாலும் இது சிவனுடைய உருவமே என்றும்,

உருவத்தின் மூன்று முகங்கள் சிவ, விஷ்ணு, பிரம்மா ஆகிய மும்மூர்த்திகளுடைய முகங்கள் எனறும் சர் ஜான் மார்ஷல் கூறியுள்ள[9] கருத்தை இங்கு நோக்குவது பயனுடையதாகும்.

வேதகாலத்தில் உருத்திரன், பிரிசினி முதலிய கடவுளர் காளை, பசு என்று அழைக்கப்படுகின்றனர். சிவனுடைய வாகனமும் கொடியும் ஏறு ஆகும். அதனால் மேற்கூறிய இலச்சினைகளிற் காணும் கொம்பு கொண்ட உருவம் சிவன் என்று கருத இடமேற்படுகிறது.

இலச்சினையில் காணும் கொம்பு கொண்ட உருவமும் விலங்குகளும் புலியையும் யானையையும் கொன்று அவைகளின் தோல்களை ஆடையாக அணிந்த புராண காலத்துச் சிவனையும், எருமை உருவிலுள்ள மகிடாசூரனைக் கொன்ற சக்தியையும் நினைவுப்படுத்துகின்றன. அதனால் புராண காலத்துச் சிவனும் சக்தியும் சிந்து சமவெளி காலத்து உருவங்களின் வளர்ச்சி எனத் தெரிகிறது.

பாரதம் பாடிய பெருந்தேவனார் சக்தியை இடப்பாகத்தில் கொண்ட சிவனின் இரண்டு தாள்களின் கீழ் மூவுலகங்கள் தோன்றியதாகக் கூறியுள்ளார். இக்கருத்தை இலச்சினையிலுள்ள கொம்பு கொண்ட உருவத்தின் குதிகால்கள் இரண்டும் சேர்ந்திருப்பது உணர்த்துவதாக அமைந்திருக்கிறது.

சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட மற்றொரு இலச்சினையில் கொம்பு கொண்ட தேவதை மரத்தடியில் நிற்பது போன்ற உருவம் காணப்படுகிறது. அவ்வுருவத்தை மற்றொரு கொம்பு கொண்ட உருவம் வணங்குவது போன்றும், மனிதத் தலை கொண்ட ஆடு ஒன்று அவ்வுருவத்தைப் பார்த்துக்கொண்டிருப்பது போன்றும்

காணப்படுகின்றன. உருவத்தின் அடிப்பாகத்தில், ஏழு மகளிர் கூந்தலைப் பின்னிவிட்டுக் கொண்டு வரிசையாக நிற்கும் நிலையும் காணப்படுகிறது.[10]



மரத்தேவதை வழிபாடு.

இவ்விலச்சினை வேதகாலத்து 'மருதம்' என்னும் கடவுள் பிறந்த கதையை நினைவுகூறும் வண்ணம் உள்ளது வேதகாலத்து 'மருதம்' என்னும் கடவுளுக்கும் தமிழிலக்கியம் கூறும் 'முருகன்' என்னும் கடவுளுக்கும் சில ஒற்றுமைகள் காணப்படுகின்றன. இருவரும் இரு மனைவியரை உடையவர்கள். இந்திரனின் சேனாதிபதி ஆவர். குன்றைப் பிளந்தவர்கள். புள்ளி கொண்ட வாகனமுடையவர்கள். மருதம் ஏழு பேர்களாக இருந்து ஒருவனாக விளங்குபவன். முருகன் ஆறு குழந்தைகளாகப் பிறந்து ஒருவனானான். முருகனைத் தாய்மார் அறுவர் பெற்றனர். எனினும், அவனுடைய தாய் உமை என்றும்

தந்தை சிவன் என்றும் கூறப்படும். அதேபோல் மருதத்தின் தாய் பிரிசினி தந்தை உருத்திரன் என்று கூறப்படும்.

மேற்கூறிய இலச்சினையில் அரச மரத்தடியில் உள்ள தேவதையை வேதகாலத்துப் பிரிசினியாகவும், அவளைப் பார்த்துக்கொண்டிருக்கும் மனிதனை வேதகாலத்து மருதமாகவும் கருதலாம். மனிதத் தலை கொண்ட ஆடு என்பதற்குப் பதில் மாடு எனலாம். ஏனென்றால் வேதத்தில் கடவுளர் காளை, பசு என அழைக்கப்படுவர். இவ்வுருவம் இந்திரன் அல்லது உருத்திரனாகக் கருதலாம். இவ்விலச்சினையிலுள்ள ஏழு மகளிர் மருதத்தைப் பெற்ற ஏழு முனி பத்தினிகளாகக் கருத இடமேற்படுகிறது.

மேற்கூறிய செய்திகளின் மூலம் சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட இலச்சினைகளில் காணும் கொம்பு கொண்ட உருவங்கள் அக்காலத்து தெய்வ உருவங்கள் என உணரலாம்.

### 1, 1. 3. இலிங்க வழிபாடு

சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட ஆயிரக்கணக்கான கூம்புருவமான பொருள்களை இலிங்கம் எனவும் வளைய வடிவமான கற்களை யோனி எனவும் கொண்டு சர். ஜான் மார்ஷல் அக்காலத்தில் சிவலிங்க வழிபாடு இருந்ததெனக் கூறுகிறார். ஆனால் மக்கா என்பவர் வளைய வடிவமான கற்களைத் தூண்கள் நிற்பதற்கு உபயோகித்திருக்கலாம் என்று கூறுகிறார்.[11] யாகம் செய்யும் போது யாக குண்டத்திற்குக் கிழக்கில் வனஸ்பதி மரத்தில் செய்த தூண்கள் பூமியில் நடப்படும் என்றும் அவற்றை வளையங்கள் அழகு செய்யும் என்றும் இருக்குவேதம் (3:8:10) கூறுகின்றது. எனவே வளைய வடிவமான கற்களைப் பூமியில் பதித்து அதனுள் கம்பங்களை நட்டிருக்கலாம் எனக் கருதலாம்.

மொகஞ்சதாரோவில் சூலத்தை உடைய மனித வடிவங்கள் சில கண்டெடுக்கப்பட்டுள்ளன. எனவே,

சூலம் சிவனின் அடையாளமாக இருக்கலாம் என்று ந. சி. கந்தையா பிள்ளை கூறும்[12] கூற்றும் நோக்கத் தக்கது.

## 1. 2. வேதகாலம்

வேதங்கள் இந்தியாவின் மிகத் தொல்கால நினைவுச் சின்னங்கள். வேத இலக்கியம் உள்ளடக்கத்தில் மிக விரிவானது. வெவ்வேறு வரலாற்றுக் காலப் பகுதி களைச் சேர்ந்த மூலப்பாடங்கள் அதில் அடங்கியுள்ளன. பண்டைய மரபைப் பின்பற்றி இதைச் சில மூலப்பாடத் தொகுதிகளாகப் பிரிப்பது வழக்கம். இவற்றில் முதன்மை யானவை தோத்திரப் பாக்களின் திரட்டுக்களான சம்ஹிதைகள் ஆகும். இவையாவன : ரிக்வேதம் - தோத் திரப் பாக்களின் திரட்டு, சாம வேதம் - இசைப் பாடல் களின் திரட்டு, யஜுர் வேதம் - வேள்விச் சூத்திரங்களின் திரட்டு, அதர்வண வேதம் - மாயவித்தைக்குரிய மந்திரங் களும் சூத்திரங்களும் அடங்கிய திரட்டு. இவற்றுக்கு அடுத்தவை சம்ஹிதையின் சடங்கு நூல்கள் குறித்த விளக்கங்களான பிராமணங்களும், முனிவர்க்குரிய நூல்க ளான ஆரணியங்களும், மத தத்துவ ஆய்வு நூல்களான உபநிடதங்களும் ஆகும்.[13] இவ் வேத இலக்கியங்களில் பல தெய்வ வழிபாடுகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று உருத்திர வழிபாடு. இவ் வுருத்திரனைத் தீக்கடவுள், பொன்னார் மேனியன், சடதாரி, வில்லவன், பசுபதி, வைத்தியநாதன், கோபமுடையவன் போன்றவாறு வேதங்கள் கூறுகின்றன.

### 1. 2. 1. ருத்திர சிவா என்பதன் பொருள்

'ருத்ர' என்ற வடசொல் 'ருத்' என்ற வேரிலிருந்துண் டானது. இதற்குச் 'செந்நிறம்' எனவும் 'முழக்கம்' என வும் பொருளுண்டு.[14] உருத்திரன் தீக்கடவுள் ஆனதால் சிவப்பு நிறமும் கோபமிக்க ஆரவாரமும் உடையவனாகக் கூறப்படுகிறான். அவன் அழிக்குங் கடவுளானபோதிலும்

பக்தர்களைக் காக்குங் கடவுள் என்பதைச் சிவம் என்ற பெயர் உணர்த்தும். இச் சிவன் என்னும் பெயர் 'ஏபி : சிவ' என்று இருக்கு வேதத்திலும் (10 : 92 : 9) 'ருத்ர சிவா' என்று சுவேதாஸ்வதா உபநிடதத்திலும் (3:5) கூறியிருப்பதால் அறியலாம். சிவம் என்பதற்குச் சாந்தி, அமைதி என்று பொருள் கூறப்பட்டுள்ளது.

உருத்திரன், மக்கள் ஒழுக்கங்கெட்டுக் குழப்பத்தை உண்டாக்கியபோது, உயிரினங்களை அழித்து மீண்டும் உயிரினங்களைப் புதுமையாகப் படைப்பவன் என்று சுவேதாஸ்வதா உபநிடதம் (4 : 14) கூறுகிறது.

### 1. 2. 2. உருத்திரன் தீக்கடவுள்

உருத்திரன் தீக்கடவுள் என்பதை 'நெருப்பிலுள்ள உருத்திரனுக்கு, வெள்ளத்தில் வாழும் உருத்திரனுக்கு, மூலிகையிலுந் தாவரங்களிலும் நுழையும் உருத்திரனுக்கு, இவ்வுலகங்களை எல்லாம் உருவாக்கியவனுக்கு, அக்நியாகிய உருத்திரனுக்கு வணக்கஞ் செலுத்துகிறோம்,' என்று அதர்வண வேதம் (7 : 8 : 7) கூறுவதன் வாயிலாக அறியலாம்.

### 1. 2. 3, பொன்னார் மேனியன்

உருத்திரன் தீக்கடவுளானதால் தீயின் நிறமான செந்நிறமானவன். அவன் சிவனைப் போல் பொன்னார் மேனியனாகத் திகழ்பவன் என்பதை இருக்குவேதம் உருத்திரனை 'சூரியனைப் போலவும் பொன் போலவும் பிரகாசமானவன்' (1:4:5) என்றும் 'கண்கவரும் சிறந்த அழகார் மேனியன்' (1: 114: 5, 2: 33: 8, 7: 29: 5) என்றும் கூறுவதன் வாயிலாக அறியலாம்.

### 1.2.4. அக்கினி தேவன் உருத்திரன் என அழைக்கப்பட்டான்

வேதக் கடவுள் அக்கினி 'உருத்திரன்' என்று அழைக்கப்பட்டான். (இரு. 2: 1:6, 4:3:1, 5;3:3) 'அக்கினி

உருத்திரனின் ஆற்றலை வெளிப்படுத்துகிறான்.' என்று இருக்கு வேதம் (1:72:4) கூறுவதால் அக்கினிதேவன் உருத்திரனின் ஒரு கூறு என்று கருத இடமுண்டு.

### 1. 2. 5. சடையன்

உருத்திரன் சிவனைப் போல் சடையுடையவன் என்று வேதங்கள் கூறுகின்றன.

மறைமலையடிகள் தமிழர் மதம் என்னும் நூலில் 'வலியோனுஞ் சடைமுடி வாய்ந்தோனும் வீரர்களுக்குத் தலைவனுமான உருத்திரனுக்கு (இமா: ருத்ராய தவஸே கபர்திநே க்ஷயத் வீராய)' என்ற இருக்கு வேதப் பாடலை (1:114:1) எடுத்துக்காட்டி, அதில் வந்துள்ள 'கபர்திநே என்னுஞ் சொல் சடையன் என்னும் பொருளைத் தருவது.' என்பர். மேலும் இக் 'கபர்திநே' என்னும் சொல் உருத்திரனுக்குரியதாக இருக்குவேதப் பாடல்கள் பலவற்றில் வழங்கப்பட்டு வருவதால் 'சடையன்' என்று தமிழ்ச் சொல்லாலுங் 'கபர்திநே' என்று வடச்சொல்லாலுங் குறிப்பிடப்படும் கடவுள் சிவன் ஒருவனே என்பதைக் காட்டுவதாகக் கூறுகிறார்.[15]

### 1.2.6 திரிபுரம் எரித்தவன்

சிவன் மேருவை வில்லாக வளைத்து அக்கினியை அம்பாக எய்து திரிபுரம் எரித்தான். வேதத்தில் அக்கினி உருத்திரன் எனவும் அழைக்கப்படுவதால் வேதத்தில் அக்னி புரத்தை எரித்ததாகக் கூறப்பட்டுள்ளது.

'கடுந்தன்மையனான தீக்கடவுளே! நீ ஒரு வில் லாண்மை வல்லானை யொப்பவுங் கூர்ங் கொம்பு வாய்ந்த ஒரு காளையினை யொப்பவும் புரங்களைப் பொடி செய்தனை.' என்று இருக்கு வேதம் (6:16:29) கூறுகிறது. இதற்கு மறைமலையடிகள், 'இப்பதிகம் தீக்கடவுள் பற்றி கூறுவதாக உள்ளது.' என்று கூறி; மேலும், 'அக்நி! நீயே உருத்திரன் (த்வம் அந்நே ருத்ரோ 2: 16)' என்று இருக்கு வேதத்தின் பல இடங்களில் காணப்படுவதாலும் சைவ சமய குரவரான திருநாவுக்கரசர்,

எரிபே ருக்குவா அவ்வெரி ஈசனது
உருவ ருக்கும தாவது உணர்கிலார்

என்று கூறியிருப்பது போல மற்ற ஆசிரியர்களும் கூறியி ருக்கின்றனர். எனவே, தீ வடிவே சிவனுடைய வடிவம் என்பதும், தீக்கடவுள் செய்ததாகக் கூறியுள்ள மூன்று நகரழிவு (திரிபுரதகனம்) சிவன் தன்அடியவரைக் காக்கச் செய்த ஒரு பெரிய அருஞ்செயல் என்பதும், அச் செயலை முக்கண்ணன் செய்ததாகக் கூறும் பண்டைத் தமிழ் நூல்களும் உருத்திரன் செய்ததாகக் கூறும் இருக்கு வேதம் முதலிய பழைய வடநூல்களும் சிவன் செய்த செயலை எடுத்துக் கூறியுள்ளன என்பதை உணர்தல் வேண்டும்.' என்கிறார்.[16]

## 1. 2. 7. வில்லவன்

சிவன் வாசுகியை நாணாக்கி மேருவை வில்லாக வளைத்து அக்கினியை அம்பாக விட்டுத் திரிபுரம் எரித் தான். சிவன் அக்கினியை அம்பாகக் கொண்டு முப்புரம் எரித்ததால் அக்கினி கோட்டையை அழித்ததாக இருக்கு வேதத்தில் (6: 16: 39, 7: 6: 2) கூறப்பட்டிருக்கிறது.

அசுரர்களின் கோட்டைகளை அழிக்க தேவர்கள் அக்கினியை அம்பாகச் செய்து அவ் வம்பெய்ய உருத்திர னைத் தேர்ந்தெடுத்தார்கள் என்று தைத்திரிய சம்ஹிதை கூறுகிறது.[17]

உருத்திரன் ஒரு வில்லாண்மை வல்லானை யொப்ப வன் என்று இருக்கு வேதம் (6: 16: 29) கூறுகிறது.

உருத்திரன் வில்லும் அம்பும் கூர்மையான படையும் உடையவனாகவும், அவனுடைய அம்பு மனிதர்களையும் ஆடுமாடுகளையும் பயிர்களையும் அழிக்கும் என்பதையும், அதற்காக மக்கள் உருத்திரனைக் காக்கும்படி வேண்டிக் கொண்டதையும் இருக்கு வேதம் கூறுகிறது. இதனைக் கீழ்வரும் இருக்குவேதம் அதர்வண வேதம் பாடல்களால் அறியலாம்.

உருத்திரன் வில்லும் அம்பும் ஏந்தியவன்.
(இரு. 2: 33: 10)

அவனுடைய வில் வன்மையானது (இரு. 5: 42: 11)

உன் அம்பு மனிதரையும் கால் நடையையும் கொல்லும். மறவர் கோவே! எங்களுக்கு வலிமையும் பாதுகாப்பும் அருள்வாயாக! (இரு. 1: 114. 10)

உருத்திரனின் அம்பு வேறுதிசை திரும்பி எங்களை விட்டுவிடுவதாக, அவனுடைய கடுங்கோபம் எங்களைத் தவிர்ப்பதாக. அருட்கடவுளே! உன் வல்வில் எம் இளவரசர்களை விட்டு விலகுவதாக. எம் சந்ததியர்க்கு அருள் புரிவாயாக! (இரு. 2:33:14)

அவனுடைய வில் வன்மையானது. விரைந்து செல்லும் அம்புடைய அவன் தன்னையே சார்ந்த கடவுள். அறிவாளன், வெற்றிவீரன், கூரிய படை கொண்டவன், எம் வேண்டுகோளைக் கேட்பானாக!
(இரு. 7: 46: 1)

நீ விண்ணிலிருந்து வீசும் ஒளிரும் அம்பு பூமியில் விழும்போது எங்களுக்கு ஊறு விளைவிக்காமற் போவதாக! (இரு. 7: 46: 3)

உருத்திரன் வீசும் பயங்கரமான அம்பு எங்களுடைய கால் நடைகளை விட்டு விலகிப் போகட்டும்.
(அதர். 5: 59: 3)

உருத்திரா! உன்னையும் உன் வில்லிலிருந்து வரும் அம்பையும் வணங்குகிறோம். (அதர். 5: 90: 3)

### 1. 2. 8. வைத்தியநாதன்

சிவன் நஞ்சை யுண்டு தேவர்களைக் காப்பாற்றினான். அவனிடம் நஞ்சைப் போக்கக் கூடிய மருந்திருப்பதால் வைத்தியநாதன் என்று அழைக்கப்படுகிறான். வேதக் காலத்து மக்கள் உருத்திரனை வைத்தியர்களுக்கு எல்லாம் சிறந்த வைத்தியன் என்று கருதினர். எனவே அவர்கள் அவனை உடல் நலந்தருமாறு வேண்டிக் கொண்டார்கள்.

இதனைக் கீழ்வரும் இருக்கு வேதப் பாடல்களால் அறியலாம்.

உருத்திர! நீ கொடுக்கும் மருந்தினால் நூறு ஆண்டுகள் வாழ்வேன். (இரு. 2: 33; 2)

வன்மைமிக்க இறைவா! எங்களுடைய வீரர்களுக்கு மருந்தளித்து ஊக்குவிப்பாய். நீ வைத்தியர்களுக் கெல்லாம் புகழ் மிக்கவன் எனக் கேள்விப்பட்டிருக்கின்றோம். (இரு. 2: 33: 4)

உருத்திரன் மூலிகைகளுக்கு அதிபதி. நாங்கள் மகிழ்ச்சியும் உடல் நலமும் வலிமையும் தரும்படி அவனை வேண்டிக்கொள்கிறோம். (இரு. 1: 43: 4)

**1. 2. 9. உருத்திரனின் இயல்புகள்**

வேதத்தில் உருத்திரனின் இயல்புகள் சிவனைப் போல் பலவாறு கூறப்பட்டுள்ளன.

**1. 2. 9. 1. பசுபதி**

சிந்து சமவெளியில், சிவன் விலங்குகளுக்கு இறைவன் என்ற பொருளில் 'பசுபதி' என்று அழைக்கப்படுவது போல் வேதத்தில் உருத்திரன் உயிரினங்களுக்குத் தலைவனாக அழைக்கப்படுகிறான். (அதர். 2: 34: 1)

**1. 2. 9. 2. நந்தி**

திருமூலர் சிவனை நந்தி என்று அழைக்கிறார். உருத்திரனும் நந்தி எனக் கூறப்படுகிறான்.

ஓ செங்காளை! நின் இயற்கையைக் காட்டி எங்களைச் சீறைசெய்யாதே! (இரு. 2: 33: 15)

**1. 2. 9. 3. இறப்பிலி**

சிவன் 'பிறப்பிலி' எனப்படுவான். அதேபோல் உருத்திரன் 'இறப்பிலி' எனப்பட்டான். (இரு. 1:114:6)

**1. 2. 9. 4. ஏழிசையானவன்**

ஏழிசையாய் இசைப்பயனாய் இருப்பவன் சிவன். உருத்திரன் இசைக்குரியவன் என்பது,

*உத்திரா! யாகத் தலைவா! இசைத்தலைவா! வைத்திய நாதா! எங்களுக்கு மகிழ்ச்சியையும் உடல் நலமும் வலிமையையும் தருவாய்!*

என்ற இருக்கு வேதப் பாடலால் (1:43:4) அறியலாம்.

**1. 2. 9. 5. ஆயிரங் கண்ணோன்**

புராணங்களிலும் இலக்கியங்களிலும் இந்திரன் ஆயிரங் கண்ணோன், இடிப்படை வானவன் எனக் கூறப்படுவான். ஆனால் வேதத்தில் உருத்திரன் ஆயிரங் கண்ணுடையவன் (அதர். 11: 2: 17) என்றும், இடிப்படையுடையவன் (இரு. 2: 33: 3) என்றும் கூறப்படுகிறான்.

**1. 2. 9. 6, யாகத்தலைவன்**

உருத்திரன் யாகங்களுக்குத் தலைவன் என்று இருக்கு வேதம் (1: 43: 4) கூறுகிறது.

மனு ஏழு புரோகிதர்களைக் கொண்டு நெருப்பைக் கிண்டி இருதயமும் மனமும் திருப்தியுடன் இறைவனுக்கு முதல் ஆவுதியை அளித்தான் என்று இருக்கு வேதம் (1: 164: 36) கூறுகிறது. இதனால் மனு முதன் முதலில் யாகஞ் செய்தான் என்பது தெரிகிறது. மேலும் இம் மனுவின் வழிவந்தோர் உருத்திரனைத் தனியாகப் போற்றி இருக்கு வேதப் பதிகங்களைப் (1: 114; 2: 33) பாடியிருக்கிறார்கள்.

**1. 2. 10. சிவா என்னும் இனத்தவர்**

இந்திரன் சிஸ்ன தேவாக்கள் என்பவர்களைக் கொன்று அவர்களுடைய நூறு கதவுகளைக் கொண்ட கோட்டைக்குள்ளிருந்த பொருட்களைக் கொள்ளையடித்தான் என்று இருக்கு வேதம் (10: 99: 3) கூறுகிறது.

வேதக்காலத்தில் சில இனத்தவர் தங்களுடைய வழிபாட்டு இடங்களைச் சிஸ்ன தேவாக்கள் நெருங்காதபடி தடுக்க வேண்டுமென்று இந்திரனை வேண்டிக்கொண்டார்கள் என்று மற்றொரு இருக்கு வேதப் பாடல் (7: 21: 5) கூறுகிறது.

இவ்விரு பாடல்களிற் கூறப்பட்ட 'சிஸ்னதேவ' என்ற இனத்தவரின் கடவுள் 'சிஸ்ன' அல்லது 'இலிங்கம்' என்றும், அவர்கள் வேதம் ஓதிய ஆரியர்களின் பகைவர்கள் என்றும் ஆர். பண்டார்கர் கூறுகிறார்.[18]

ஆரியரல்லாத பக்தா, பலானா, அலினா, சிவா, விஷானின் ஆகியோர் ஒன்றுசேர்ந்து ஆரியர்களான திருத்ஸீவை எதிர்த்துப் போர் புரிந்தார்கள். ஆரியருக்கு இந்திரன் உதவி புரிந்தான் என்று இருக்கு வேதம் (7: 18: 7) கூறுகிறது.

மேற்கூறியவற்றால் 'சிவா' என்ற இனத்தவர் சிவனை வழிபடுபவர்கள் என்பதை உணரலாம். இலிங்கத்தை வழிபடும் பழங்குடி மக்களைச் 'சிஸ்ன தேவ' என ஆரியர்கள் கேவலமாக அழைத்தனர். இவர்கள் ஹரப்பா பண்பாட்டுக் காலத்தில் சிவலிங்கத்தைத் தெய்வமாக வணங்கிய மக்களின் சந்ததியினர் என்று கருதலாம். ஏனெனில் சர். ஆர். மோட்டிமா உவீலரும் சில ஆய்வாளரும் ஆரியர் ஹரப்பாவை அழித்ததாக நம்புகின்றனர். அவர்கள் ஹரப்பாவின் பிந்திய இடுகாட்டில் அடக்கஞ் செய்யப்பட்டவை உண்மையான வேத கால ஆரியரின் பிணங்களே என்றும், இந்திரன் அழித்த நகரங்களில் ஹரப்பாவும் ஒன்று என்றும் கருதுகிறார்கள்.[19]

## 1.3. இதிகாச புராணக் காலம்

இதிகாச புராணக் காலத்தில் சிவன் கடவுளர்க்கெல்லாம் இறைவனாகப் போற்றப்பட்டான். இராமாயணத்தில் இராமர் சிவலிங்க பூசை செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. மகாபாரதத்தில் கிருஷ்ணன் சிவலிங்க பூசை செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. இவ்விரண்டிலும் சிவனுடைய வில் இன்றியமையாததாகக் கூறப்படுகிறது.

சீதையின் சுயவரத்தின்போது இராமர் சிவதனுசை உடைத்து இராவணனுக்குத் தன் ஆற்றலை வெளிப்படுத்தினார். அர்ச்சுனன் அம்பெய்து கொன்ற பன்றிக்காக ஓர் வேடனுடன் போர் புரிந்தான். முடிவில் அவன்

களைத்துப்போய் மணலில் ஓர் பீடம் செய்து 'சிவா! சிவா!' என்று அதை வணங்கினான். அவன் பீடத்திற்கு வைத்த பூக்கள் வேடனின் தலையில் இருப்பதைக் கண்டு தான் சிவனுடன் சண்டை போட்டதை உணர்ந்தான். அவனுக்குச் சிவன் பாசுபதம் என்னும் வில்லை அளித்தான்.

இலிங்கம் தோன்றிய கதையைச் சிவபுராணமும் இலிங்க புராணமும் கூறுவதை இங்குக் காணலாம்.

### 1.3.1 சிவபுராணம்

எங்கும் பரவிய பாற்கடலில் பள்ளிகொண்ட திருமாலின் நாபிக் கமலத்திலிருந்து பிரம்மா பிறந்தார். தன் தண்டினால் நிற்கும் தாமரையை மட்டும் பிரம்மா கண்டார். அவர் எங்கிருந்து தாமரையின் தண்டு கிளம்புகிறது என்று அறிய அதனுள் புகுந்து கீழ் நோக்கிச் சென்றார். அவர் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஓடியும் அடியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. திருமால் பிரம்மாவிடம் வந்து, 'நான் இருபத்து நான்கு பொருட்களைப் படைத்தேன். அவைகளில் ஒன்றான மாயையினால் உன் முயற்சியில் தோல்வியுற்றாய்.' என்றார். இதைப் பிரம்மா ஏற்றுக்கொள்ளாமல் திருமாலைப் போருக்குஅழைத்தார். இருவரும் போர்புரிந்த பொழுது வீசப்பட்ட ஆயுதத்திலிருந்து கொடூரமான நெருப்பு உண்டாகி, வெட்ட வெளியில் தோன்றி உலகத்தை அழித்துவிடும் போலிருந்தது.

உலகத்தை அழியாதபடி காக்க பெரிய அக்கினி கம்பமாகச் சிவன் தம்முள் போர்புரிந்த திருமால் பிரம்மா ஆகியோரின் முன்பு தோன்றினார். திருமாலும் பிரம்மாவும் அந்த அக்கினிக் கம்பத்தைப் பார்த்து வியந்து போர் புரிவதை நிறுத்திக்கொண்டார்கள். அவர்கள் அந்தக் கம்பத்தின் முடிவிடத்தைக் காண முயன்றார்கள். எனவே, பிரம்மா அன்னப் பறவையாகி மேல்நோக்கிச் சென்றார். திருமால் பன்றி யுருவமெடுத்துக் கீழ் நோக்கிச் சென்றார். இருவரும் அடிமுடி காண முடியாமல் திரும்பி வந்தனர். அவர்கள் சிவனைப் போற்றிப் புகழ்ந்து பாடினார்கள். சிவன் மகிழ்ச்சியுற்றார். கம்பத்திலிருந்து 'ஓம்' என்ற ஒலி

யுண்டானது. இந்த அக்கினிக் கம்பம் ஜோதிர் லிங்கம் என அழைக்கப்படும்.[20]

### 1.3.2. இலிங்க புராணம்

உலகம் தோன்றிய ஆரம்ப காலத்தில் பிரம்மாவும் திருமாலும் போர்புரிந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் போரின் உச்சகக் கட்டத்தை அடைந்தபோது தங்சள்முன்பு பேரொளி வீசும் நெருப்பு நிற்பதைக் கண்டார்கள். திருமால் பிரம்மாவிடம், 'நாம் இந்த நெருப்பு எங்கிருந்து தோன்றியது என்று காண்போம்.' என்றார். அதற்குப் பிரம்மாவும் உடன்பட்டார். பிரம்மா அன்னமாகி வான் நோக்கிப் பறந்தார். திருமால் பன்றியாகிக் கீழ்நோக்கிச் சென்றார். இருவரும் அந்த அனல் பிழம்பின் அடிமுடி காணமுடியாமல் திரும்பி வந்தனர்.[21]



இலிங்கோத்பவர், வீரட்டானேஸ்வரர் கோயில்.

இந்தக் கம்பத்தின் மேலே அன்னப் பறவையும் கீழே பன்றியும் கொண்ட உருவம் இலிங்கோத்பவர் என அழைக்கப்படும். இச்சிற்பத்தை சிவன் கோயில்களில் காணலாம்.



சிவலிங்கம், குடிமல்லம்

காளஹஸ்திக்கு அருகிலுள்ள குடிமல்லம் என்ற ஊரில் உள்ள கோயிலில் உள்ள இலிங்கம் இலிங்கோத்பவர் போல் அமைந்திருக்கிறது. இது கி. மு. இரண்டாம் நூற்றாண்டு சிற்பம் என்று அகழ்வாளர் கருதுகின்றனர்.[22] எனவே, இதிகாசப் புராணக் காலத்தை அடுத்த சங்க காலத்தில் இலிங்க வழிபாடு இருந்தது தெரிகிறது.

இவ்வாறு சிந்துசமவெளி நாகரிகக்காலம், வேதக்காலம், இதிகாசப் புராணக் காலம் ஆகிய காலப்பகுதிகளில் நிலவிய சிவன் பற்றிய செய்திகள் யாவும் சங்க காலத்திற்கு முற்பட்டவை ஆகும்.

## குறிப்புகள்


1. ஏ. எல். பாசம், வியத்தகு இந்தியா. ப. 18.
2. கொ. அ. அன்தோனவா, கி. ம. போன்காரத்-லேவின், கி.கி. கத்தோவஸ்கி, இந்தியாவின் வரலாறு. ப.32.
3. ஏ. எல். பாசம், வியத்தகு இந்தியா, ப. 18.
4. மேற்படி, ப-ள் 18-19.
5. Sir John Marshall, MOHENJO-DARO, Vol.I, P. 49.
6. ஏ. எல். பாசம், வியத்தகு இந்தியா, ப. 27.
7. Sir John Marshall, MOHENJO-DARO. Vol. I, P. 52.
8. ஏ. எல். பாசம், வியத்தகு இந்தியா, ப. 27.
9. Sir John Marshall, MOHENJO-DARO Vol. I, P. 53
10. ஏ. எல். பாசம், வியத்தகு இந்தியா, ப. 28.
11, N. Venkataramanayya, RUDRA-SVIA, P. 51.
12. ந. சி. கந்தையா பிள்ளை, சிந்து வெளித் தமிழர். ப. 21.
13. கொ. அ. அன்தோனவா, கி. ம. போன்காரத்-லேவின், கி.கி.கத்தோவஸ்கி, இந்தியாவின் வரலாறு, ப. 70.
14. Ralph T. H. Griffith (Tn) THE HYMNS OF THE RIGVEDA, P. 16 & P. 23.
15. மறைமலையடிகள், தமிழர் மதம், ப-ள் 118-119.
16. மேற்படி, ப. 118.
17. N. Venkataramanayya, RUDRA-SIVA, P. 81-82.
18. R. G. Bhandarakar, VAISNAVISM SAIVISM AND MINOR RELIGIOUS SYSTEM . P. 115.
19. ஏ. எல். பாசம், வியத்தகு இந்தியா, ப-ள் 35-36.
20. J. C. Sastri (Tn) THE SIVA PURANA, Part I Jnanasamita, Chapters 2-3.
21. J. C. Sastri (Tn) THE LINGA PURANA, Part I Chapter 17.
22. Nandita Krishna, 'Two Thousand years of Solitude', INDIAN EXPRESS MAGAZINE, July 15, 1984. P.3

# 2. பண்டைத் தமிழிலக்கியங்கள் காட்டும் சிவன்.

2. பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவனைப் பற்றிக் கூறிய புலவர்கள் 'சிவன்' என்ற பெயரைக் கூறாமல் மணிமிடற்றோன், ஆல்மர் கடவுள், முக்கண்ணன் முதலான சிவனுடைய பண்புடன் கூடிய பெயர்களையே கூறியுள்ளனர். புறநானூறு, அகநானூறு கடவுள் வாழ்த்துப் பாடல்களில் சிவனுடைய திருக்கோலத்தைப் பற்றிப் பெரிதும் சித்திரித்துக் கூறப்பட்டுள்ளது. கலித்தொகையின் கடவுள் வாழ்த்தில் சிவனது ஆடலும், ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்தில் சிவனின் படைப்புத் தொழிலும் கூறப்பட்டுள்ளன. சில பாடல்களில் சிவனைப் பற்றி ஆங்காங்கே உவமை வாயிலாகக் கூறப்பட்டுள்ளன. இவ்வியலில் பண்டைத் தமிழிலக்கியங்கள் சிவனைப் பற்றிக் கூறும் கருத்துகள் தொகுத்துக் கூறப்படுகின்றன.

## 2. 1. தொல்காப்பியம்

தொல்காப்பியர் அந்தந்த நிலத்தில் வாழும் மக்கள் வணங்கும் தெய்வத்தைத்தான் நால்வகை நிலங்களுக்குரிய தெய்வங்களாகக் கூறினார்.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.*[1]

என்று தொல்காப்பியர் கூறினார்.

இதனால் முல்லையில் வாழும் ஆயரின் குலதெய்வம் திருமால், குறிஞ்சியில் வாழும் குறவரின் குலதெய்வம்

முருகன், நெய்தலில் வாழும் பரதவரின் குலதெய்வம் வருணன், மருதத்தில் வாழும் உழவரின் குலதெய்வம் இடிப்படை வானவன் என்பதை அறியலாம்.

தொல்காப்பியர் பாலைக்குரிய கடவுளைக் கூற வில்லை. ஆனால், பிற்கால இலக்கண ஆசிரியர்கள் பாலையில் வாழும் மறவரின் குலதெய்வமாகக் கொற்ற வையைக் கூறினர்கள்.

தொல்காப்பியத்தில் 'சிவன்' பற்றிய குறிப்பு நேரடி யாகக் காணவில்லை. எனினும், ஆய்வாளர் சிலர் குறிப் பால் இன்ன சொல் சிவனைப் பற்றிக் குறிப்பது என்று தம் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். ஆய்வாளர்களின் கருத்துகள் ஈண்டு எடுத்துக் கூறப்படும். முடிந்த முடி பாகக் கூறுவதற்கு இன்னும் நன்கு ஆராய்ந்து கூற வேண்டும். எனவே, தொல்காப்பியத்தில் சிவன் என்பது ஆய்வுக்குரியது.

'சேயோன்' என்ற சொல் செம்மை நிறத்தோன் என்ற பொருளில் சிவனைக் குறிப்பது என்று ஆய்வாளர் சிலர் கூறுவர்.

ஐ. அண்ணாமலை என்பவர், 'சங்க காலச் சிவ வழி பாடு' என்னும் தம் கட்டுரையில்,

> சிவ வழிப்பாடு அன்பு மேலீட்டால் நன்றிப் பெருக் கால் பல உருவங்களில் வெளிப்படும் நீர்மையுடை யது. அவற்றில் ஒன்று ஒளி. இது கைபுனைந்தியற் றாக் கவின் பெறு வனப்பாய் அமைவது. தொல் காப்பியர் காட்டும் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றனுள் கொடிநிலையும் வள்ளியும் ஒளி வழிபா டாகும். அவை முறையே ஞாயிற்றொளியாய், திங்கள் ஒளியாய் விளங்கும். இதற்கு எடுத்துக் காட்டாக இளங்கோவடிகள் 'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்', ' திங்கள் போற்றுதும் திங்கள் பேற்றுதும்' எனக் கடவுள் வாழ்த்தாய்ப் போற்றுவது ஒளி வழிபாட்டின் பழமைச் சிறப்பைப் புலப்படுத்தும்.[2]

என்று கூறுகிறார்.

ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் [3]

என்பது சிவனின் ஆணை என்று வை. இரத்தினசபாபதி கூறுகிறார்.[4] இது ஓரளவு பொருத்தமாகத் தோன்று கிறது. ஏனெனில், இறையனார் அகப்பொருள் இலக் கணத்தைக் கொண்டு சங்கப் புலவர்கள் கண்ணகியைத் தலைவியாகவும் கோவலனைத் தலைவனாகவும் மனங் கொண்டு அகப்பாக்களைப் பாடியதாக க. சண்முகசுந்தரம் கூறுகிறார்.[5]

இவ்வாறு ஆய்வாளர் ஒவ்வொருவரும் கருத்து வேறுபாடு கொள்கின்றனர்.

## 2. 2. சிவனின் திருக்கோலம்

பாரதம் பாடிய பெருந்தேவனார் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்திலும் புறநானூற்றுக் கடவுள் வாழ்த் திலும் சிவனின் திருக்கோலத்தைச் சித்தரித்துக் கூறு கிறார். கலித்தொகை, புறநனூறு, பரிபாடல், ஐங்குறு நூறு, திருமுருகாற்றுபடை, மலைபடுகடாம், சிலப்பதிகாரம், மணிமேகலை, நாலடியார், இன்னா நாற்பது, இனியவை நாற்பது போன்ற இலக்கியங்களில் ஆங்காங்கே சிவனின் திருக்கோலம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

சிவனின் திருக்கோலத்தைச் சிவனின் உருவம், சிவன் அணிவன, சிவனது ஆயுதங்கள், சிவனது வாகனமும் கொடியும் என்ற உள் தலைப்புகளில் காணலாம்.

### 2. 2. 1. சிவனின் உருவம்

சிவனின் உருவத்தைப் பற்றி அகநானூற்றுக் கடவுள் வாழ்த்து முழுமையாகக் கூறுகிறது. ஏனையவற்றில் குறிப்பாக ஆங்காங்கே காணப்படுகின்றன. சிவனின் உருவத்தைச் சிவனின் திருமேனி, பிறை யன்ன எயிறு, பிறை நுதல், நீலகண்டன், மூன்று கண்கள், தவழ்ந்த நீண்ட சடை, உமையைச் சேர்ந்தோன் என்ற தலைப்புகளில் காண்பது பயனுடையதாகும்.

### 2.2.1.1. சிவனின் திருமேனி

சிவன் செவ்வானத்தைப் போலவும் நெருப்பைப் போலவும் சிவந்த மேனியனாகத் திகழ்பவன்.

*செவ்வா னன்ன மேனி* —அகம். க. வா. 1 :8.

*செந்நிறப் பசும்பொன் புரையும் மேனியன்*
—சிலம்பு. 22 : 62.

### 2.2.1.2. பிறை யன்ன எயிறு

சிவன் பிறைச்சந்திரனைப் போல் வளைந்த பல்லை உடையவன்.

*இலங்குபிறை அன்ன விலங்குவால் வையெயிற்று*
—அகம். க. வா. 1 : 9.

### 2.2.1.3. பிறை நுதல்

சிவன் பிறை போன்ற நுதலை உடையவன்.

*பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை*
*பதினெண் கணனு மேத்தவும் படுமே*
—புறம். க. வா. 1 : 9-10.

*பிறைநுதல் விளங்கு மொருகண்* —புறம். 55 : 5.

*பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி*
—புறம். 91 : 5.

*மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்*
—கலி. 104 : 11.

பிறை நுதல் என்ற உவமை மகளிரின் நெற்றிக்குக் கூறுதல் மரபு. சிவன் இடப்பாகத்தில் பெண்ணுருவம் கொண்டதால் பிறைநுதல் கொண்டவனாகக் கூறப் பட்டது எனலாம். ஆனால் தேவாரத்தில் சிவன் நெற் றியில் பிறைபோன்ற திலகம் அணிந்தவனாகப் பாடப் பட்டிருப்பதை உ. வே. சாமிநாதையர். 'பிறைநெற்றி யோடுற்ற முக்கண்ணினார்', 'பிறை தாங்கு நெற்றியர்', 'பிறைசேர் நுதலிடைக் கண்ணமர்ந் தவனே'[6]; 'பிறைநுதல் விளங்கும்', 'தேய்பொடி வெள்ளை பூசி யதன்மேலோர் திங்க டிலகம் பதித்த நுதலர்'[7] என்று எடுத்துக்காட்டுகிறார்.

### 2.2.1.4. நீலகண்டன்

நஞ்சுண்டதால் கறுத்த கண்டத்தை உடையவன்.

மணிமிடற் றந்தணன் —அகம். க. வா. 1 : 15.
மணிமிடற் றண்ணல் —பரி. 9 : 7.
மறுமிடற் றண்ணல் —பரி. 8 : 127.
மணிமிடற் றெண்கையாய் —கலி. க.வா. 1 : 4.
கணிச்சியோன் மணிமிடற்றணி —கலி. 105 : 13.
மணிமிடற்று மாண்மலர்க் கொன்றையான்
—கலி. 142 : 27-28.

காரி யுண்டிக் கடவுள் —மலை. 83.
கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும் படுமே.
—புறம். க.வா. 1 : 5-6.

கறைமிடற் றண்ணல் —புறம். 55 : 4.
மணிமிடற் றோன் —புறம், 56 : 2.
நீல மணிமிடற் றொருவன் —புறம். 91 : 6.

### 2.2.1.5. மூன்று கண்கள்

சிவன் நெற்றியில் இமையாத கண்ணை யுடையவன். எனவே சிவன் மூன்று கண்கள் உடையவனாகத் திகழ்கிறான்.

நுதல திமையா நாட்டம் —அகம். க.வா. 1 : 4.
முக்கண் செல்வன் —அகம். 181 : 16.
முக்கட் செல்வர் —புறம். 6 : 18.
பிறைநுதல் விளங்கு மொருகண் —புறம். 55 :5.
பைங்கட் பார்ப்பான் —பரி. 5 : 27.
நெற்றி இமையா நாட்டம் —பரி. 5 : 29-30.
முக்கண்ணான் —கலி. 2 : 4, 104 : 12.
பசுங்கட் கடவுள் —கலி. 101 : 24.
இமையா முக்கண் —முருகு. 153.

*நுதல்விழி நாட்டத் திறையோன்* —சிலம்பு. 14 : 7.

*கண்ணுதலோன்* —சிலம்பு. 12 : 9 : 3.

*கண் மூன்றுடையான்* —நாலடி. 400 : 1.

*கண் மூன்றுடையான்* —இனிய. க.வா. 1 : 1.

*முக்கட் பகவன்* —இன்னா. க.வா. 1 : 1.

**2.2.1.6. தாழ்ந்த நீண்ட சடை**

சிவனின் சடை நெருப்புப் போல் ஒளிரும் சிவந்த தாழ்ந்த நீண்ட சடையாகும்.

*எரியகைந் தன்ன அவிர்ந்துவிளங்கு புரிசடை*
—அகம். க. வா. 1 : 10.

*எரிமரு ளவிர்சடை* —புறம். 56 : 1.

*நன்றாய்ந்த நீணிமிர்சடை* —புறம். 166 : 1.

*தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே*
—புறம். க.வா. 1 : 13.

*மிக்கொளிர் தாழ்சடை* —கலி. 104 : 11.

**2. 2.1.7. உமையைச் சேர்ந்தோன்**

சிவன் தன் இடப்பாகத்தில் பெண்ணுருவைக் கொண்டவன். அப் பெண் உருவம் உமையம்மை ஆகும்.

*சேர்ந்தோள் உமையே* —அகம். க.வா. 1 : 7.

*உமையொடு புணர்ந்த காம வதுவையுள்*
—பரி. 5 : 28.

*உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்*
—முருகு. 153.

*உமையவ ளொருதிற னாக ஓங்கிய இமையவன்*
.—சிலம்பு. 6 : 42-43, 28 : 74-75.

*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக*
—கலி. 38 : 1-2.

*நீலமேனி வாலிழை பாகத் தொருவன்*
—ஐங். க.வா. 1 : 1-2.

பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்

—புறம். க. வா. 1 : 7-8.

### 2.2.2. சிவன் அணிவன

சிவன் கொன்றை, கங்கை, பிறை இவற்றைத் தலையில் அணிகலன்களாக அணிந்தும், மேனி முழுதும் திருநீற்றை அணிந்தும், மார்பில் பூணூல் அணிந்தும், அரையில் புலித் தோல், யானைத் தோல் இவற்றை ஆடையாக அணிந்தும் விளங்குபவன். சிவன் அணிவனவற்றைக் கொன்றையைத் தலையிலும் மார்பிலும் அணிந்தவன், தலையில் கங்கை சூடியவன், தலையில் பிறை சூடியவன், திருமேனியில் திருநீறு அணிந்தவன், மார்பில் பூணூல் அணிந்தவன், புலித் தோல் ஆடையன், யானைத் தோல் ஆடையன், காபாலம் ஏந்தியவன் என்ற தலைப்புகளில் காண்பது பயனுடையதாகும்.

#### 2.2.2.1 கொன்றையைத் தலையிலும் மார்பிலும் அணிந்தவன்

சிவன் கொன்றைப் பூ மலையைத் தலைக் கண்ணியாகவும் மார்பில் மாலையாகவும் அணிந்தவன்.

கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்

—அகம். க. வா. 1-2.

கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை

—புறம். க. வா. 1 : 1-2.

கொன்றைத்தார் சுவற்புரள —கலி. க.வா. 1 : 11.

மணிமிடற்று மாண்மலர்க் கொன்றை யவன்

—கலி. 142 : 27-28.

#### 2.2.2.2. தலையில் கங்கை சூடியவன்

சிவன் தலையில் கங்கையைச் சூடியவனாகத் திகழ்

பவன். இத் திருவுருவம் கங்காதரர் என்று அழைக்கப்படு கிறது.



கங்காதரர்

பிரகதீஸ்வரர் கோயில், கங்கைகொண்ட சோழபுரம்

*கங்கை முடிகணிந்த கண்ணுதலோன்*

*—சிலம்பு. 12 : 9-3.*

*எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி*
*விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்*
*தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி*

*—பரி. 9 : 4-6.*

*மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே*

*ஐங். 207 : 4.*

*தேறுநீர் சடைக்கரந்து* *—கலி. க.வா. 1 : 2,*

ஈர்ஞ்சடை அந்தணன் —கலி. 38 : 1.

நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே
—புறம். 1 : 12-13.

### 2. 2. 2. 3. தலையில் பிறை சூடியவன்

சிவன் தலையில் பிறையைச் சூடியவனாகத் திகழ்பவன்.

முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
—அகம். க வா. 1 : 11.

கொலைவன் சூடிய குழவித் திங்கள் —கலி. 103 : 15.

புதுத்திங்கட் கண்ணியான் —கலி. 150 : 17.

பிறைமுடிக் கண்ணிப் பெரியோன் —சிலம்பு 11 : 72.

குழவித் திங்கள் இமையவ ரேத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்
—சிலம்பு. 2 : 38-39.

### 2. 2. 2. 4. திருமேனியில் திருநீறு அணிந்தவன்

சிவன் முப்புரத்தை எரித்த சாம்பலைத் தன் திருமேனியில் அணிந்துள்ளான்.

மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து
—கலி. க, வா. 1 : 8.

### 2. 2. 2. 5. மார்பில் பூணூல் அணிந்தவன்

சிவன் மார்பில் பூணூல் அணிந்துள்ளான்.

மார்பினஃதே மையில் நுண்ஞாண்
—அகம். க. வா. 1 : 3.

### 2. 2. 2. 6. புலித்தோல் ஆடையன்

சிவன் புலித்தோல் ஆடையை அரையில் அணிந்துள்ளான். சிலம்பில் புலித்தோல் ஆடையைப் பற்றிக் கூறியுள்ள செய்திகள் கொற்றவையைச் சிவனுடைய வடிவத்தில் கூறும்போது சொல்லப்படுகிறது.

வரிகிளர் வயமான் உரிவை தைஇய
—அகம். க. வா. 1 : 14.

*கொலை யுழுவைத் தோலசைஇ* —கலி. க.வா. 1:11.

*புலியின் உரியுடுத்து* —சிலம்பு. 12 : 7 : 1.

*அரியின் உரிவை மேகலை யாட்டி* —சிலம்பு. 12 : 62.

### 2. 2. 2. 7. யானைத்தோல் ஆடையன்

சிவன் யானைத் தோலைப் போர்வையாக உடம்பில் போர்த்துக்கொண்டிருப்பவன். இச் செய்தியைக் கொற்றவையைச் சிவனுடைய வடிவத்தில் கூறும்போது சொல்லப் படுகிறது.

*ஆனைத்தோல் போர்த்து* —சிலம்பு. 12 : 7: 1.

*கரியின் உரிவை போர்த்து* —சிலம்பு 12 : 61.

### 2. 2. 2. 8. கபாலம் ஏந்தியவன்

சிவன் பிரமனின் தலையைக் காபாலமாகக் கொண்டு கையில் ஏந்தியுள்ளான்.

*தலையங்கை கொண்டுநீ கபால மாடுங்கால்*
—கலி. க. வா. 1: 12.

### 2. 2. 3. சிவனது ஆயுதங்கள்

சிவன் கணிச்சி, மழு சூலம், வேல் ஆகியவற்றை ஆயுதங்களாகக் கையில் கொண்டுள்ளான்.

*கையது கணிச்சியொடு மழுவே மூவாய்*
*வேலும் உண்டத் தோலா தோற்கே*
—அகம்.க.வா.1:5-6.

*மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன்* —புறம். 56:2.

*சீறருங் கணிச்சியோன்* —கலி. 2: 6.

*சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடுசீஇ*
*ஏறுதொழூஉப் புகுத்தனர் இயைபுட னொருங்கு*
—கலி. 101: 8-9.

*எரிதிகழ் கணிச்சியோன்* —கலி. 103:25.

*பெரும்பெயர்க் கணிச்சியோன்* —கலி. 105:13.

*மழுவாள் நெடியோன்* —மது. 455.

*அறைவாய்ச் சூலம்* —சிலம்பு. 11:73.

### 2. 2. 4. வாகனமும் கொடியும்

சிவன் ஏற்றை வாகனமாகவும் கொடியாகவும் உடையவன்.

ஊர்ந்த தேறே —அகம். க. வா. 1:7.

ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியு மவ்வே றென்ப—புறம்.க.வா. 1:3-4.

ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
—புறம். 56: 1.

புங்கவ மூர்வோன் —பரி. 8:2.

வெள்ளேறு வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோள்
—முருகு. 151-152.

ஆனேற்றுக் கொடியோன் —கலி. 26: 5.

ஏற்றூர்தியான் —கலி. 150: 13.

## 2. 3. சிவனது ஆடல் அல்லது கூத்து

கூத்துக் கலை பழங்கலை யாகும். பண்டைத் தமிழிலக்கியத்தில் கலித்தொகை, சிலப்பதிகாரம் ஆகிய இரண்டில் மட்டும் சிவன் ஆடிய கூத்துகளாகக் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் ஆகிய மூன்றும் காணப்படுகின்றன.

### 2. 3. 1. கொடுகொட்டி

படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ!
—கலி.க.வா. 1: 5-7.

பாரதி யாடிய பாரதி அரங்கத்துத்
திரிபுர மெரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்
—சிலம்பு. 6: 39-43.

உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்

—சிலம்பு. 28:74-75.

சிவன் பல வடிவங்களை வெளிப்படையாகவும் மறைத்தும் எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுவது 'கொடுகொட்டி' எனப்படும் என்று மா. இராச மாணிக்கனார் கூறுகிறார்.[8]

ஊர் எரிகின்ற காலத்து இறைவன் கைகொட்டி ஆர்த்து ஆடியதால் கொடுகொட்டி என்ற பெயர் ஏற்பட்டது என்றும், இதற்குக் கொடுங்கொட்டி எனவும் கொட்டிச் சேதம் எனவும் வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன என்றும் கூறப்படுகின்றன.[9]



சிவன் நடனமாடும்போது
உமை தாளம்போடுதல்

இறைவன் கொடுகொட்டி என்னும் திருக்கூத்தை ஆடும்போது, இறைவி அருகில் நின்று தமது கைகளால் தாளம் கொட்டினாள் என்றும், பாணி, தூக்கு, சீர் என்னும் தாளப்பகுதி மூன்றில் சீர் என்னும் பகுதி இத் தாண்டவத்தில் சிறப்புப் பெறும் என்றும் கலித்தொகை கூறுகிறது.

தேவர் வேண்ட திரிபுரம் எரியச் செய்த சிவன் உமையை ஒருபாற் கொண்டு கொடுகொட்டி ஆடினான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

### 2. 3. 1. 1. உரையாசிரியர்கள் தரும் விளக்கம்

கலித்தொகைச் செய்யுளுக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் வருமாறு:

> *நின் கையில் ஒலிக்கின்ற பறை பல வாச்சியங் களையும் ஒலியா நிற்கக், கட்புலனாய்ப் பல வடிவங் களையும் மீண்டு நின்னிடத்தே ஒடுக்கிக்கொண்டு, கொடிதாகிய கொட்டி என்னும் கூத்தை நீ ஆடுகின்ற காலத்துப், பக்கம் உயர்ந்த அகன்ற குறியினையுடைய கொடியை ஒத்த இடையினை யுடையாளோ தாளம் முடிந்து விடுங் காலத்தினைத் தன்னிடத்தே கொண்ட சீரைத் தருவாள்? ஆண்டுப் பிறர் இல்லையே.*[10]

மேலும் நச்சினார்க்கினியர் இக்கொடுகொட்டி ஆடலை விளக்கும் ஒரு செய்யுளைத் தாம் எழுதிய கலித்தொகை உரையில் மேற்கோள் காட்டுகிறார். அது வருமாறு:

*கொட்டி யாடற் கேற்றம் ஒட்டிய*
*உமையவள் ஒருபாலாக ஒருபால்*
*இமையா நாட்டத்து இறைவன் ஆகி*
*அமையா உட்கும் வியப்பும் விழைவும்*
*பொலிவும் பொருந்த நோக்கிய தொக்க*
*அவுணர் இன்னுயிர் இழப்ப அக்களம்*
*பொலிய ஆடினன் என்ப மற்றதன்*
*விருத்தம் காத்தற் பொருளொடு கூடிப்*

பொருத்த வரூஉம் பொருந்திய பாடல்
திருத்தகு மரபில் தெய்வத் துதிப்பே[11]

சிலப்பதிகாரச் செய்யுளுக்கு அடியார்க்கு நல்லார் கூறும் விளக்கம் வருமாறு:

பாரதி—பைரவி; அவள் அரங்கம்—சுடுகாடு, தேவர் புரமெரிய வேண்டுதலால் வடவை எரியைத் தலையிலே யுடைய பெரிய அம்பு ஏவல் கேட்ட அளவிலே அப்புரத்தில் அவுணர் வெந்து விழுந்து வெண்பலிக் குவையாகிய பாரதியரங்கத்திலே உமையவள் ஒரு கூற்றினளாய் நின்று பாணி தூக்கு சீர் என்னும் தாளங்களைச் செலுத்தித் தேவர் யாவரினு முயர்ந்த இறைவன் சயானந்தத்தாற் கைகொட்டி நின்று ஆடிய கொடுகொட்டி என்னும் ஆடல்.

திரிபுரம் தீமடுத் தெரியக் கண்டு இரங்காது கைகொட்டி நின்று ஆடுதலிற் கொடுமை யுடைத்தாதல் நோக்கி கொடு கொட்டி என்று பெயர் கூறினார்.[12]

மேலும் கொடுகொட்டி ஆடல் நான்கு உறுப்புகளை யுடைய தென்று சிலப்பதிகார உரையில் மேற்கோள் காட்டுகிறார்.

கொட்டிகொடு விடையோன் ஆடிற்று அதற்குறுப்பு
ஒட்டிய நான்காம் எனல்.[13]

வெற்றிக் காலமன்றி போர்க் காலத்தில் பெண்கள் உடன் இருக்கப் போர் செய்தல் மரபு இல்லை. இங்கு அம்மை சீர்தர இறைவன் ஆடுதலின் இது வென்றிக் கூத்தே என்று கூறப்படுகிறது.[14]

இக்காரணத்தால்தான் சேரன் செங்குட்டுவன் வட ஆரியரை வென்று வஞ்சிமாநகருக்கு வந்து தனது தேவி யுடன் அரண்மனை முற்றத்தில் இருந்தபோது சாக்கையன் என்பவன் சிவன் ஆடிய கொடுகொட்டித் தாண்டவத்தை யாடி மகிழ்வித்ததாகச் சிலம்பு கூறுகிறது.[15]

இக் கொடுகொட்டி ஆடலானது அவுணர்கள் இறந்த போர்க்களத்தில் உமை ஒரு பாலாகவும், இறைவன் ஒரு

பாலாகவும் நின்று அச்சம், வியப்பு, விருப்பு, அழகு முதலியன பொருந்த ஆடுவதாகும்.[16]

### 2. 3. 2. பாண்டரங்கம்

*மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து*
*பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்*
*வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ.*
—கலி. க. வா. 1: 8-10.

*தேர்முன் நின்ற திசைமுகன் காணப்*
*பாரதி ஆடிய வியன்பாண் டரங்கமும்*
—சிலம்பு. 6: 44-45

இறைவன் முப்புரங்களையும் அழித்து, அவுணர்கள் வெந்து வீழ்ந்த சாம்பலைப் பூசி ஆடுவது 'பாண்டரங்கம்' என்று மா. இராசமாணிக்கனார் கூறுகிறார்.[17]

புறப்பொருள் இலக்கணங்களில் வரும் முன்தேர்க் குரவை பின்தேர்க் குரவைகள் போலத் திரிபுரத்தை வென்ற களிப்பால் இறைவன் பாரதி வேடந்தாங்கித் தேர்முன் ஆடினார்; கைகொட்டி ஆடினார் என வரு கிறது. அதனால் அவை முன்தேர்க்குரவை போன்ற தோர் கூத்தாகல் வேண்டும்.[18]

பாண்டரங்கக் கூத்தை இறைவன் ஆடியபோது இறைவி அருகில் நின்று தமது கைகளால் தாளம் கொட்டினாள் என்றும், பாணி, தூக்கு, சீர் என்னும் தாளப் பகுதி மூன்றில் தூக்கு என்னும் பகுதி இக்கூத்தில் சிறப்புப் பெறும் என்றும் கலித்தொகை கூறுகிறது.

இறைவன் வெண்ணீற்றினை அணிந்து ஆடிய கூத்து பாண்டரங்கம் என்று கலித்தொகை கூறுகிறது.

திசைமுகன் காண இறைவன் பாண்டரங்கக் கூத்து ஆடியதாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

### 2. 3. 2. 1. உரையாசிரியர்கள் தரும் விளக்கம்

கலித்தொகைச் செய்யுளுக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் வருமாறு:

மிக்குச் செல்கின்ற போர்களில் பலவாகிய முப்புரகங்ளை வென்று, அந்த வலியாலே அவர்கள் வெந்து வீழ்ந்த நீற்றை அணிகையினாலே 'பாண்டரங்கம்' என்னும் பெயர் பெற்ற கூத்தை நீ ஆடுகின்ற காலத்து, மூங்கிலினது அழகையுடைத் தாகிய அணை போன்ற மெல்லியவாகிய தோள்களை யுடைய வண்டுகள் ஒலிக்கும் கூந்தலை யுடையாளோ அதனிடை நிகழுங் காலத்து அதனையுடைய தூக்கைத் தருவாள்? ஆண்டுப் பிறரில்லையே.[19]

மேலும் நச்சினார்க்கினியர் இப் பாண்டரங்க ஆடலை விளக்கும் ஒரு செய்யுளைத் தாம் எழுதிய கலித்தொகை செய்யுளுரையில் மேற்கோள் காட்டுகிறார். அது வருமாறு:

ஏறமர் கடவுள் மூவெயில் எய்வுழிக்
கூறுகூறாகக் கொடியொடும் படையொடும்
வேறுவே றுருவின் விண்மிசை பரந்தனர்
அவ்வழி ஒளியொடும் உருவொடுந் தோன்றித்
தேர்முன் னின்று திசைதலை பணிப்பச்
சுவையுங் குறிப்பும் ஒழிவில தோன்றி
அவை அவை அவ்வழி யாடினன் ஆட
மைந்தரும் மகளிரும் தந்நிலை யழிய
மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்
கடிய காலக் காற்றென வேற்றவன்
படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே.[20]

சிலப்பதிகாரச் செய்யுளுக்கு அடியார்க்கு நல்லார் தரும் விளக்கம் வருமாறு:

வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரி பூட்டி நெடும்புற மறைத்து வார்துகின் முடித்துக் கூர்முப் பிடித்துத் தேர் முன் நின்ற திசைமுகன் காணும்படி பாரதி வடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந் தாடிய பாண்டரங்கக் கூத்தும்[21]

மேலும் பாண்டரங்கக் கூத்து ஆறு உறுப்புகளை யுடையது என்று சிலப்பதிகார உரையில் மேற்கோள் காட்டுகிறார்.

பாண்டரங்கம் முக்கண்ணான் ஆடிற்று அதற்குறுப்பு ஆய்ந்த ஆறாம் எனல்[22]

இப்பாண்டரங்கக் கூத்தும் வென்றிக் கூத்து என்று கூறப்படுகிறது.[23]



திரிபுராந்தகன்

திருவதிகை, காஞ்சி கைலாச நாதர், எல்லோரா குகை கோயில் போன்ற பல தலங்களில் சிவன் வில்லும் அம்பும் பிடித்து நிற்கும் நிலையில் அவன் திரிபுரம் எரித்த நிகழ்ச்சி சிற்பமாக் கப்பட்டுள்ளது. இவ்வுருவத் திற்குத் திரிபுராந்தகன் என்பது பெயர்.

கொடுகொட்டி பாண்டரங்கம் ஆகிய இரண்டு கூத்தும் சிவன் திரிபுரம் எரித்த வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு ஆடப்படுவன. எனினும், கொடுகொட்டி ஆண் மகன் ஆடும் தாண்டவம், பாண்டரங்கம் பெண்மகள் ஆடிய லாஸ்யம் என்பதும், அவைகளை இறைவனே ஆடிக் காட் டினான் என்பதும் உணதற்குரியன என்று கூறப்படுகிறது.[24]

### 2. 3. 3. காபாலம்

சிவன் காபாலக் கூத்தாடுதல் பற்றிக் கலித்தொகை இலக்கியம் மட்டும் கூறுகிறது.

*கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்*

*தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால்*
*முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ!*
—*கலி. க. வா. 1: 11-13.*

சிவன் புலியைக் கொன்று, அதன் தோலை அணிந்து, கொன்றை மாலை தோளிலே அசையும்படி பிரமன் தலை ஒன்றைக் கையில் ஏந்தி ஆடுங் கூத்துக் 'காபாலம்' என்று மா. இராசமாணிக்கனார் கூறுகிறார்[25].

இறைவன் காபாலம் என்னும் கூத்தை ஆடும்பொழுது இறைவி தாளத்தின் முதலெடுப்பாகிய பாணியைத் தரு கின்றாள் என்று கலித்தொகை கூறுகிறது.

### 2. 3. 3. 1. உரையாசிரியர் தரும் விளக்கம்

நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம்:

*கொலைத் தொழிலையுடைய புலியைக் கொன்று அதன் தோலை உடுத்துக் கொன்றைப் பூவாற் செய்த மாலை தோளிலே அசைய, அயன் தலையை அகங் கையிலே ஏந்துகையினாலே காபாலமென்று பெயர் பெற்ற கூத்தை நீ ஆடுங்காலத்து, முல்லையை யொத்த எயிற்றினையுடையாளோ ஒரு தாளத்தின் முதல் எடுக்குங் காலத்தினையுடைய பாணியைத் தருவாள்? ஆண்டுப் பிறரில்லையே.*[26]

மேற்கூறிய மூன்று கூத்திற்குமான தாளத்தைப் பற்றிக் கலித்தொகை கூறுகிறது. 'தாளம் சிறந்த இடத்தைப் பொருந்துமாயினும் தாளத்தின் மூன்று உறுப்புக்களுள் சீர், தூக்கு, பாணி என்பன ஒவ்வொரு கூத்திற்கும் சிறந்த தாக அறிவிக்கப்படுகிறது.'[27] என்று கூறப்படுகிறது.

## 2. 4. சிவனது குணங்கள் அல்லது இயல்புகள்

சிவன் அழிக்குங் கடவுளாகவும், எண்வகைக் குணத் தானாகவும், தவத்தோனாகவும், உயிர்களைக் காப்பவ

னாகவும் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் அவனது குணத்தைப் பற்றிக் கூறுகின்றன.

2. 4. 1. அழிக்குங் கடவுள்

சிவன் படைத்தவற்றை ஊழிக் காலத்தில் அழித்து', அவைகளை மீண்டும் படைப்பவன். அதனால், அவன் அழிக்கும் கடவுளாகக் கூறப்படுகிறான்.

காஅய் கடவுள் —பரி. 5: 13.

அருந்தெறற் கடவுள் —சிலம்பு. 13: 137.

கொலைவன் சூடிய குழவித் திங்கள் —கலி. 103: 15.

மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய்
—கலி. க. வா. 1: 4.

மடங்கற்போற் சினைஇ —கலி 2:.3.

சீறரு முன்பினோன் —கலி. 101:8.

படரணி யந்திப் பசுங்கட் கடவுள்
இடரிய ஏற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம் —கலி.101: 24-26.

சிவன் ஊழி முடிவில் எருமை வாகனங் கொண்ட இயமனின் நெஞ்சைப் பிளந்து அவன் குடரைக் கூலிக்கு அளிப்பான் என்று கலித்தொகைக் கூறுகிறது.

2.4. 2. எண்கையாய்

எண்—எட்டு, கை, தன்மை / குணம். எனவே, எண் வகை குணங்களைக் கொண்டவன் சிவன்.

எண்குணத்தான் —குறள். 1: 9.

எண்கையாய் —கலி. க. வா. 1:4.

சிவனின் எண்வகைக் குணங்களை மணிமேகலை கூறுகிறது.

இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும் யாக்கையுமாய்
—மணி. 27:89-90.

சூரியன், சந்திரன், இயமனன், நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு என்னும் எட்டுவகையாகச் சிவன் இருப்ப

தாக மணிமேகலையில் சைவவாதி மணிமேகலைக்குக் கூறுவதன் வாயிலாக அறியலாம்.

சிவனின் எண்வகை குணம் பற்றி பிங்கல நிகண்டு கூறுவன வருமாறு: பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, ஒருவினையின்மை, குறைவி லறிவுடைமை, கோத்திரமின்மை என்பதாகும்.[28]

### 2. 4. 3. தவத்தோன்

சிவன் செய்தற்கு அரிய தவத்தை யுடையவன்.

அருந்தவத்தோன் —புறம். க.வா. 1:13.

### 2. 4. 4. உயிர்களைக் காப்பவன்

சிவன் படைத்த உயிர்களின் துன்பத்தைத் தீர்ப்பவ னாகவும், பாதுகாப்பவனாகவும் விளங்குகின்றான்.

எல்லா வுயிர்க்கு மேம மாகிய —புறம். க.வா. 1:11

இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும்யாக் கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்
படைத்துவிளை யாடும் பண்பி னோனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
—மணி. 27:89-93.

## 2. 5. சிவன் கோயில்

முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி —புறம். 6.18.19.

என்று காரிகிழார் பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிக்குக் கூறுகிறார். இதனால் பாண்டிய அரசர் மதுரையில் சிவன் கோயிலில் வலம் வந்து சிவனை வணங் கியதை அறியலாம்.

பேரிசை நவிர மேஎ யுறையுங்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும் —மலை. 82-83.

நவிர மலையில் காரியுண்டிக் கடவுள் எனப்பட்ட சிவன் கோயில் இருந்தது என்று மலைபடுகடாம் கூறுகிறது.

நவிரமென்னும் மலை இக்காலத்துத் திரிசூலகிரி யென்னும் பருவதமலை யென்றும் வழங்கப்படுகின்றது; இதில் காரியுண்டிக் கடவுளுடைய திருக்கோயில் இருக்கின்றது; இக்காலத்து வழங்கும் அவரது திருநாமம் ஸ்ரீ காளகண்டேசுவரர் என்பது; இம்மலை திருவண்ணாமலையின் வாயு திக்கில் (வடமேற்கில்) உள்ளது.[28]

### 2. 5. 1. மூவேந்தர் நகரங்களில் சிவன்கோயில்

மூவேந்தர் நகரங்களிலும் சிவனுக்குக் கோயில் இருந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. சோழ வேந்தனின் தலைநகரான புகாரில் இந்திரவிழா நடக்கும்போது முதலில் சிவன் கோயில் கூறப்படுகிறது. மணிமேகலையிலும் புகாரில் இந்திர விழா நடக்கும்போது முதலில் சிவன் கோயில் கூறப்படுகிறது.

*பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*

—சிலம்பு. 5: 169.

*நுதல்விழி நாட்டத் திறையோன் முதலா* —மணி. 1:54.

பாண்டிய வேந்தனின் தலைநகரான மதுரையில், காலை முரசம் முதன்முதலில் சிவன் கோயிலில் முழங்கு வதாகக் கூறப்படுகிறது.

*நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்*

——சிலம்பு. 14: 7.

சேரவேந்தனின் தலைநகரான வஞ்சியில் சிவன் கோயில் இருந்தது என்பது சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்று போர் புரிவதற்கு முன்பு சிவன் கோயிலை வலம் வந்தான் என்பதால் அறியலாம்.

*காலை முரசம் கடைமுகத் தெழுதலும்*
*நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி*
*உலகுபொதி உருவத் துயர்ந்தோன் சேவடி*
*மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து*
*இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங்கொண்டு*

—சிலம்பு. 26: 53-57.

### 2. 6. சிவனும் அந்தணரும்

சிவனை அந்தணர் அருமறை வாழ்த்துவதாகப் புறநானூறு கூறுகிறது.

கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும் படுமே
—புறம். க.வா. 1 : 5–6.

சிவன் வேதங்களை அந்தணர்க்குச் சொன்னான்.

ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
—கலி. க. வா. 1: 1.

நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டின்
ஆறுணர்ந்த வொருமுதுநூல் —புறம். 166: 1-4.

### 2.7. சிவனுக்குரிய சிறப்புகள்

சிவனுக்கே உரிய சிறப்புகளாக இமையவன், ஆதிரையான், ஆலமர் கடவுள் என்பன கூறப்படுகின்றன.

#### 2. 7. 1. இமையவன்

சிவன் நெடிதுயர்ந்துள்ள பனி தவழும் இமைய மலையில் வீற்றிருப்பவன். எனவே அவனுக்கு இமையவன் என்ற பெயர் வழங்குகிறது.

உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்
—சிலம்பு 6: 42-43.

உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
—சிலம்பு 28: 74-75.

கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை
வடதிசை யெல்லை இமய மாக
பதிற்று.43: 6-7.

மஞ்ழதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே
—ஐங். 207:4.

*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக*
—கலி. 38:1-2.

### 2. 7. 2. ஆதிரையான்

சிவனுக்குரிய நட்சத்திரமாகத் திருவாதிரை கூறப்படுகிறது.

*ஆதிரை முதல்வன்* —பரி. 8:6.
*ஆதிரையான்* —கலி. 150:20.

### 2. 7. 3. ஆலமரத்தின் கீழ் இருப்பவன்

உறுதிக்கும் வன்மைக்கும் சான்றாக விளங்குவது ஆலமரம். சிவ வழிபாடு பரந்து விரிந்த ஆலமர நிழலின் கீழ் நிகழ்ந்தது. எனவே, சிவன் ஆலமரத்துக் கடவுளாக அழைக்கப்படுகிறான்.

*ஆலமர் கடவுள்* —புறம். 198: 9.
*ஆல்கெழு கடவுள்* —முருகு. 256.
*ஆலமர் செல்வன்* —கலி. 81: 9, 83 : 14 ; சிறு. 97.
சிலம்பு. 23: 91; 24 : 12: 4; மணி. 3: 144.
*முக்கண் செல்வன் ஆல முற்றம்.* —அகம். 181: 16-17.

## 2.8. முழுமுதற் கடவுள்

பண்டைத் தமிழிலக்கியங்கள் சிவனைத்தான் முதற் கடவுளாகக் கூறுகின்றன.

சிலம்பில் இளங்கோவடிகளும் மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனாரும் இந்திர விழாவைப் பற்றிக் கூறுமிடத்து, புகாரில் திருவிழா நடக்கும் கோயில்களில் சிவனின் கோயிலைத்தான் முதலிற் கூறுகின்றனர்.

*பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
—சிலம்பு. 5: 169.

*நுகல்விழி நாட்டத் திறையோன் முதலாப்*
*பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக* —மணி. 1:54-55.

மேலும் சிலம்பில் மதுரைக் காண்டத்தில் ஊர்காண் காதையில் கோயில்களில் காலை முரசம் இயம்புவதைக் கூறுமிடத்து முதலில் சிவன் கோயிலையே இளங்கோ கூறுகிறார்.

நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்
—சிலம்பு. 14: 7.

மணிமேகலையில் சைவவாதி சிவனின் இயல்புகளைக் கூறுமிடத்து 'தானே எல்லா மானவன்' என்று கூறுகிறான்.

தன்னில் வேறு தானொன் றிலோனும்
அன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்.
—மணி. 27: 94-95.

எனவே, சிவன் தாய் வயிற்றில் பிறக்காமல் தானே தோன்றிய சுயம்புவாக மணிமேகலையில் கூறப்பட்டுள்ளமையை அறியலாம்.

மேலும், இளங்கோவடிகள் 'மறைமுது முதல்வன்' (சிலம்பு. 12:23:1) என்றும், ஆவூர் மூலங்கிழார் 'நன் றாய்ந்த நீணிமிர்சடை முது முதல்வன்' (புறம் 166:1-2) என்றும், மாங்குடி மருதனார் 'தொன்முது கடவுள்' (மது. 41) என்றும் சிவனையே முதற் கடவுளாகக் கூறு கின்றனர்.

மதுரைக் காஞ்சியில் சிவன் தேவர்களுக்குத் தலைவ னாகக் கூறப்பட்டுள்ளான்.

நீரு நிலனுந் தீயும் வளியு
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவா ணெடியோன் தலைவ னாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்.—மது. 453-458.

சிவனின் பிறப்பைப் பற்றித் தேவரும் முனிவரும் மற்ற யாவரும் அறியமாட்டார்கள் என அகநானூறு கூறுகிறது.

மூவா அமரரும் முனிவரும் பிறரும்
யாவரும் அறியாத் தொன்முறை மரபின்

வரிகிளர் வயமான் உரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்.

—அகம். க.வா. 1: 12-15.

## 2. 9. சிவன் பெயரை மக்களுக்கு இட்டு வழங்குதல்

சிவன் பெயரை மகனுக்கு இட்டு / வைத்து வளர்த்து வந்தனர் என்பது சிலம்பின் வாயிலாக அறியலாம்.

சீர்த்தகு சிறப்பின் வார்த்திகன் புதல்வன்
ஆலமர் செல்வன் பெயர்கொண்டு வளர்ந்தோன்.

—சிலம்பு 23: 90-91.

## 2. 10. சிவனோடு தொடர்புடைய கதைகள்

பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவனோடு தொடர்புடைய கதைகள் குறிப்புகளாகக் கூறப்பட்டுள்ளன. இவ்விடத்தில் அக்கதைகள் சுருக்கமாகக் கூறப்படுகின்றன. அவற்றின் விளக்கத்தை அடுத்த இயலில் விரிவாகக் காணலாம்.

### 2. 10. 1. ஆலமர் கடவுள்

சிவன் கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து சின்முத்திரையைக் காட்டி நால்வர்க்கு வேதங்களின் பொருளை உபதேசித்தான். இதுவே ஆலமர் கடவுள் வடிவாகப் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன. பிற்காலத்தில் இவ் வடிவம் தட்சிணாமூர்த்தி வடிவமாகக் கூறப்படுகிறது.

### 2. 10. 2. தக்கனின் யாகத்தை அழித்தல்

தக்கன் என்பவன் சிவனின் மனைவியான தாட்சாயணியின் தந்தை ஆவான். அவன் தன் செருக்கால் பெரிய யாகஞ் செய்து சிவனை அழிக்க முயன்றான். அவன் செய்த யாகத்திற்கு அரி, அயன், இந்திரன் முதலான தேவர்கள் வந்திருந்தார்கள். சிவன் தக்கனுடைய யாகத்தை அழித்ததுடன் வந்திருந்த தேவர்களையும் அழித்து கூத்தாடினான். பண்டைத் தமிழிலக்கியங்கள் இக் கூத்தினைக் குறிப்பிடுகின்றன.

### 2. 10. 3. நஞ்சுண்டமை

அசுரர்களின் வலிமையைப் போல் தேவர்களும் வலிமை பெற வேண்டித் திருப்பாற் கடலைக் கடைந்த போது உண்டான நஞ்சைச் சிவன் எடுத்து உண்டான். அப்பொழுது உமை அவனுடைய தொண்டையைப் பிடித்துக்கொண்டதால் நஞ்சு அவனுடைய கழுத்தில் தங்கியது. அதனால் பண்டைத் தமிழிலக்கியங்கள் மணிமிடற் றண்ணல், மறுமிடற் றண்ணல் போன்றவாறு சிவனை அழைக்கின்றன.

### 2. 10, 4. திரிபுரம் எரித்தமை

வித்துன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் ஆகிய மூன்று அசுரர்கள் முறையே பொன், வெள்ளி, இரும்பு கோட்டைகளைத் தவமிருந்து பெற்றனர். அம் மூவரும் தேவர்களுக்கும் ஏனைய உயிரினங்களுக்கும் தொல்லை கொடுத்து வந்தனர். சிவன் மூன்று அசுரர்களின் கோட்டைகளையும் எரித்துச் சாம்பலாக்கினான். சிவன் திரிபுரத்தை எரித்த சாம்பலை அணிந்து கொடுகொட்டி, பாண்டரங்கம் என்ற கூத்துகளை ஆடினான். அவன் திரிபுரம் எரித்தச் செயல் கோடையில் வெயிலின் இயல்புக்கு உவமையாகப் பண்டைத் தமிழிலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது.

### 2. 10. 5. இராவணன் கயிலையைப் பெயர்த்தமை

சிவன் உமையோடு இமயமலையில் வீற்றிருந்தபோது இராவணன் அம் மலையைத் தூக்க முயன்று முடியாமல் தன் தலையை அறுத்து நரம்புடன் இணைத்து வீணை செய்து சாமகானம் பாடி இறையருளைப் பெற்றான். இதனை உவமையாகப் பண்டைத் தமிழிலக்கியம் கூறுகிறது.

### 2. 10. 6. கங்கையைத் தலையில் அணிந்தமை

பகிரதன் தன் மூதாதையர்க்கு நன்மை செய்ய வேண்டி கங்கையை ஆகாயத்திலிருந்து கொண்டு வந்தான்.

அப்போது சிவன் கங்கையைத் தலையில் தாங்கிக்கொண்டு அவள் வேகத்தை அடக்கினான். இக் கதையின் குறிப்பும் பண்டைத் தமிழிலக்கியங்களில் காணப்படுகின்றது.

### 2. 10. 7. புலித் தோலாடை அணிந்தமை

தாருகாவனத்து முனிவர்கள் பிட்சாடனராக வந்த சிவன் மீது கோபங்கொண்டு அவனை அழிப்பதற்காக ஒரு கொடிய யாகத்தைச் செய்தனர். அந்த யாகத் தீயிலிருந்து புலி, பாம்பு, மான், பூதம் முதலியன தோன்றின. அவற்றை முனிவர்கள் சிவன் மேல் ஏவினர். சிவன் புலியைக் கொன்று, அதன் தோலை ஆடையாக அணிந்தான். இக் கதையைச் சிவன் புலித் தோலாடை அணிந்தவன் என்று பண்டைத் தமிழிலக்கியங்கள் குறிப்பாகக் கூறுகின்றன.

### 2. 10. 8. யானைத் தோலாடை

யானை உருவங் கொண்ட கஜாசூரன் என்னும் அசுரன் மூவுலகில் உள்ளவர்களையும் துன்புறுத்தி வந்தான். தேவர்கள் அவனைக் கொல்லும்படி சிவனிடம் வேண்டினர். சிவன் அவனை அழித்து அவனுடையத் தோலை ஆடையாக அணிந்துகொண்டான். இக் கதையைச் சிவன் யானைத் தோல் போர்த்தவன் என்று பண்டைத் தமிழிலக்கியங்கள் குறிப்பாகக் கூறுகின்றன.

### 2. 10. 9. பிறை சூடியமை

தக்கனது இருபத்தேழு விண்மீன்களை மணந்த சந்திரன் ரோகினி, கார்த்திகை ஆகிய இருவரிடத்து மட்டும் மிகுந்த அன்புடையவனாக இருந்தான். அதனைக் கண்ட தக்கன் சந்திரனுக்குச் சாபம் இட்டான். சந்திரன் சிவனின் திருவடியை அடைந்து வேண்டினான். சிவன் அவனுக்கு அருள் புரிந்து தன்னுடைய சடையில் அணிந்துகொண்டான். இக் கதையைச் சிவன் பிறை சூடியவன் என்று பண்டைத் தமிழிலக்கியங்கள் குறிப்பாகக் கூறுகின்றன.

### 2. 10. 10. உமையொருபாகன்

ஒரு சமயம் பிருங்கி முனிவர் சக்தியை விட்டுச் சிவனை வழிபட்டார். இதனைக் கண்ட உமை கோபங் கொண்டு பிருங்கியைச் சபித்தாள்; பின்னர் பூவுலகுக்கு வந்து தவமிருந்து இறைவனுடைய இடது பாகத்தைத் தமதாக்கிக் கொண்டாள். அதனால் சிவன் ஆண் பெண் உருவம் கொண்டான். சிவன் உமையோடு இருக்கிறான் என்று பண்டைத் தமிழிலக்கியங்கள் குறிப்பாக இக் கதையைக் கூறுகின்றன.

### 2. 10. 11. வேதம் கூறியவன்

சிவன் அந்தணர்களுக்கு வேதம் கூறியதாகப் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன. இதற்கான சரியான கதை கிடைத்திலது.

### 2. 10. 12. தருமிக்குப் பொற்கிழி அருளியமை

பாண்டிய மன்னன் தன் ஐயத்தைத் தீர்ப்பவருக்கு ஆயிரம் பொற்காசுகள் வழங்கப்படும் என்று அறிவித்தான். சிவபெருமான் பாண்டியனின் ஐயத்தைத் தீர்ப்பதற்கு ஒரு பாடலை எழுதி தருமி என்னும் பார்ப்பானிடம் கொடுத்து அவனுக்கு ஆயிரம் பொற்காசுகள் கிடைக்கும்படி செய்தான்.

### 2. 10. 13. நக்கீரருக்கு அருளியமை

சிவன் தருமிக்கு எழுதிக் கொடுத்த பாடலில் பொருட்பிழை இருப்பதாக நக்கீரர் சிவனிடம் வாதிட்டார். இறுதியில் சிவன் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து நக்கீரரை எரித்தான், பின்னர் பாண்டியன் சபையில் உள்ளோர் வேண்டிக்கொள்ள நக்கீரருக்கு அருள்புரிந்தான்.

### 2. 10. 14. சிவனுடைய தேவி

சிவனுக்குப் பல பெயர்கள் வழங்குவது போல சிவனுடைய தேவியும் பல பெயர்களால் வழங்கப்படுகிறாள். அவை உமை, மலை மகள், கொற்றவை, காளி முதலியவையாகும்.

### 2. 10. 15 சிவனுடைய மைந்தர்கள்

சிவனுடைய மக்களாக முருகனையும் விநாயகரையும் புராணங்கள் கூறும். சிவனுடைய மகனாக அகத்தியரைக் கருதுவதற்குச் சில பண்டைத் தமிழிலக்கியங்கள் வழி வகுக்கின்றன.

### 2. 10. 16 சிவனுடைய வழித்தோன்றல்கள்

சோழர்கள் சிவனுடைய வழித்தோன்றல்களாகக் கருதும் வகையில் பண்டைத் தமிழிலக்கியப் பாடல்கள் சில அமைந்துள்ளன.

இவ்வாறு பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவனுடைய திருக்கோலம், சிவனது ஆடல் அல்லது கூத்து, சிவனது குணங்கள் அல்லது இயல்புகள், சிவன் கோயில், சிவனும் அந்தணரும், சிவனுக்குரிய சிறப்புகள், சிவன் முழுமுதற் கடவுளாதல், சிவனோடு தொடர்புடைய கதைகள் முதலியன காணப்படுகின்றன.

## குறிப்புகள்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணை இயல், நூற்பா எண்.5.
2. ஐ. அண்ணாமலை, "சங்க காலச் சிவவழிபாடு", பதினைந்தாவது ஆய்வுக் கோவை - தொகுதி 3, ப - ள் . 3 - 4.
3. தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், நூற்பா எண். 90.
4. வை. இரத்தினசபாபதி அவர்களிடமிருந்து 10-3-84 அன்று நேரில் பெற்ற செய்தி.
5. க. சண்முகசுந்தரம், சங்க இலக்கிய வரலாறு, ப - ள் . 4-8.
6. டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் ஆய்வுக் குறிப்புகளுடன் கூடிய புறநானூறு, ப. 3.
7. மேற்படி, ப. 134.
8. மா. இராசமாணிக்கனார், சைவசமய வளர்ச்சி, ப.16.

9. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 79.
10. நச்சினார்க்கினியர் உரையும் விளக்கமும், கலித் தொகை, ப. 4.
11. மேற்படி, ப . 4.
12. அடியார்க்கு நல்லார் உரை, சிலப்பதிகாரம், ப 192.
13. மேற்படி. ப. 89.
14. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 137.
15. சிலப்பதிகாரம், நடுகற்காதை, அடி எண் 64-79.
16. ஆடல்வல்லன் (ஸ்ரீ ஞானமா நடராசப் பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 78.
17. மா. இராசமாணிக்கனார், சைவசமய வளர்ச்சி, ப.16.
18. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 76.
19. நச்சினார்க்கினியர் உரையும் விளக்கமும், கலித் தொகை, ப.ள். 4-5.
20. மேற்படி. ப. 5.
21. அடியார்க்கு நல்லார் உரை, சிலப்பதிகாரம், ப. 192.
22. மேற்படி, ப. 89.
23. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான், மஹாபிஷேக மலர்), ப. 137.
24. மேற்படி. ப. 80.
25. மா. இராசமாணிக்கனார், சைவசமய வளர்ச்சி, ப.16.
26. நச்சினார்க்கினியர் உரையும் விளக்கமும், கலித் தொகை, ப. 5.
27. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமா நடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 78.
28. தி. சிவன் பிள்ளை (உரையாசிரியர்), பிங்கல நிகண்டு, ப. 17.
29. உ. வே. சா. வின் பத்துப்பாட்டின் மூலமும் மதுரை யாசிரியர் பார்த்துவாசி நச்சினார்க்கினிய ருரையும், ப. 614.

# 3. சிவன் பற்றிய கதைகள்

3. பண்டைத் தமிழிலக்கியங்கள் சிலவற்றில் சிவனோடு தொடர்புடைய கதைகள் குறிப்புகளாகவே காணப்படுகின்றன. சிவனோடு தொடர்புடைய அக் கதைக் குறிப்புகள் சிவனுடைய தேவியர், சிவனுடைய மைந்தர்கள், சிவனுடைய வழித் தோன்றல்கள் ஆகியோரைப் பற்றிக் கூறுவனவாகவும், சிவனுடைய திருவிளையாடல்களைச் சுட்டுவனவாகவும், சிவனுடைய பெருமைகளை முழுமையாகப் பேசுவனவாகவும் அமைந்துள்ளன. இத்தகைய கதைகளிற் பெரும்பாலானவை வடமொழி வேதங்களிலும், புராண இதிகாசங்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. பண்டைத் தமிழ்க் காலத்தில் நிகழ்ந்தனவாகச் சில கதைகள் திருவிளையாடற் புராணங்களிலும் ஸ்தல புராணங்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. வடமொழி வேதங்கள், புராண இதிகாசங்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு சிவன் பற்றிய கதைக் குறிப்புகளைக் கூறும் பண்டைத் தமிழிலக்கியங்களை ஆய்தல் இன்றியமையாததாகும்.

பல்வேறு புராணங்களிலும் இதிகாசங்களிலும் சிவனைப் பற்றிப் பல கதைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் ஒரே கதையைப் பல புராணங்களிற் படிக்கும் போது கதையின் அமைப்பில் சிற்சில மாறுதல்கள் காணப்படுகின்றன. அதனால் பண்டைத் தமிழிலக்கியங்களிற் கூறிய கதைகளுக்கேற்ப புராண இதிகாசங்களிற் கூறப்பட்ட ஒரு சில கதைகள் இங்குக் கூறப்படுகின்றன. அவைகளுக்கு மூலமாக வேதங்களிற் கூறிய கதைகளையும், அவற்றிற்கிடையே காணப்படும் மாறுபாடுகளையும் இவ் வியலில் காணலாம்.

## 3.1 சிவனுடைய தேவியர்

சிவனுடைய தேவியான சக்தி தேவைக்கும் கால நிலைக்கும் ஏற்பப் பல வடிவங்கள் எடுத்தமையைப் புராணங்கள் கூறும். இதற்கேற்ப, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவனுடைய தேவியர் பற்றிய கதைக் குறிப்புகளைக் காணலாம்,

சிவனுடைய தேவிமார் **உமை** (அகம். க. வா. 1:7, பரி. 5:28, முருகு. 153, கலி. 38 : 2, சிலம்பு. 6 : 42, 28 : 74), **மலைமகள்** (முருகு. 257, சிலம்பு. 24, பாட்டு மடை 16:1), **கொற்றவை** (முருகு. 258, சிலம்பு. 12:64), **பழையோள்** (முருகு. 259), **காடமர் செல்வி** (மணி, 6:53, 18 : 115), **காளி** (சிலம்பு, 20 : 39) எனப் பலவகைப் பேர் கொண்டவள் என்பதைப் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன.

*நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை*
*ஐவருள் ஒருவன் அங்கையேற்ப*
*அறுவர் பயந்த ஆறமர் செல்வ*
*ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை*
*மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே*
*வெற்றி வெல்போர்க் கொற்றவைச் சிறுவ*
*விழையணி சிறப்பிற் பழையோள் குழவி*
*வானோர் வணங்குவில் தானைத் தலைவ*

—முருகு. 253 - 260.

இத் திருமுருகாற்றுப்படை அடிகளில் வந்துள்ள 'ஆல்கெழு கடவுட் புதல்வ', 'மலைமகள் மகன்', 'கொற்றவைச் சிறுவ', 'பழையோள் குழவி' என்ற குறிப்புகள் மூலம் முருகன் ஆல்கெழுகடவுளாகிய சிவனுடைய மகன் என்பதும், மலைமகள், கொற்றவை, பழையோள் என்னும் பெயர்கள் முருகனுடைய தாயைக் குறிக்கும் பெயர்கள் என்பதும் பெறப்படுகின்றன. இதனால் சக்தி ஒருத்தியே மலைமகள், கொற்றவை, பழையோள் எனப் பலவடிவம் எடுத்தமை தெரியவரும்.

அடர்த்தெழு குருதி யடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்லள்
அறுவர்க் கிளைய நங்கை இறைவனை
ஆடல்கண் டருளிய அணங்கு சூருடைக்
கானகம் உகந்த காளி தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்—சிலம்பு. 20:34-40.

என்று சிலப்பதிகாரம், வழக்குரை காதையில் பாண்டியனின் கோயில் வாயில் காப்போன் கண்ணகி வழக்காட வந்திருக்குஞ் செய்தியைச் செழியனுக்கு அறிவிக்கும்போது அவளைக் கொற்றவை, பிடாரி, பத்திரக்காளி, காளி, துர்க்கை ஆகிய சக்தியின் ஐந்து வடிவங்களுடன் ஒப்பிட்டுக் கூறுவதாக இளங்கோவடிகள் கூறுகிறார்.

### 3. 1. 1. உமை

சிவன் உமையைத் தன் இடப்பாகத்தில் கொண்டவன் என்று புராணங்கள் கூறுகின்றன. எனவே, சக்தியின் ஒரு வடிவம் உமை என்பதை அறியலாம்.

இதற்கேற்ப, பாரதம் பாடிய பெருந்தேவனார் அகநானூற்று கடவுள் வாழ்த்துப் பாடலில் சிவனைச் 'சேர்ந்தோள் உமையே' (1:7) என்றும், ஐங்குறு நூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலில் 'நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்'' என்றும் சிவன் உமையை இடப்பாகத்தில் கொண்டவனாகக் கூறுகிறார். மேலும் அவர் புறநானூற்று கடவுள் வாழ்த்துப் பாடலில் 'பெண்ணுருவொருதிறன் ஆகின்று, அவ்வுரு தன்னுள் அடக்கிக் கரக்கினுங் கரக்கும்' என்றார்.

பாக முண்ட பைங்கட் பார்ப்பான்
உமையொடு புணர்ந்த காம வதுவையுள் -பரி.5:27-28.

என்று கடுவனிளவெயினனாரும்.

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக
—கலி.38 : 1.-2.

என்று கபிலரும்,

உமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
—முருகு. 153.

என்று நக்கீரரும் சிவன் உமையோடு இருந்தமையைக் கூறுகின்றனர்.

உமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்
—சிலம்பு. 6: 42 - 43.

உமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
—சிலம்பு 28 : 74-76.

என்று சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் உமையவள் ஒருபக்கத்தில் இருக்கச் சிவன் கொடுகொட்டி யாடிய மையை இரண்டு இடங்களிற் கூறுகிறார்.

எனவே, சிவனுடைய தேவி பொதுவாகத் தமிழகத்தில் 'உமை' என்று அழைக்கப்படுவதை அறியலாம். உமைக் குரிய மற்ற பெயர்கள் அவளுடைய செயலைக் கருதி இடப்பட்டவையாகும்.

### 3. 1. 2. மலைமகள்

இமயமலை அரசன் பர்வதராஜனின் மகள் பார்வதி. அவளைச் சிவன் திருமணம் செய்ததாகப் புராணங்கள் கூறும். அதனால் இலக்கியங்கள் பார்வதியை 'மலை மகள்' என்று அழைப்பதை உணரலாம், இதற்கு,

மலைமகள் மகனே —முருகு. 257.

என்ற திருமுருகாற்றுப்படை அடியும்,

மலைமகள் மகனை
—சிலம்பு. 24: பாட்டுமடை. 16 : 1.

என்ற சிலப்பதிகார அடியும் சான்றுகளாக அமைகின்றன. இவற்றில் முருகனை 'மலைமகள் மகன்' என்று அழைப்பதை உணரலாம்.

மலையரையன் பொற்பாவை வாள்நுதலாள்
பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ

உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்துங்
கலைநவின்ற பொருள்க ளெல்லாம் கலங்கிடுங்காண்
சாழலோ.[1]

இப் பாடலில் மாணிக்கவாசகர், சிவன் மலைமகளான பார்வதியை உலகம் அறியத் திருமணம் செய்யாவிட்டால் உலகத்தில் உள்ள கலைப் பொருள்கள் எல்லாம் கலங்கி விடும் என்றார்.

இவ்வாறு மலைமகளான பார்வதி பண்டைத் தமிழ் இலக்கியங்களில் முருகனோடும் சிவனோடும் தொடர்பு படுத்திக் கூறப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

### 3. 1. 3. கொற்றவை

கொற்றவை என்பது சக்தியின் ஒரு வடிவமாகும். இக் கொற்றவை வெற்றிதரும் தெய்வம் என்பதாலும், மறவர்களின் குல தெய்வம் என்பதாலும் இப் பெயர் ஏற் பட்டது. இவ் வடிவத்தில்தான் மகிடாசூரன் போன்ற அரக்கர்களைக் கொன்று வீரச்செயல்கள் செய்தாள் என்று புராணக்கதைகள் கூறும். அக் கதையும் கொற்றவை சிவனுடைய மனைவியானதால் சிவன் செய்த செயல் களைக் கொற்றவை செய்ததாகவும், கொற்றவை திரு மாலின் தங்கையாகப் புராணங்கள் கூறுவதால் திருமால் கண்ணன் அவதாரத்தில் செய்த செயல்களைக் கொற்றவை செய்ததாகவும் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் கூறு கின்றன.

வெற்றி வெல்போர்க் கொற்றவை —முருகு. 258.

என்று நக்கீரர் கூறுவதால் கொற்றவை வெற்றி தரும் தெய்வம் என்பதை அறியலாம்,

மறவர்களின் குலதெய்வம் கொற்றவை என்பது சிலப் பதிகாரம், வேட்டுவ வரியில் ஆறலைக் கள்வர்களான எயினர்கள் கொற்றவைக்கு வழிபாடுசெய்வதால் அறிய லாம்.

இரண்டுவே றுருவில் திரண்டதோள் அவுணன்
தலைமிசை நின்ற தையல் —சிலம்பு. 12 : 65-66.

ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்
—சிலம்பு. 12: வேறு. 7: 1-2.

இச் சிலப்பதிகார அடிகள் கொற்றவை சிவனைப் போல ஆனைத்தோலும் புலித்தோலும் அணிந்து எருமைத் தலையும் மனித உடலுமாகிய இரண்டு வேறு பட்ட உருவிலும் திரண்ட தோளையும் உடைய மகிடா சூரன் என்ற அரக்கனைக் கொன்று அவனுடைய கரிய தலையின் மேல் நின்றாள் என்பதைக் கூறுகின்றன.



துர்கை - கொற்றவை
கங்காஜதாதர ஈஸ்வரம் கோயில்

கொற்றவை சிவனுடைய மனைவி

*மதியின் வெண்தோடு சூடுஞ் சென்னி*
*நுதல்கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்*
*பவள வாய்ச்சீ தவளவாள் நகைச்சீ*
*நஞ்சுண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்து*
*அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்*
*துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சீ*
*வளையுடைக் கையிற் சூல மேந்தி*
*கரியின் உரிவை போர்த்தணங் காகிய*
*அரியின் உரிவை மேகலை யாட்டி*
*சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி*
*வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை.*

—சிலம்பு. 12 : 54 - 64.

*சங்கரி அந்தரி நீலி சடாமுடிச்*
*செங்கண் அரவு பிறையுடன் சேர்த்துவாய்*

—சிலம்பு. 12: வேறு. 20 : 3-4.

இச் சிலப்பதிகார அடிகளில் கொற்றவை சிவனைப் போல் சென்னியில் மதியும் நுதல் விழியும் நஞ்சுண்டு கறுத்த கண்டமும் உடையவள், பாம்பு நாண் பூட்டி மலையை வில்லாக வளைத்தவள், கையில் சூல மேந்திய வள், யானைத் தோலும் புலித் தோலும் அணிந்தவள், சிலம்பும் கழலும் அணிந்தவள், சடையும் அரவும் பிறையும் கொண்டவள் என்று கூறப்பட்டிருப்பதால் அவள் சிவனு டைய மனைவி யாவாள் என்பதை அறியலாம்.

கொற்றவை சிவன் உண்ட நஞ்சை தான் உண்டு அருள் செய்பவள் என்று பொருள்படும் வகையில்,

*விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும்*
*உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்*

—சிலம்பு. 12. வேறு.21 : 3-4.

என்ற சிலம்பின் அடிகள் அமைந்திருக்கக் காணலாம்.

திருமாலின் தங்கையாகச் சிவனுடைய தேவியைப் புராணங்கள் கூறும். இதனையே இளங்கோவடிகளும்,

மாலவற் கிளங்கிளை —சிலம்பு. 12 : 68.

என்றும்,

திருவ மாற்கிளையாள் —சிலம்பு. 12 : வேறு. 3:4.

என்றும் கூறுகிறார்.

எனவே, திருமால் கண்ணன் அவதாரத்தில் மாமனாக வரும் கம்சனின் வஞ்சனையால் அனுப்பிய சக்கரத்தை உதைத்து உடைத்தான். அதுபோல் கொற்றவையும் செய்து அருள் செய்பவள் என்பதை,

மருதின் நடந்துநின் மாமன்செய் வஞ்ச
உருளுஞ் சகடம் உதைத்தருள் செய்குவாய்
—சிலம்பு. 12: வேறு. 22: 3-4.

எனச் சிலப்பதிகாரம் செப்புகின்றது.

சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்திச்
செங்கண் அரிமால் சினவிடைமேல் நின்றாயால்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை உருவாய் மறையேத்த வேநிற்பாய்
—சிலம்பு. 12 : வேறு. 9.

இச் சிலப்பதிகார அடிகள் கொற்றவை செங்கண் திருமாலின் சினவிடைமேல் நின்ற வகையையும், கங்கையை முடியிலணிந்த நெற்றிக் கண்ணையுடைய சிவனின் ஒரு பாகத்தில் மங்கை உருவாய் நின்ற தன்மையையும் வேதம் போற்றும் என்று கூறுகின்றன. கொற்றவை திருமாலின் தங்கையானதால், அவள் சங்கு சக்கரம் ஏந்தி நின்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. சிவனுடைய ஒரு பாகத்தில் பெண்ணுருவாக மறை ஏற்றவே இருப்பவள் என்பதால் சிவனுடைய இடப்பாகத்திலுள்ள சக்தியே கொற்றவை யாவாள்.

இவ்வாறு பண்டைத் தமிழ் இலக்கியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரம் கொற்றவை பற்றிய புராணக்கதைக் கூறுகளை எடுத்தியம்புவதையும், சிவனோடும் திருமாலோடும் தொடர்புறுத்துவதையும் அறியமுடிகிறது.

### 3.1.4 காளி

காளி காடுகளில் உறைபவள். பேய்க் கணங்களைக் கொண்டவள் அவள் 'தாருகா சூரன்' என்ற கொடிய அரக்கனைக் கொன்றவள் என்று புராணங்கள் கூறும். இத்தகைய காளியைப் பண்டைத் தமிழிலக்கியங்கள் வெவ் வேறான பண்புப் பெயர்களைக் கொண்டு அழைக்கின்றன.

*கானகம் உகந்த காளி* —சிலம்பு. 20 : 39.

என்று சிலம்பதிகாரம் கூறுவதால், காளி காட்டில் கோயில் கொண்டிருப்பவள் என்பதை அறியலாம்.

புகாரில் பேய்கள் உலாவும் சுடுகாட்டில் காடமர் செல்வியாகிய காளி கோயில் இருந்தது என்பதையும், அக்கோயிலினுள்ளே இருந்த மரத்தில் உயிர்க்கொடைக் கொடுத்தவர்களின் தலைகள் தொங்கிக்கொண்டிருந்தன என்பதையும்,

*காப்புடை யிஞ்சிக் கடிவழங் காரிடை*
*உலையா வுள்ளமோ டுயிர்க்கட னிறுத்தோர்*
*தலைதூங்கு நெடுமரந் தாழ்ந்துபுறஞ் சுற்றிப்*
*பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றில்*
*காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்*

—மணி 6 : 49-53.

என்ற மணிமேகலை அடிகளின் வாயிலாக அறியலாம்.

மேலும் காடமர் செல்வியாகிய காளி பேய்களுக்கு உணவளிப்பதை,

*காடமர் செல்வி கடிப்பசி களைய*
*ஓடுகைக் கொண்டுநின் றூட்டுநள்*

—மணி. 18 : 115-116.

என்ற மணிமேகலை அடிகள் கூறுகின்றன. இச் செயல் மணிமேகலை கையில் பாத்திரம் ஏந்திச் சோறு அளித்து மக்களின் பசியைத் தீர்த்தமைக்கு உவமையாகச் சொல் லப்பட்டிருக்கின்றது.

*விழையணி சீறப்பின் பழையோள் குழவி* -முருகு 259.

என்று திருமுருகாற்றுப்படையில் முருகனைப் பழையோள் குழவி என்று கூறப்பட்டிருக்கிறது.

திருமுருகாற்றுப்படைக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், 'பழையோள்' என்பதற்குக் 'காடுகாள்' என உரை கூறி, 'காடுகிழாளென்பது இக்காலத்துக் காடுகாளென மருவிற்று. அவளும் இறைவனுடைய சக்தியாகலின், அவளுடைய குழவி யென்றார்.' [2] என்று விளக்கவுரை கூறியுள்ளார்.

உ. வே. சாமிநாதையர், "பழையோள்: 'தொல்லை நாயகி' (தக்க 120)" [3] என்று அடிக் குறிப்பில் கூறியுள்ளார்.

எல்லைநான் மறைபரவு மிறைமகளைச்
சீறிதுரைத்தாள்
தொல்லைநா யகியுடைய பேய்க்கணங்கள்
சொல்லுவாம் [4]

மேற் கூறியவற்றால் சுடுகாட்டை இடமாகக் கொண்டு பேய்களுக்கு உணவளிக்கும் காளியே தொல்லைநாயகி, பழையோள், காடமர் செல்வி, காடுகிழாள், காடுகாள் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டாள் என்பதை அறியலாம்.

பரிபாடலின் எழுபது பாடல்களில் சுடுகாட்கு ஒன்று பாடப்பட்டதாகக் கூறப்படுகிறது. (பரிபாடல் பக்கம் X) இப் பாடல் இப்போது காணவில்லை.

சூருடைக்
கானகம் உகந்த காளி தாருகன்
பேருரங் கிழித்த பெண் — சிலம்பு. 20 : 38-40.

இதற்கு 'அச்சம் விளைக்கும் காட்டினிடத்தைத் தனக்கு இடமாக விரும்பிய காளியும் தாருகனுடைய அகன்ற மார்பினைப் பிளந்த துர்க்கையும்' [5] என ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் உரை கூறியுள்ளார். அவர் காட்டில் கோயில் கொண்டவள் காளி எனவும், தாருகா சூரனைக் கொன்றவள் துர்க்கை எனவும், காளியையும் துர்க்கையையும் வேறுபடுத்திக் கூறினார்.

ஆனால் தாருகனைக் கொன்றவள் காளி எனச் சம்பந்தர் கூறியுள்ளார். அது வருமாறு,

வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
கன்றிவரு கோபம்மிகு காளி கதம்ஓவ
நின்றுநட மாடியிட நீடுமலர் மேலால்
மன்றல்மலி யும்பொழில்கொள் வண்திருவை யாறே.[6]

தாருகனைக் கொன்ற காளியின் கோபந்தணிய, சிவன் நடமாடியதாகச் சம்பந்தர் பாடியுள்ளார்.

பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்கு.
— பெரு. 458-459.

என்று பெரும்பாணாற்றுப்படையில் முருகனைப் பெற்ற இறைவிக்குப் பேய்மகள் நொடி சொன்னதாகக் கூறப் பட்டுள்ளது.

பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடித் தாங்கு
— கலி 89 : 8.

என்று கலித்தொகையில் காட்டில் உள்ள கொற்றிக்குப் பேய் நொடி சொன்னதாகக் கூறப்பட்டுள்ளது. எனவே, கலித்தொகைப் பாடலாசிரியரான மருதனிளநாகனார் காட்டில் கோயில் கொண்ட காளியைக் 'கொற்றி' என்று அழைப்பதை அறியலாம்.

பரணி நூல்களில் காளிக்குக் கூளி கூறியது என்று பாடப்படும்.

சிலப்பதிகாரத்தில் கண்ணகியை மகிடனின் பிடர்த் தலைப் பீடம் ஏறிய கொற்றவை யல்லள், அறுவர்க் கிளைய நங்கை இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு, காளி, தாருகன் பேருரங் கிழித்த பெண்ணு மல்லள் (சிலம்பு 20 : 34 - 40) என்று கூறப்பட்டிருக்கிறது. எனவே, மகிடனைக் கொன்ற கொற்றவையையும் இறை வனின் ஆடல்கண்டு அருளிய அரிவையையும் காளியையும் தாருகனைக் கொன்ற பெண்ணையும் வேறுபடுத்திக் கூறியுள்ளமையை அறியலாம்.

இறைவனை ஆடல்கண் டருளிய அணங்கு
— சிலம்பு 20 : 37-38.

என்பதற்கு 'இறைவனை நட்டமாடச் செய்த பத்திர காளி'[7] என்று ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் உரை கூறியுள்ளார்.

கலித்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடலில் சிவன் கொடுகொட்டியும் பாண்டரங்கமும் காபாலமும் ஆடியபோது பாணியும் தூக்கும் சீரும் தவறாதபடி மாணிழை அரிவை காத்தாகக் கூறப்பட்டுள்ளது. அம் மாணிழை அரிவை உமை ஆகும். அதனால் சிவனின் ஆடல் கண்டு, தாளம் போட்டு அருளிய மாணிழை உமையைத்தான் சிலப்பதிகாரம், 'இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு' என்று கூறியிருக்கிறது என்று தெளியலாம்.

உமை, மலைமகள், கொற்றவை, காளி, பற்றிய செய்திகள் புராணக் கதைகளில் கூறப்பட்டுள்ள வீர செயல்களுக்கு ஏற்ப குறிக்கப்பட்டிருக்கின்றன என்பதும், உமை, மலைமகள், கொற்றவை, காளி முதலான பெயர்கள் 'சக்தி' என்னும் சிவனுடைச் தேவியின் மறுவடிவங்களுக்கான பெயர்கள் என்பதும் மேற்கூறியவற்றான் பெறப்படுகின்றன.

## 3, 2. சிவனுடைய மைந்தர்கள்

சிவனுடைய மைந்தர்களாகக் கணபதி, முருகன் என்று புராணங்கள் கூறும்.

### 3. 2. 1. முருகன்

சிவன் யோகத்தில் இருக்கையில் தேவர்களின் வேண்டுகோளால் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகள் சிதறின. அவற்றை அக்னி சிவனின் கட்டளையால் கங்கையில் விட்டான். கங்கை வெப்பம் தாங்க மாட்டாமல் சரவணத்தில் வைத்துவிட்டாள். அந்த இடத்தி

லிருந்த ஆறு பொறிகளும் ஆறு உருவங்களாயின. அவற்றைக் கார்த்திகை முதலான ஆறு பெண்களும் பாலூட்டி வளர்த்தனர். உமாதேவி அவ்வாறு குழந்தைகளையும் ஒன்றாக எடுத்து ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கூடிய ஒருருவாய்ச் செய்தார். இவ்வாறு முருகன் பிறந்ததாகக் கதை கூறப்படுகிறது.[8]

ஐந்தாவது பரிபாடலில் முருகனுடைய பிறப்பைப் பற்றிக் கூறியுள்ள கதையின் சுருக்கம் வருமாறு:

சிவன் திரிபுரம் எரித்த கோபத்தோடு உமையைக் கூடிப் பிறக்குங் குழந்தையால் தனக்கு ஆபத்து வரும் என்று இந்திரன் பயந்தான். அதனால் சிவனிடம் உமையைக் கூடித் தோன்றும் கருவைச் சிதைக்கும்படி வரங்கேட்டான். வாய்மை தவறாத சிவனும் இந்திரனுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டு கருவைச் சிதைத்துக் கண்டங் கண்டமாகத் துண்டு போட்டான். அக் கருவை முனிவர்கள் எழுவரும் பெற்றுத் தீமூட்டி அதில் போட்டு அவிபாகமாக்கித் தம் மனைவியரிடம் சாப்பிடும்படி கொடுத்தார்கள். அதனைச் சாலினி தவிர மற்ற ஆறு பெண்கள் உண்டு அப்போதே கருப்பங் கொண்டு இமயத்தில் ஓர் சுனையில் தாமரை மலர்ப் பாயின் மீது குழந்தைகளைப் பெற்றார்கள். அன்றைய தினமே இந்திரன் அக் குழந்தைகளைக் கொல்ல அவைகளின் மீது வச்சிராயுதத்தை எறிந்தான். ஆறுவேறு குழந்தைகளின் உருவமும ஒன்றாகி வச்சிராயுதத்தைப் பிடித்துடைத்தெறிந்து விளையாட்டாகவே இந்திரனைப் போரில் வென்றது. அதனால் ஆறுமுகனுக்கு அக்கினி தேவன் கோழியைத் தந்தான், இந்திரன் மயிலையும் எமன் வெள்ளாட்டுக் கடாவையும் தந்தனர். அவரவர் விரும்பித் தமது படைகளைக் கொடுத்ததில் ஆடும் மயிலும் சேவலும் சாபமும் மரனும் வாளும் வேலும் குடாரியுங் கணிச்சியுங் கனலியும் மாலையும் மணியும் பன்னிரு கரங்களிற் கொண்டு முருகன் தேவர்களுக்குத் தலைவனானான்.

இவ்வாறு பண்டைத் தமிழிலக்கியத்தில் கூறப்பட்ட முருகன் பிறந்த வரலாறு புராணக் கதைகளிலிருந்து வேறுபட்டு அமைந்திருக்கிறது.

புராணக் கதைகளும் பண்டைத் தமிழ் இலக்கியங்களும் முருகன் சரவணப் பொய்கையிலுள்ள தாமரை மலர்ப் பாயலில் பிறந்தவன் என்பதையும் தாய்மார் அறுவர் பாலூட்டினர் என்பதையும் கூறுகின்றன. ஆனால் பிறப்பிற்கான காரணமும், பிறந்த விதமும் பற்றிக் கூறுமிடத்து வேறுபாடு காணப்படுகின்றது.

*வடவயின் விளங்கா லுறையெழு மகளிருட்*
*கடவு ளொருமீன் சாலினி யொழிய*
*அறுவர் மற்றையோரு மந்நிலை யயின்றனர்*
*மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்*
*நிறைவயின் வழாஅது நிற்சூ லினரே*
*நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப்*
*பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயற்*
*பெரும்பெயர் முருக* — பரி. 5 : 43-50.

என்று பரிபாடலும்,

*நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை*
*ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப*
*அறுவர் பயந்த ஆறமர் செல்வ* —முருகு. 253-255.

என்று திருமுருகாற்றுப் படையும்,

*சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்*
*திருமுலைப்பால் உண்டான்*
— சிலம்பு 24: பாட்டுமடை 9: 1-2.

என்று சிலப்பதிகாரமும் முருகனைச் சரவணப் பூம் பள்ளியில், தாய்மார் அறுவர் பெற்றுப் பாலூட்டியதைக் கூறுகின்றன.

முனிவர் சிவனுடைய கருவைத் தம் மனைவியர்க்குக் கொடுக்க உடன்பட்டதால்தான்,

*உயர்ந்தவர் உடம்பட.... சலதாரி மணிமிடற்*
*றண்ணற்கு மதியராற் பிறத்தோய்நீ* —பரி: 9: 3-7.

என்று முருகனுடைய பிறப்பைப் பற்றி மற்றொரு பரிபாடல் கூறுகிறது.

*பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே*
*அரிதமர் சிறப்பி னமரர் செல்வன்*
*எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென*
*ஒருவனை வாழி யோங்குவிறற் சேய்*

—பரி. 5: 50-54.

முருகன் பிறந்த தினமே அவனைக் கொல்ல இந்திரன் வச்சிராயுதத்தை வீசி எறிந்தான். அப்போது ஆறு வேறு குழந்தைகளாகப் பிறந்த முருகன் ஒருவனாகி விளையாட்டாகவே இந்திரனைப் போரில் வென்றதாகப் பரிபாடல் கூறுகிறது.

முருகன் பிறந்த தினமே அனுக்குப் பயந்து இந்திரன் வச்சிராயுதத்தை வீசி எறிந்ததால்,

*பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்*
*சிறந்தோர் அஞ்சிய சீருடை யோயே*

— பரி 14:25-26.

என்று முருகனுடைய சிறப்பைப் பற்றி மற்றொரு பரிபாடல் கூறுகிறது.

இவ்வாறு முருகனுடைய பிறப்பு பற்றியும், அவனது செயல் பற்றியும் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன.

### 3. 2. 2. கணபதி

கயமுகாசுரன் என்னும் அசுரனை வெல்ல ஒரு புத்திரனை அளிக்க வேண்டுமென்று தேவர்கள் சிவனிடம் வேண்டச் சிவனின் திருக்கண்டத்திலிருந்து கணபதி தோன்றினார் என்று கதை கூறப்படுகிறது.[9] கணபதி சிவனின் மகன் என்பதைக் கூறும் வகையில்,

*எண்ணும் பொருளினிதே எல்லாம் முடித்தெமக்கு*
*நண்ணுங் கலையனைத்தும் நல்குமால்-கண்ணுதலின்*
*முண்டத்தான் அண்டத்தான் மூலத்தான் ஆலஞ்சேர்*
*கண்டத்தான் ஈன்ற களிறு.*

என்ற ஐந்திணை எழுபது கடவுள் வாழ்த்துப் பாடல் அமைந்துள்ளது. இச் செய்யுளில் கணபதியை வணங்குவதால் எல்லாக் கலைகளையும் பெற முடியும் என்பது கூறப்பட்டுள்ளது.

கணபதியைப் பற்றி மற்ற பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படவில்லை. கணபதி வழிபாடு கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்று ஆய்வாளர் கூறுவர். மேலும் ஐந்திணை எழுபது கடவுள் வாழ்த்துப் பாடல் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டது என்ற கருத்தும் நிலவுகிறது.

வேத காலத்தவர் அதிதி யானையைப் பெற்றதாக அறிந்திருந்தார்கள். அதிதி கடவுளர்க்குத் தாயாவாள். அவள் எட்டுக் குழந்தைகளைப் பெற்றாள். அவைகளில் மார்த்தாண்டம் என்னும் குழந்தையை ஊனமாகப் பிறந்தது என்று வீசியெறிந்தாள். மார்த்தாண்டத்தின் ஊனிலிருந்து யானை தோன்றியது. அதை எல்லாக் கடவுளரின் சம்மதமும் அதிதியின் சம்மதமு மில்லாமல் யாராலும் அடக்க முடியாது என்று அதர்வ வேதம் கூறுகிறது.[10]

### 3. 2. 3. அகத்தியர்

தேவர்கள் வாதாபிக்குப் பயந்து கைலாயத்திற்கு வந்தபோது அவர்களைத் தாங்க முடியாமல் இமயம் தாழ்ந்து, தென்திசை உயர்ந்ததாகவும் அப்போது சிவன் அகத்தியரைத் தென்திசை அனுப்பி உலகத்தைச் சமமாக நிற்கும்படி செய்யச் சொன்னதாகவும் வன்னிய புராணம் கூறும்.[11] இதைக் கந்தபுராணம் பார்வதி பரமேஸ்வரன் திருமணத்தின் போது நடந்ததாகக் கூறுகிறது.

தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தாழ் அருவிப் பொருப்பிற் பொருந -மது. 40-42.

இவ் வடிகளில் 'தொன்முது கடவுள்' என்பது சிவனைக் குறிக்கும்; 'பொருப்பிற் பொருந' என்பது அகத்தியரைக் குறிக்கும்.

இவ் வடிகளுக்கு நச்சினார்க்கினியர்,

பக்க மலையிலே விழுகின்ற அருவியினையுடைய பொதியின் மலையிலிருக்கும் கடவுள், இராவணனைத் தமிழ் நாட்டை யாளாதபடி போக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமை முதிர்ந்த அகத்தியன் பின்னே எண்ணப்பட்டுச் சான்றோனா யிருத்தற்கு மேவின ஒப்பற்றவனே,[12]

என்று பொருள் கூறி,

கூற்றுவனை யுதைத்த கடவுளென்று இறைவனாக்கி, அவன் பின்ன ரென்றது அகத்தியனை யென்று பொருள் கூறின், இறைவனுக்குத் தம்பி யென்றல் சாலாமை யானும், அப்பொரு டருங் காலத்து, முன்னவன் பின்னவன், முன்னோன் பின்னோ னென்றல்லது அச்சொல் நில்லாமையானும் அது பொருந்தாது.[13]

என விளக்கங் கூறினார். ஆனால்,

மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன்

—சிலம்பு. 12: வேறு 23 : 1-2.

என்ற சிலப்பதிகார அடிகளுக்குச் 'சிவபெருமானுக்குப் பின்னோன் ஆகிய அகத்தியன்'[14] என்று ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் உரை கூறியுள்ளார்.

சிவன் பின்னர் மேயவன் அகத்தியன் என்றதால் சிவனுடைய மகனாக அகத்தியர் இருக்கலாம் எனக் கருத இடமேற்படுகிறது. திருமூலர் திருமந்திரத்தில் 'அகத்தியம்' என்ற தலைப்பின் கீழ்க் கூறியுள்ள

நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே.

அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்
அங்கி உதயஞ்செய் மேல்பா லவனொடும்

*அங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி*
*எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே.*[15]

என்ற இரு பாடல்களின் வாயிலாக வன்னிய புராணங் கூறிய கதையும் சிவன் 'நடுவுள அங்கி அகத்திய' என்று அகத்தியரை அழைப்பதையும் அறியலாம். மேலும் வடபால் முனிவன் செய்த யாகத்திலிருந்து அகத்தியன் பிறந்தான் என்பதையும் உணரலாம்.



அகத்தியர்

*நீயே வடபான் முனிவன் றடவினுள் தோன்றிச்*
*செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை*
*உவரா வீகைத் துவரை யாண்டு*
*நாற்ப தொன்பது வழிமுறை வந்த*
*வேளிருள் வேளே விறற்போ ரண்ணல்*

—புறம். 201 : 8 - 12.

இவ் வடிகளில் கபிலர், வேளிர் வடபால் முனிவன் யாகத்தில் பிறந்து வந்த மரபினர் என்றும், அவர்களின் முன்னோர் துவரை ஆண்டு நாற்பத் தொன்பது தலை முறைக்கு முன்பு வந்தவர் என்றும் கூறுகிறார். இதனால் இரண்டாவது தமிழ்ச் சங்க காலத்தில் தமிழ்ப் புலவனாக இருந்த துவரைக் கோமானின் சந்ததியார் வேளிர் எனத் தெரிகிறது.

நச்சினார்க்கினியர்,

> துவாராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண் குடி வேளிருள்ளிட்டாரையும் ..........கொண்டு போந்து.[16]
> மலையமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப் பிறந்த வேளிர்.[17]

என்று கூறினார். இதனால் முதற் சங்க காலத்திலிருந்த பாண்டியனின் நாட்டைக் கடல் கொண்டபோது அகத்தியர் நரபதியாகிய பாண்டியரையும் வேளிரையும் அழைத்து வந்தார் என்பதை நச்சினார்க்கினியர் அறிந்திருந்தமை தெரியவரும்.

> ஓங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்
> தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்
>
> —மணி. 1 : 3-4.

என்று மணிமேகலையில் அகத்தியன் சொல்லச் சேம்பியன் திரிபுரம் எரித்ததாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் சிவன் திரிபுரம் எரிக்கும் முன்பே அகத்தியர் பிறந்தது தெரியவரும்.

ஐந்தாவது பரிபாடலில் சிவன் திரிபுரம் எரித்த பிறகு முருகன் பிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. எனவே, முருகனுக்கு முன்பு பிறந்தவன் அகத்தியன் என்பதை அறியலாம்.

## 3. 3. சிவனுடைய வழித்தோன்றல்கள்

இருக்கு வேதத்தில் 'நான் முன்பு மனுவாகஇருந்தேன். சூரியனாக இருந்தேன். (4:26:1) என்று இறைவன் சொல்லு

வதாகக் கூறப்பட்டிருக்கிறது. எனவே சூரிய குலத்தில் உதித்த மனுவின் சந்ததியராகிய சோழரைச் சிவனுடைய சந்ததியராகப் பண்டைத் தமிழ்க் காலத்தவர் கருதினார்கள் எனலாம். அதனால் புலவர்கள் சிவன் எரித்த திரிபுரத்தைச் சோழன் எரித்தாகப் பாடினார்கள்.

ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறல்
தூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பின்
அடுதல்நின் புகழும் அன்றே —புறம். 39: 5-7.

மாறோக்கத்து நப்பசலையார் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம், 'பகைவர் நெருங்குவதற்கு அஞ்சும் கடும் பலங்கொண்டு அசைந்து செல்லும் முப்புரத்தை அழித்த நின் முன்னோரை நினைத்தால் வெல்லுதல் நின் புகழ் அல்ல' என்று கூறினார்.

ஓங்கெயிற் கதவம் உருமுச்சுவல் சொறியுந்
தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செழியன் —சிறு. 80-82.

வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பில்
தூங்கு மெயிலுந் தொலைத்தலால் —பழ. 155.

வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப
எயின்மூன் றெறிந்த விகல்வேற் கொற்றமும்
—சிலம்பு. 27: 164-165.

தூங்கெயின் மூன்றெறிந்த சோழன் -சிலம்பு. 29:16: 4.

உலகந் திரியா ஓங்குயர் விழுச்சீர்ப்
பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய
ஓங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்
—மணி. 1:1-4.

இவ்வாறு பண்டைத் தமிழிலக்கியங்களில் புலவர்கள் சோழ அரசனைத் திரிபுரம் எரித்தவனாகப் பாடியதால் அவர்கள் சோழரைச் சிவனுடைய வழித் தோன்றல்களாகக் கருதியது பெறப்படும்.

## 3.4. தக்கன் யாகம் அழித்தல்

சிவன் தக்கனின் மகளான தாட்சாயணியை மணந்து கொண்டான். ஒரு சமயம் தக்கன் சிவனையும் தாட்சாயணியையும் மதியாமல் தேவர்கள், பிரம்மா, விஷ்ணு, மற்ற கடவுளர்களுடன் கூடி யாகம் செய்தான். சிவன் தக்கனுடைய யாகத்தையும் யாகத்திற்கு வந்திருந்த தேவர்களையும் அழித்தான். அவர்களுடைய எலும்புகளை ஆபரணமாக அணிந்துகொண்டு பிரம்மனின் தலையைக் கையில் ஏந்திகொண்டு கூத்தாடியதாகப் புராணங்கள் கூறும். இக் கதைக்கு மூலம் வேதத்தில் காணப்படுகிறது.

*கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்*
*தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால்*
*முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ*
—கலி. 1: 11-13.

இக் கலித்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடலின் அடிகளில் சிவன் பிரம்மனின் தலையைக் கையில் கொண்டு காபாலம் ஆடினான் என்றும் அப்போது உமை தாளம் போட்டாள் என்றும் கூறப்பட்டுள்ளது. இக் குறிப்பு சிவன் தக்கனுடைய யாகத்தை அழித்து, பிரமனின் தலையைக் கையிலேந்திக் கூத்தாடினான் என்ற கதையை நினைவூட்டுகிறது.

### 3.4.1. வேதக் கடவுள் தக்ஷன்

வேதத்தில் அதிதி என்பவள் முதல் தேவதையாகக் கூறப்படுகிறாள். அவளிடமிருந்து தக்ஷன் பிறந்ததாகவும் அவள் தக்ஷனிடமிருந்து பிறந்ததாகவும், அவனுக்கு அவள் தேவியாகவும் கூறப்படுகின்றன.

*உத்தான பாதாவிலிருந்து பூமி தோன்றியது.*
*பூமியிலிருந்து இடங்கள் தோன்றின. அதிதியிலிருந்து தக்ஷன் பிறந்தான். அதிதி தக்ஷனிலிருந்து பிறந்தாள். ஏனென்றால் அதிதி பிறந்தாள். ஓ தக்ஷ! அவள் உன்னுடைய மகள். அவளுக்குப் பிறகு கடவுளர் பிறந்*

தனர். அவர்கள் அருள்பெற்று இறவாமையில் பங்கு கொண்டனர். —இரு. 10:72:4-5.

சிவன் உடம்பின் இடப்பாகத்திலிருந்து சக்தி பிறந்து அவனுடைய மனைவி யானாள். அதேபோல் அதிதியிலிருந்து தக்ஷன் பிறந்து அவளுடைய கணவன் ஆனான் எனலாம். அதிதியும் தக்ஷனும் சில கடவுளரின் தாய் தந்தையாகக் கூறப்படுகிறார்கள். இதனை,

கடவுளர் தக்ஷனிலிருந்து வந்தார்கள் —இரு. 6:50:2.

வருணன் மித்ராவுக்குத் தந்தை தக்ஷன் —இரு. 7: 66·2, 8:25:5.

இந்திரனின் தாய் அதிதி —அதர். 6: 38.

என்று வேதங்கள் கூறுவனவற்றால் அறியலாம்.

**பிரஜாபதி தக்ஷன் யாகம்**

சதபத பிராமணவில் (2. 44. 1-2) முதன் முதலில் பிரஜாபதி தக்ஷனால் செய்யப்பட்ட யாகம் தாக்ஷாயணி யாகம் எனப் பெயர் பெற்றது என்பதும், அந்த யாகத்தை தக்ஷபார்வதி என்ற அரசனும் அவனுடைய சந்ததியாரும் செய்தார்கள் என்பதும் கூறப்பட்டிருக்கின்றன. தக்ஷபார்வதி தாக்ஷாயணி யாகம் செய்ததைக் கௌசிதகி பிராமணாவும் (4:4) கூறுகிறது. [18]

**3. 4 2. உருத்திரன் தேவர்கள் செய்த யாகத்தை அழித்தல்**

கடவுளர் உருத்திரனை அழைக்காமல் யாகத்தினைச் செய்தார்கள். அதனால் கோபங்கொண்ட உருத்திரன் அவர்களுடைய யாகத்தை அழித்தான். உருத்திரனின் அம்பு பாய்ந்து சிதைந்த வேள்வி பாகத்தை வீணாக்கக் கூடாது என்று கடவுளர் சிறிது புசான் என்பவனுக்குக் கொடுத்தார்கள். புசான் அதை உண்டதும் அவனுடைய எல்லாப் பற்களும் கொட்டிவிட்டன. இவ்வாறு தைத்திரிய சம்மிதாவில் (2 : 6 : 8) கூறப்பட்டிருக்கிறது. சதபத பிராமணாவில் (1 : 7: 4-6) உருத்திரன் சிதைத்த வேள்வி

பாகத்தைக் கடவுளர் ஒவ்வொருவருக்கும் காட்டியபோது அதைப் பார்த்த பகா என்பவன் கண்ணை யிழந்தான், புசான் என்பவன் அதை உண்டு பல்லை இழந்தான் எனக் கூறப்பட்டிருக்கிறது.[19]

இந்த யாகக் கதைதான் சிவன் தக்கன் யாகத்தை அழித்ததாகக் கூறும் புராணக் கதைக்கு மூலக்கதை யாயிற்று எனலாம்.

இராமாயணத்திலும் பாரதத்திலும் இக் கதை கூறப் பட்டிருக்கிறது. ஆனால் அதில் தக்கனுடைய மகளைச் சிவன் மணந்ததாகக் கூறவில்லை.

### 3. 4. 3. இதிகாச புராணங்களில் கூறப்பட்டுள்ள மாறுபாடுகள்

இதிகாச புராணங்கள் சிவன் தக்கனுடைய யாகத்தை அழித்த கதையை வெவ்வேறு விதமாகக் கூறுகின்றன.

### 3. 4. 3 1. மகாபாரதம் கூறும் கதை

தக்கன் இமாலயத்தில் கங்காத்வரா என்னும் இடத்தில் யாகம் செய்தான். அவன் உருத்திரனை அழைக்க வில்லை. அதனால் அவனிடம் ததீசி என்னும் முனிவர் பெரிய கடவுள் சங்கரன் இல்லாமல் யாகம் செய்யக் கூடாது என்றார். ஆனால் தக்கன் அவர் சொல்லைக் கேட்காமல் திருமாலை யாகத்திற்குத் தலைவனாக்கி னான். உமை தக்கனுடைய மகளானதால் இதை அறிந்து தன் கணவனை அழைக்காததற்குக் கோபங் கொண்டாள். அதனால் சிவன் 'வீரபத்திரன்' என்னும் வீரனைப் படைத்து யாகத்தை அழிக்கும்படி அனுப்பி னான். வீரபத்திரன் தக்கனுடைய யாகத்தை அழிக்கத் தொடங்கியதும் தக்கன் சிவனைப் புகழ்ந்து பாடி னான். அதைக் கேட்ட வீரபத்திரன் மகிழ்ந்து தக்கனி டம் யாகத்தைத் தொடர்ந்து செய்யும்படி சொன்னான்.[20]

### 3. 4. 3. 2. காளிகாபுராணம் கூறும் கதை

சதி தனது தந்தை தக்கன் செய்த யாகத்திற்குத் தனது பதி சிவனை அழைக்காததால் அவமானம் தாங்க

முடியாமல் தற்கொலை செய்துகொண்டாள். இதைக் கேள்வியுற்ற சிவன் யாகசாலைக்கு வந்து தக்கன் தலையைச் சீவிவிட்டுத் தன் மனைவியின் உடலைத் தோள்மேல் வைத்துக்கொண்டு கூத்தாடிக்கொண்டிருந்தான். தேவர்கள் உலகமே அழிந்துவிடப் போகிறது என்று பயந்தார்கள். எனவே, அவர்கள் திருமாலிடம் போய்ச் சிவனின் நடனத்தைத் தடுத்து, உலகம் அழியாதபடி காக்க வேண்டும் என்று கேட்டார்கள். திருமாலும் வந்து சிவனின் நடனத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. எனவே, சக்கராயுதத்தை வீசி சதியின் உடலைத் துண்டு துண்டாக விழச் செய்தார். தலை விழுந்த இடத்தில் சிவன் அமர்ந்து விட்டான். பிரம்மாவும் திருமாலும் சிவனுக்கு ஆறுதல் கூறினார்கள். சிவன் தான் செய்த செயலுக்கு அவமானம் தாங்க முடியாமல் ஓர் இலிங்கமாகி விட்டான். தேவர்கள் சிவலிங்கத்தை வணங்கினார்கள்.[21]

### 3,4.3.3. அபிதான சிந்தாமணி கூறும் கதை

தக்கன் பிரமனின் மானச புத்திரர்களில் ஒருவன். அவன் சிவனை எண்ணித் தவமிருந்து உமையை மகளாகப் பெற்று தாக்ஷாயணி என்று பெயரிட்டு வளர்த்தான். பின்னர் தன் மகளைச் சிவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். ஒருநாள் அவன் திருக்கைலைக்குச் சென்றபோது அவனைப் பூத கணங்கள் தடுத்தார்கள். அதனால் கோபங் கொண்டு அவன் திருமாலை யாகத் தலைவராக்கி ஒரு வேள்விச் செய்யத் தேவர் இருடியர் முதலானோர்க்கு அழைப்பு அனுப்பினான். யாகத்திற்கு வந்திருந்த ததீசி முனிவர் சிவனுக்கு அவி கொடுக்கும்படி சொன்னதைக் தக்கன் கேட்கவில்லை. அவன் யாகத்திற்கு வந்த தாக்ஷாயணியையும் வரவேற்கவில்லை. அதனால் அவள் யாகம் சுடுகாடாக வேண்டும் என்று சாபங் கொடுத்துவிட்டுப் போய்ச் சிவனிடம் யாகத்தை அழிக்கும்படி வேண்டினாள். சிவன் வீரபத்திரன் என்பவனைப் படைத்தான். தாக்ஷாயணி மகாகாளியைப் படைத்

தாள். வீரபத்திரனும் மகாகாளியும் பூத கணங்களோடு போய் யாக சாலையில் புகுந்து தக்கன் தலையை அறுத்தனர். அத் தலையை ஒரு பூதம் விழுங்கியது. பிரமன் தன் மகனை எழுப்பும்படி சிவனை வேண்டினான். தக்கனது தலை காணாமல் போகவே சிவன் ஒரு ஆட்டுத் தலையை வைத்துத் தக்கனை எழுப்பினான். தக்கன் கங்காதீரத்தில் சிவனைப் பிரதிஷ்டை செய்து(நிலைநிறுத்தி வழிபாடு செய்து சிவகணத் தலைமை பெற்றான்.[22]

### 3. 4. 3. 4. குமார சம்பவத்தில் கூறியது

காளிதாசனுடைய குமார சம்பவத்தில் (1: 21) சதி தன் கணவனைத் தனது தந்தை தக்ஷன் அவமதித்ததால் யோகத்தின் மூலம் உடலை விட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

*தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்*
*தக்கன்றன் வேள்வியில் தாமோ தரன்தானுஞ்*
*சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட*
*அக்கி உமிழ்ந்தது வாயுக் கரத்திலே.*[23]

இத் திருமந்திரப் பாடலில் தக்கனுடைய யாகத்தைச் சிவன் அழித்தபோது அவன் மீது திருமால் சக்கராயுதத்தை வீசினார் என்றும், அந்தச் சக்கரம் வாயுவின் கரத்தில் விழுந்து நெருப்பைக் கக்கியது என்றும் கூறப்பட்டுள்ளன. இப் பாடலில் வீரர் என்று சிவனைக் கூறப்பட்டுள்ளது. ஆனால் சிவன் படைத்த வீரபத்திரன் தக்கன் யாகத்தை அழித்ததாகச் சில புராணங்கள் கூறுகின்றன.

இவ்வாறு தக்கனுடைய யாகத்தைச் சிவன் அழித்ததை வெவ்வேறு முறையில் இதிகாச புராணங்கள் கூறுகின்றன. அப் புராணக் கதைக்கு மூலமாக வேதத்தில் ஒரு கதை அமைந்துள்ளது. கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலில் சிவன் பிரமனின் தலையைக் கையில் ஏந்திக் காபாலக் கூத்தாடினான் என்ற குறிப்பு தக்கன் யாகத்தை நினைவுபடுத்துவதாக அமைந்துள்ளது.

## 3.5. திரிபுரம் எரித்தமை

தாரகா சூரன் மக்கள் வித்துன்மாலி. தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் சிவனைப் பூசித்து முறையே பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைப் பெற்று, அவைகளின் மூலம் தேவர்களைத் துன்புறுத்தி வந்தனர். தேவர்களின் வேண்டுகோளின்படி சிவன் அவர்களுடைய மூன்று கோட்டைகளையும் அழித்தான் என்று புராணங்கள் கூறும்.

திரிபுரம் எரித்த கதை பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பல நிலைகளில் காணப்படுகின்றது. சிவன் திரிபுரம் எரித்த செயலைச் சுருங்கச் சொல்லி; அதனையே அவனுடைய மெய்க்கீர்த்தியாகவும், உவமையாகவும் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பரக்கப் பேசுகின்றன. இதனால் சிவன் செய்த செயற்கரிய ஆற்றல்களில் சிறந்தது அவன் திரிபுரம் எரித்தமை எனப் பண்டைத் தமிழர் அறிந்திருந்தமை தெரியவரும். சிவன் திரிபுரம் எரித்த செயலை,

*ஆதி யந்தண னறிந்துபரி கொளுவ*
*வேத மாபூண் வையத்தே ரூர்ந்து*
*நாக நாணா மலைவில் லாக*
*மூவகை ஆரெயி லோரழ லம்பின் முளிய*
*மாதிர மழலவெய் தமரர் வேள்விப்*
*பாகமுண்ட பைங்கட் பார்ப்பான்* —பரி 5: 22 - 27.

எனப் பரிபாடல் சுருக்கமாகக் கூறுகிறது. இதில் முருகன் பிறந்த வரலாற்றைக் கூறும்போது, வையகம் என்னும் தேரில் வேதம் என்னும் குதிரைகளைப் பூட்டி, பிரம்மன் தேரைச் செலுத்த, சிவன் நாகத்தை நாணாகக் கட்டி மலையை வில்லாக வளைத்து, தீயம்பை எய்து முப்புரத்தை அழித்தான் என்றும், அந்த வெற்றிக் களிப்பால் அமரர் செய்த வேள்வியின் அவிப் பாகத்தை உண்டான் என்றும் கூறப்பட்டுள்ளன. நான்முகன் தேரோட்டினான் என்பதைச் சிலப்பதிகாரமும் (6 : 44) கூறுகிறது.



சிவன் திரிபுரம் எரித்தல்
திருவதிகை வீரட்டானம்.

தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக
அடங்காதார் மிடல்சாய அமரர்வந் திரத்தலின்
மடங்கற்போற் சினைஇ மாயஞ்செய் அவுணரைக்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் முகம்போல் ஒண்கதிர் தெறுதலின்
சீறநம் கணிச்சியோன் சினவலி னவ்வெயி
லேறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந் தியங்குந
ராறுகெட விலங்கிய வழவலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய

—கலி. 2: 1-10.

அயந்திகழ் நறுங்கொன்றை யலங்கலந் தெரியலான்
இயங்கெயி லெயப்பிறந்த எரிபோல எவ்வாயுங்
கனைகதிர் தெறுதலின் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்
—கலி. 150: 1-6.

இவ்விரு கலித்தொகைப் பாடல்களில் சிவன் திரிபுரம் எரித்த செயல் தலைவன் செல்லும் காட்டு வழியின் இயல்புக்கும் கதிரவனின் வெப்பத்திற்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கு மொருகண் போல
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற —புறம் 55: 1-6.

இப் புறநானூற்று அடிகளில் மலையாகிய வில்லில் பாம்பாகிய நாணினைக் கட்டி ஒரு அம்பு எய்து முப்புரத்தை எரித்து அமரர்க்கு வெற்றி தந்த சிவனுடைய நெற்றிக் கண் போலப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் மூவேந்தருள் மேம்பட்டவன் என்று உவமையாகக் கூறும் பொருட்டு திரிபுரம் எரித்த கதை கூறப்பட்டுள்ளது.

பாரதி யாடிய பாரதி அரங்கத்துத்
திரிபுர மெரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்
தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி ஆடிய வியன்பாண் டரங்கமும்
—சிலம்பு 6 : 39-45.

இச் சிலப்பதிகார அடிகளில் தேவர் வேண்ட சிவன் திரிபுரத்தைத் தீ அம்பினால் எரித்துச் சுடுகாட்டில் உமை யவள் ஒரு பக்கத்தில் இருக்கக் கொடுகொட்டியும் பாண்ட ரங்கமும் ஆடியதாகக் கூறப்பட்டுள்ளது. கலிதொகை இரண்டாவது பாடலிலும் தேவர்கள் வேண்ட சிவன் திரிபுரம் எரித்தமை கூறப்பட்டுள்ளது.

சிவன் திரிபுரம் எரித்துக் கொடுகொட்டியும் பாண்ட ரங்கமும் ஆடியபோது உமை தாளம் போட்டதாகக் கலித்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடல் அமைந் துள்ளது.

*ஓங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்*
*தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்*
—மணி 1 : 3-4.

என்று மணிமேகலையில் அகத்தியர் சொல்லச் சிவன் முப்புரம் எரித்ததாகச் சோழனைப் பற்றிக் கூறுமிடத்துக் குறிப்பிடப்பட்டுள்ளது.

*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்*
—கலி. 38:1.

*மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்*
—முருகு. 154.

என்று சிவன் திரிபுரம் எரித்ததை அவனுடைய மெய்க் கீர்த்தியாகப் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன.

**3. 5. 1. வேதத்தில் கூறிய புரம் எரித்த கதை**

*கடுந்தன்மையனான தீக்கடவுளே! நீ ஒரு வில்லாண்மை*
*வல்லானை யொப்பவுங் கூர்ங் கொம்பு வாய்ந்த*
*ஒரு காளையினை யொப்பவும் புரங்களைப் பொடி*
*செய்தனை* —இரு. 6. 16 : 39.

*அக்கினி கோட்டையை அழித்தவன்* —இரு. 7: 6;2.

இவ்விரு இருக்கு வேத மந்திரங்களில் அக்கினி கோட்டையை அழித்ததாகக் கூறியது முக்கண்ணன் தீ அம்பினால் முப்புரம் எரித்தான் என்ற கதைக்கு மூலமாக

மறைமலையடிகளும்[24] என். வெங்கட்டரமனய்யாவும்[25] கருதுகிறார்கள்.

வஜசனேயி சம்யித (5.8) அக்கினியின் உடல் இரும்பு வெள்ளி தங்கப் பேழையில் அடைக்கப்பட்டு அது தீமையைத் துறத்திச் சென்றதாகக் கூறுகிறது. இதற்கு வட மொழி ஆய்வாளர் அசுரர்கள் சண்டையில் தோற்றுத் தவம் செய்து பூமியில் செம்புக் கோட்டையும் காற்று மண்டலத்தில் வெள்ளிக் கோட்டையும் கட்டியதாகக் கதை கூறுவர். இக் கதை சதபதபிராமண (3. 4. 4. 31) வில் தேவர்கள் அசுரர்கள் கோட்டைகள் கட்டுவதற்குப் பொறாமை கொண்டு அதை ஓர் இடி அம்பினால் அழித்தார்கள் என்று கூறுகிறது.[26]

இக் கதையை அயித்ரேய. பிராமண (1. 23. 25.) சற்று வேறு விதமாகக் கூறுகிறது. அசுரர்கள் பூமியை இரும்புக் கோட்டையாகவும் காற்று மண்டலத்தை வெள்ளிக் கோட்டையாகவும் விண்வெளியைத் தங்கக் கோட்டையாகவும் செய்தார்கள். அவர்களுக்கு எதிராகத் தேவர்கள் பூமியை அரங்கமாகவும், காற்று மண்டலத்தை அக்கினி பீடமாகவும், விண்வெளியை ஆவுதி சேருமிடமாகவும் செய்தார்கள். அவர்கள் அக்கினியை அம்பாகச் செய்தார்கள். அதன் சால்ய சோமா என்னும் கூரிய முனை விஷ்ணு என்றும் சிறகு வருணன் என்றும் கூறப்படும். இரும்பினால் செய்த வில்லின் மூலம் அம்பெய்து கோட்டைகளை அழித்தார்கள்.[27]

தைத்திரிய சம்யிதாவில் அசுரர்கள் இரும்பு வெள்ளி தங்கக் கோட்டைகளைச் செய்தார்கள் என்றும் தேவர்கள் அக்கினியை அம்பாகச் செய்தார்கள் என்றும், அதன் சால்ய சோமாவாகிய கூரிய முனை விஷ்ணு என்றும், அவர்கள் அம்பெய்ய உருத்திரனைத் தேர்ந்தெடுத்தார்கள் என்றும், உருத்திரன் அம்பெய்து கோட்டைகளை எரித்தான் என்றும் கூறப்பட்டுள்ளன.[28]

எனவே சிவன் திரிபுரம் எரியத்தமைக்கு மூலக்கதை வேதத்தில் இருப்பதை அறியலம்.

வால்மீகி இராமாயணத்தில் உத்தர காண்டத்தில் இராவணன் சிவனைத் திரிபுராந்தகன் என்று கூறுகிறான். ஆரண்ய காண்டம் 64 வது சர்க்கத்தில் சிவன் திரிபுரம் அழித்தபோது கொண்ட கடும் முகத் தோற்றத்தை போல் சீதை காணாதபோது சினந்து இம் மூவுலகங்களையும் சீதை கிடைக்காமல் போனால் அழிப்பேன் என்று கோபாவேச மாகக் கூறுவதாக அமைந்துள்ளது.

வியாச பாரதத்தில் கர்மபருவம் 34-ம் அத்தியாயத்தில் சிவன் திரிபுரம் எரித்தமை கூறப்பட்டுள்ளது.

வித்துன்மாலி, தார்காக்ஷன், கமலாக்ஷன் ஆகிய மூவ ரின் தொல்லை தாங்காது தேவர்கள் அவர்களுடைய கோட்டைகளை அழிக்கும்படி சிவனை வேண்டினர். சிவன் அவர்களிடம் அசுரர்களின் சிவப்பற்று மாறினால் அவர் களுடைய செல்வம் குறையும் என்றான். தேவர்கள் திரு மாலிடம் சென்று சிவன் கூறியதைச் சொன்னார்கள். திருமால் புத்தராக அவதாரம் எடுத்துப்போய் அசுரர்களின் சிவபக்தியை மாற்றினார். அதன் பின் சிவன் அசுரர் களின் இறுமாப்பைக் கெடுக்க தேவர்களிடம் தேர் கொண்டுவரச் சொன்னான். திருமால் சூர்ய சந்திரர் களைத் தேருருளையாகவும், காலம், வானம், உதயகிரி, அத்தகிரி, காட்டை, கணம், லவம், வேள்வி, ஐம்பூதம், இந்திரியம் இவற்றை முறையே பார், மேலிடம், நுகம், முன் கொம்பு, கொம்புக்காதாரப் பொருள்களாகவும், புராணங்களைப் படமாகவும், உலோகாலோக பர்வதம் படியாகவும், அஷ்டகுல பர்வதங்கள் விதானமாகவும், அண்டமுகடு கொடிஞ்சியாகவும், இடைவெளி தட்டாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும், வாசுகியை நாணாகவும், மேருவை வில்லாகவும், பிரமனைத் தேரைச் செலுத்தும் சாரதியாகவும் கொண்டு தேர் செய்தனர். சிவன் தேர் மேலிருந்து வில்லைக் கையிலெந்தித் திருமாலை அம்

பாக்கி எய்யும் சமயத்தில் திருமாலின் மனதில் உதித்த இறுமாப்பை எண்ணிச் சிரித்தான். அச் சிரிப்பின் ஒளியினால் முப்புரம் தீப்பற்றி எரிந்தது. ஆனால் அசுரர்கள் மூவரும் சிவபூசையை விடாமற் செய்து வந்ததால் தீப்படாமல் காக்கப்பட்டனர். இவ்வாறு அபிதான சிந்தாமணியில் திரிபுரம் எரித்த கதை கூறப்பட்டுள்ளது.[29]

இவ்வாறு திரிபுரம் எரித்த கதைக்கு மூலம் வேதத்தில் காணப்படுவதையும் அக் கதை பலவாறு கூறப்படுவதையும், பண்டைத் தமிழ் இலக்கியங்களில் திரிபுரம் எரித்த கதை சுருக்கமாகவும், உவமையாகவும், மெய்க்கீர்த்தியாகவும், கூறப்பட்டிருப்பதையும் அறியலாம்.

### 3. 6. நஞ்சுண்டமை

சிவன் பாற்கடலில் அமிழ்தம் கடையும் போது உண்டான நஞ்சை தேவர்கள், அசுரர்கள், மற்றும் விஷ்ணு முதலானோரைக் காப்பாற்றுவதற்காக உண்டான். உமை அவனுடைய தொண்டையைப் பிடித்துக் கொள்ளவே நஞ்சு அவனுடைய கழுத்திலேயே தங்கிவிட்டது என்று புராணங்கள் கூறும்.

பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவனைப் பற்றிய கடவுள் வாழ்த்திலும், உவமையிலும், சிவனின் கோயிலைப் பற்றிக் கூறுமிடத்தும் சிவன் நஞ்சை யுண்டு அதனால் ஏற்பட்ட நீல கண்டத்தைக் 'கறைமிடற்று அண்ணல்', 'மணிமிடற்றோன்', 'நீலமணி மிடற்றொருவன்', 'மறுமிடற்றண்ணல்', 'காரியுண்டி கடவுள்' என்ற குறிப்புகளால் கூறுகின்றன.

#### 3. 6. 1. வேதத்தில் நஞ்சுண்டமை

*மனிதன் முனியாகிக் காற்றில் செல்ல ஆற்றல் கொண்டவன்.* —இரு. 10: 136: 3.

*நீண்ட சடைகளையுடையவன், ஓர் உருந்திரன் கொணர்ந்த பரிகலத்திலிருந்த நஞ்சைப் பருகினான்.* —இரு. 10: 136:7.

இந்த இருக்கு வேத மந்திரங்கள் நீண்ட சடையுடைய தனி ஒருவன் உருத்திரன் கொணர்ந்த விஷத்தை யுண்டு காற்றில் செல்லும் சித்தி பெற்றவனானான் என்பதைப் புலப்படுத்துகின்றன.

திருமால் அமிர்தம் கொடுத்து தேவர்களைச் சித்தர்களாக்கினார். சிவன் விஷம் கொடுத்து மனிதர்களை முனிவர்களாக்கினார் எனலாம்.

யஜீர் வேதத்தைச் சேர்ந்த தைத்திரிய சம்மிதாவில் (4 5.1) உருத்திரனை 'நீலக்ரிவோ' (நீலகண்டன்) எனக் கூறப்பட்டிருக்கிறது.

வால்மீகி இராமாயணத்தில் பாலகண்டம் 45 - வது சர்கத்தில் இக் கதை காணப்படுகிறது. விசுவாமித்திரர் இராமர் இலக்குமணனுடன் காட்டு வழியே செல்லும் போது சிவன் பற்றிய கதைகளைக் கூறிக்கொண்டு செல்கிறார். அப்போது இறைவன் நஞ்சுண்ட கதையையும் கூறுகிறார்.

இவ்வாறு சிவன் நஞ்சுண்ட கதைக்கு மூலமாக வேதத்தில் காணப்படுவதையும், அக் கதையைப் புராணங்கள் கூறுவதையும், பண்டைத் தமிழிலக்கியங்களில் இக் கதைக் குறிப்புகள் கடவுள் வாழ்த்திலும் உவமையிலும் காணப்படுவதையும் அறியலாம்.

## 3. 7. இராவணன் கயிலையைப் பெயர்த்தல்

சிவன் உமையுடன் இமயமலையில் வீற்றிருந்தபோது இராவணன் மலர்களால் உருவான விமானத்தில் ஆகாயத்தில் வந்துகொண்டிருந்தான். அப்போது வழியில் வானளாவ உயர்த்துள்ள இமயமலையைக் கண்டான். அதனை நகர்த்தும் பொருட்டு செருக்குடன் தன்னுடைய ஐயிரு கைகளாலும் தூக்க எண்ணி மலையின் அடியில் கையை விட்டுத் தூக்கினான். அதனால் மூன்று உலகங்களும் நடுங்கின. தேவர்களும், மக்களும் ஏனைய உயிரினங்களும் நடுங்கி ஓடினர். சிவனுடன் அமர்ந்து இருக்கும் பார்வதியும் நடுங்கினாள். சிவன் நடந்ததை உணர்ந்து இராவண

னின் செருக்கை அடக்க எண்ணி அம் மலையைத் தன்னுடைய காலால் அழுத்தினான். அதனால் இராவணனுடைய கை மலையின் அடியில் மாட்டிக்கொண்டது. பின்னர் இராவணன் தனது தலையையும் நரம்பையும் அறுத்து வீணை செய்து சாமகாணம் பாடி சிவனின் அருளைப் பெற்றான் என்பது புராணக் கதை.



இராவணன் கயிலையைப் பெயர்த்தல்
எல்லோரா.

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப் பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
எடுக்கல் செல்லா துழல்பவன் போல —கலி. 38 : 1-5.

இக் கலித்தொகைப் பாடல் அடிகள் இராவணன் கைலையைத் தூக்கிய கதையை நினைவுகூர்வதாக அமைந்துள்ளது. இப் பாடலில் இக் கதைக் குறிப்பு தலைவனுடைய நாட்டில் பூத்த வேங்கையைப் புலியெனக். கொண்டு மதயானை தன் கொம்புகளை மரத்தில் குத்தி மாட்டிக் கொண்டு எடுக்க முடியாமல் தவிப்பதற்கு உவமையாகக் கூறப்பட்டிருக்கிறது.

வால்மீகி இராமாயணத்தில் உத்தரகாண்டம் 16-வது சர்க்கத்தில் இக் கதை கூறப்பட்டுள்ளது. அதில் நாரதர் சிவனுடைய பெருமைகளை இராவணனுக்குக் கூறுவதாக வந்துள்ளது இராவணன் கயிலையைப் பெயர்க்கும் போது மூவுலகிலும் பயங்கரமான ஆரவாரம் தோன்ற அவ்வாறு செய்யக் கூடியவர் ஒருவரும் இல்லை என்பதால் இராவணன் என்ற பெயரைச் சிவன் அழைத்ததாகக் கூறுகிறது. திருவதிகை கோயிலிலும் எல்லோராவிலும் இச் செயல் சிற்பமாக உள்ளது.

## 3.8. கங்கையைத் தலையில் அணிந்தமை

பகீரதன் தன் மூதாதையர் நலம் பெற வேண்டிக் கோணர்ந்த கங்கையைச் சிவன் தலையில் தாங்கியதாகப் புராணங்கள் கூறும்.

*எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி*
*விரிசடைப் பொறை யூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்*
*தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி*—பரி 9: 4-6.

இப் பாடலடிகளில் சிவன் பிரமனால் வீழ்த்தப்பட்ட ஆகாய கங்கையை மலர்ந்து வீழும் பூவினைப் போல் கங்கையின் வேகந் தணியச் சடைப்பாரத்தின்கண் தாங்கிய ஒப்பற்ற நிலைமையினையுடைய நீரை உடுத்தும் இயல்புடையவன் என்று கூறப்பட்டிருக்கிறது. இது பகீரதன் கதையை நினைவூட்டுகிறது.

*கங்கை முடிக் கணிந்தவன்.* —சிலம்பு. 12:9.
*தேறுநீர் சடைக்கரந்து* —கலி. 1 :2.
*ஈர்ஞ்சடை அந்தணன்* —கலி. 38:1.

இப் பாடல் அடிகளும் சிவன் கங்கை அணிந்த மையைக் கூறுகின்றன.

பகீரதன் என்பவன் தன் மூதாதையரின் வரலாற்றினை வசிட்டர் என்னும் முனிவரிடம் அறிந்து, அவர்கள் நல்ல நிலையை அடைய வேண்டி பிரமனை நோக்கிப் பல ஆண்டுகள் தவம் புரிந்தான். பிரமன் நேரடியாக வந்து கங்கையையும் சிவனையும் எண்ணித் தவம்புரியும்படி கட்டளையிட்டான். பகீரதனும் அவ்வாறே செய்தான். கங்கை அவனுக்குக் காட்சிதந்து, 'நான் பூமிக்கு வரவேண்டுமெனில் என்னைத் தாங்க வல்லவரைத் தேடுக' என்று கூறி மறைந்தாள். பகீரதன் மீண்டும் பிரமனை எண்ணித் தவம் செய்தான். பிரம்மன் சொற்படி தாங்க வல்ல சிவனை நோக்கித் தவம்செய்து அருள்பெற்றுக் கங்கையைக் கொணரச் செய்தான். அவ்வாறு கொண்டு வருகையில் வழியில் சந்துருஷி என்னும் முனிவர் ஆச்சிரமங் கொண்டு அக் கங்கையை ஆசமித்தார். பகீரதன் திகைத்து முனிவரை வேண்டிக் குறைகூறிக் கங்கையை இறந்தோர் எலும்பில் பாய்வித்துச் சுவர்க்கமடையச் செய்தான்.[30]

இவ்வாறு பகீரதனால் கொண்டு வரப்பட்ட கங்கையைச் சிவன் தன் தலையில் தாங்கினான் என்பதை அபிதான சிந்தாமணி கூறுகிறது.

இவ்வாறே வால்மீகி இராமாயணத்தில் பால காண்டம் 43, 43, 44, ஆகிய மூன்று சர்க்கத்தில் பகீரதனின் கதை கூறப்பட்டுள்ளது. விசுவாமித்திரர் இராமர் இலட்சுமணனுடன் காட்டின் வழியே சென்றுகொண்டிருக்கும் போது ஒவ்வொரு கதைகளாகக் கூறிக்கொண்டு வருகிறார். அப்போது பகீரதன் கதையும் கூறுகிறார்.

வியாச பாரதத்தில் வனபர்வதம் 106-வது அத்தியாயத்தில் லோமசன் என்பவன் யுதிஷ்டருக்கு அகத்தியருடைய கதையைக் கூறுமிடத்துப் பகீரதன் கதையைக் கூறுவதாக வருகிறது.

## 3.9. ஆலமர் கடவுள்

முன் ஒரு காலத்தில் சனகர், சநந்தனர், சநாதனர், சனத்குமார் என்னும் நான்கு முனிவர்களும் வேதத்தின் பொருள் விளங்காமல் மயங்கி, இறைவனை நோக்கித் தவம் புரிந்தனர். அவர்களுக்கு இறைவன் வெளித் தோன்றி ஆலமரத்தின் கீழ் அமர்ந்து வியாக்கியான தட்சிணாமூர்த்தியாகச் சின்முத்திரை காட்டி வேதங்களின் பொருள் நுட்பத்தை ஆகமத்தைக் கொண்டு தெரிவித்து அருளினார் என்பது கதை.[31]

இக் கதையை நினைவுகூரும் வகையில் பண்டைத் தமிழிலக்கியங்களில் ஆலமர் கடவுள், ஆலமர் செல்வன், ஆல்செழு கடவுள், ஆலமுற்றம் என்று சிவனைப் பற்றிய தொடர்கள் அமைந்துள்ளன.

சிவனின் திருவுருவம் ஞானம், ஆனந்தம் என்று இரு வகைப்படும். நடராசப் பெருமானின் திருவுருவம் ஆனந்தம் என்றும் தட்சிணாமூர்த்தியின் திருவுருவம் ஞானம் என்றும் நூல்கள் கூறுகின்றன. தட்சிணாமூர்த்தி எல்லாக் கலைகளுக்கும் ஞானங்களுக்கும் உரிய தலைவராவார். வியாக்கியான, யோக, வீணா, மேதா எனப் பல்வேறு நிலைகளிலும் வடிவங்களிலும் சிவனை வழிபடுவர்.[32]

சிவன் தட்சிணாமூர்த்தி வடிவில் யோக நிலையில் அமர்ந்திருப்பதைக் கோயில்களில் காணலாம். சிந்து சமவெளியில் கிடைத்த உருவங்களில் சில தவக்கோலத்துடன் காணப்படுகின்றன.

## 3.10. வேதம் கூறுதல்

இது தொடர்பான புராணக் கதை கிடைக்கவில்லை.

*நன்றாய்ந்த நீணிமிர்சடை*
*முதுமுதல்வன் வாய்போகா*
*தொன்று புரிந்த வீரிரண்டின்*
*ஆறுணர்ந்த வொரு முதுநூல்* —புறம். 166: 1-4.
*ஆறறி யந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து* —கலி 1:1.

நான்மறை முதுநூல் முக்கண்செல்வன் -அகம் 181:16.
இவ்வாறு பண்டைத் தமிழிலக்கியத்தில் சிவன் அந்தணர்க்கு நான்கு வேதங்களாகிய பழைய நூலை அருளியவன் என்று கூறப்பட்டுள்ளது.

வியாசபாரதத்தில் உபமன்யு கிருஷ்ணனிடம் சிவஸ் தோத்திரம் பற்றிக் கூறுமிடத்து,

> வேதத்தைச் செய்தவர் மந்திரத்தை இயற்றியவர், பண்டிதர், யுத்தத்தில் எதிரிகளை நாசம் செய்பவர்.[33]
> அதர்வ வேதத்தைத் தலையாகவும், சாம வேதத்தை முகமாகவும் ரிக் வேதத்தை ஆயிரம் கண்களாகவும், யசுர் வேதத்தைப் பாதமாகவும், தோளாகவும், அந்தராத்மாவாகவும், ஜோதியாகவும் அண்டசராசரமாகவும் கொண்டவர்.[34]
> அவரே வேதங்களைச் சொல்பவர்.[35]

என்றவாறு கூறப்பட்டுள்ளது. இதனால் சிவன் வேதமாகவும், அவனே வேதத்தை அந்தணர் முதலியோர்க்குச் சொன்னவன் என்பதையும் அறியலாம்.

## 3. 11. உமையொரு பாகன் - அர்த்தநாரீஸ்வரர்

முன்னொரு காலத்தில் பிருங்கி முனிவர் என்பவர் சிவனும் உமையும் அமர்ந்திருக்கும் கைலாயத்தில் உமையை விட்டுவிட்டுச் சிவனை மட்டும் வலம்வந்து தரிசித்துவிட்டு நீங்கினார். இதனைக் கண்ட உமை தான் தனித்து இருப்பதே இதற்குக் காரணம் என எண்ணினாள். உமை பிருங்கியிடம் உள்ள தமது கூறாகிய உதிர மாமிசங்களை வற்றச் செய்தாள். முனிவர் நடக்க வலியற்றுச் சிவனை வேண்டச் சிவன் ஒரு கோலுங் காலுந் தந்து அருள் புரிந்தான். உமையம்மை தாம் இறைவனோடு பிரிவறக் கலந்து ஒன்றி நிற்கும் பெரிய நிலையைப் பெற வேண்டித் தவம் புரிந்தாள். பின்னர் சிவன் உமையம்மையைத் தன் இடப்பாகத்தில் ஏற்றுக்கொண்டு உமையொருபாகன் வடிவினன் ஆனான்.[36]

இவ்வாறு அபிரதான சிந்தாமணியும் புராணங்களும் கூறுகின்றன.

*பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்*
*தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்* —புறம்1: 7-8.
*நீலமேனி வாலிழை பாகத் தொருவன்* —ஐங். க.வா. 1.
*உமையொடு புணர்ந்த காம வதுவையுள்* —பரி 5:28.
*உமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்*
—முருகு. 153.
*உமையவ ளொருதிற னாக வோங்கிய இமையவன்*
—சிலம்பு. 6:42, 28:74-75.
*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக*
—கலி. 38:1-2.
*சேர்ந்தோள் உமையே* —அகம் க. வா. 1:7.

இவ்வாறு பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவன் உமையைத் தன் உடம்பில் ஒரு பகுதியைக் கொண்டவனாக இருக்கிறான் என்று கூறப்பட்டுள்ளமை மேற் கூறிய கதையை நினைவூட்டுகிறது.

வியாச பாரதத்தில் இக்கதை இல்லை. ஆனால் சிவனுக்கு இரண்டு சரீரங்கள் என்று வேதம் அறிந்த பிராமணர்கள் கூறுகிறார்கள். சரீரத்தின் ஒரு பாகம் உக்கிர ரூபம் என்றும், மற்றொரு பாகம் சாந்த மங்கள ரூபம் என்றும் குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது.[37]

## 3. 12. புலித்தோலாடை அணிந்தமை

ஒரு சமயம் தாருகாவனத்திலுள்ள முனிவர்கள் யாகம் தான் எல்லா பலனையும் கொடுக்கக் கூடியது என்றும் யாகத்தைத் தவிர வேறுகடவுள் இல்லை என்றும் கருதினர். அவர்களுடைய மனைவியர் கற்பு ஒன்றே சிறந்தது என்று கருதி கடவுளை மறந்து இருந்தனர். சிவன் அவர்களது செருக்கை அடக்க எண்ணினான். எனவே, சிவன் பிட்சாடனராகவும் திருமால் மோகினியாகவும் கோலம் பூண்டு

அம்முனிவர்களிடத்தும் அம்முனி பத்தினிகளிடத்தும் மன நிலை அறிந்து கொள்ளச் சென்றனர். திருமால் முனிவரிடம் செல்ல, அவர்கள் திருமாலின் மோகினி வடிவைக் கண்டு மயங்கிப் பின் சென்றனர். சிவன் முனிவரின் பத்தினிகளிடம் செல்ல, அவர்கள் பிட்சாடனரின் வடிவில் உள்ள சிவனின் அழகில் மையல் கொண்டு பின் சென்று சிவனை மனத்தாற் தழுவிக் கற்பழிந்தனர். இதனை அறிந்த முனிவர்கள் கோபமுற்று அபசார வேள்வி செய்து சிவன் மீது தமருகம், அக்னி, மழு, சூலம் இவற்றை ஏவ அவற்றைக் கையில் பிடித்துக் கொண்டான். பின்னர் புலியை ஏவ அதனைக் கொன்று அதன் தோலையே ஆடையாக அணிந்து கொண்டான். பின்னர் பாம்பினை ஏவ அதனை அடக்கி அணியாக அணிந்து கொண்டான்.

இவ்வாறு ஏவப்பட்ட பிற பொருள்களில் பிரமதகணம், பேய் இவற்றைத் தன்னுடன் இருக்கச் செய்தான். மானைக் கையிற் பிடித்துக் கொண்டான். வெண்டலையை அணிந்தும் முயலகனை எலும்பொடிய முதுகில் அழுத்தியுங் குற்றமில்லாது இருந்தான். இவ்வாறு சிவன் புலித் தோலாடை அணிந்தமையை அபிதான சிந்தாமணி கூறுகிறது [38].

வரிகிளர் வயமான் உரிவை தைஇய
—அகம். க.வா. 1: 14.

கொலையுழுவைத் தோலசைஇ —கலி. 1:1.

புலியின் உரியுடுத்து —சிலம்பு. 12: வேறு 7:1.

அரியின் உரிவை —சிலம்பு. 12: 62,

இப் பாடலடிகளில் சிவன் புலித்தோலை அணிந்துள்ளமை கூறப்பட்டிருக்கிறது. இதனால் சிவன் புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்த கதை நினைவூட்டப்படுகிறது.

வியாசபாரதத்தில் சிவஸ்தோத்திரம் பற்றிக் கூறுமிடத்து, சிவன் புலித்தோலாடையை அரையில் அணிந்தவனாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் இதற்கான கதை

காணப்படவில்லை. வேதத்திலும் கூறபடவில்லை. புராணங்கள் மட்டுமே இக் கதையைக் கூறுகின்றன.

## 3. 13. யானைத் தோலாடை அணிந்தமை

மகிடாசூரன் என்பவன் எருமை உருவங் கொண்டவன். அவனுடைய மகன் கஜாசுரன் என்பவன் யானை உருவங் கொண்டவன். துர்கை மகிடாசூரனைக் கொன்ற பின் கஜாசூரன் மூவுலகத்தில் உள்ளவர்களைத் துன்புறுத்தி வந்தான். தேவர்கள் அவனைக் கொல்லும்படி உருத்திரனை வேண்டிக் கொண்டார்கள். உருத்திரன் சூலாயுதம் ஏந்திப் போர் புரிந்து கஜாசுரனைக் கொன்றான். அசுரன் இறக்கும் முன் தன்னுடைய தோலை ஆடையாக



கஜமுகா சூரன் வதை
வீரட்டானேஸ்வரர் கோயில்

உடுத்திக்கொள்ளும்படி சிவனிடம் கேட்டான். அதன்படி சிவன் அவனுடைய தோலை உடுத்திக் கொண்டான். இவ்வாறு ஸ்கந்தபுராணம் சிவன் யானைத்தோலாடை அணிந்தமையைக் கூறுகிறது.[39]

பத்மபுராணம், வாரணாசியில் இருத்திவாசேஸ்வரர் என்ற இலிங்கத்தின் பெயருக்கான காரணத்தைக் கதை வாயிலாகக் கூறுகிறது. யானை உருவங்கொண்ட அரக்கன் கிராமங்களுக்கு வந்து சிவ பக்தர்களான அந்தணர்களைத் துன்புறுத்துவான். அந்தணர்கள் தங்களைக் காக்கும்படி சிவனை வேண்டிக்கொண்டார்கள். சிவன் சிவலிங்கத்திலிருந்து மனித வடிவில் வந்து சூலாயுதத்தால் அரக்கனைக்கொன்று அவனுடைய தோலை ஆடையாக அணிந்து கொண்டான்.[40]

இக் கதைக்கான குறிப்பு சிலப்பதிகாரத்தில் கொற்றவையைப் பற்றிக் கூறுமிடத்து அவள் யானைத் தோலாடை அணிந்தவளாகக் கூறப்பட்டுள்ளது. சிவன் அணிவனவும் செய்தவையும் கொற்றவை அணிந்ததாகவும் செய்ததாகவும் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளதால் சிவன் தோலாடை அணிந்தமையை அறியலாம்.

கரியின் உரிவை போர்த்தணங் காகிய
அரியின் உரிவை மேகலை யாட்டி—சிலம்பு. 12: 61-62.

ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்
—சிலம்பு. 12: வேறு. 7: 1-2.

சம்பந்தர், உமையை மருட்ட வந்த மதயானையைக் கொன்று சிவன் அதன் தோலை உரித்து ஆடையாக அணிந்துகொண்டான் என்ற பொருளில்,

வல்லிதுண் ணிடையாள் உமையவள் தன்னை
மருகிட வருமத களிற்றினை மயங்க
ஒல்லையிற் பிடித்தங் குரித்தவள் வெருவக்
கெடுத்தவர்.[41]

என்று பாடுகிறார்.



## 3. 14. பிறை அணிந்தோன்

தக்கன் தன்னுடைய இருபத்தேழு மகளாகிய விண் மீன்களைச் சந்திரனுக்கு மணமுடித்து வைத்தான். சந்திரன் அம் மகளிர்களில் கிருத்திகை, உரோகினி ஆகிய இருவ ரிடத்து மட்டும் மிகுந்த அன்பு கொண்டான். மற்றவர் களிடம் அன்பு இல்லாது இருந்தான். இதனால் தக்கன் சந்திரனுடைய கலைகளெல்லாம் குறைந்து அழிந்து வருந் தும்படி கொடிய சாபம் விடுத்தான். சந்திரன் தன் பதி னாறு கலைகளில் பதினைந்து கலைகள் தேய்ந்து அழிய ஒரு கலை மட்டும் எஞ்சிய நிலையில் செய்வதறியாது சிவனின் திருவடிகளில் அடைக்கலம் ஆனான். தன்னை அடைந்தவர்க்கு இன்பங்கள் தருபவனாகிய சிவன் சந்தி ரன் மீது இரக்கங் கொண்டு அருள்புரிந்து சந்திரனைத் தன் தலைமீது வைத்துக் கொண்டான்.[42]

இக் கதையின் குறிப்பு கீழ்வரும் பாடல்களின் அடிகளில் காணப்படுகிறது.

முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
—அகம். க. வா. 1:11.

கொலைவன் சூடிய குழவித் திங்கள் —கலி. 103:15.

புதுத்திங்கள் கண்ணியான் —கலி.150 : 17.

பிறைமுடிக் கண்ணிப் பெரியோன் —சிலம்பு. 11:72.

குழவித் திங்கள் இமையவ ரேத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்
—சிலம்பு 2: 38-39.

வியாச பாரதத்தில் சிவஸ்தோத்திரம் பற்றிக் கூறுமிடத்துச் சிவன் தலையில் பிறை அணிந்தவனாகக் கூறப்படுகிறது. ஆனால் அதற்கான கதை கூறப்படவில்லை. வால்மீகி இராமாயணமும் வேதமும் இச் செய்தியைக் கூறவில்லை. புராணங்களே இக்கதையைக் கூறுகின்றன.

## 3. 15. குறுந்தொகையும் திருவிளையாடற் புராணமும்

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலிற்
நறியவு முளவோ நீ யறியும் பூவே. —குறு. 2.

இக் குறுந்தொகைப் பாடலை இறையனார் இயற்றியுள்ளார். இப் பாடலை இயற்றுவதற்கான காரணத்தைக் குறுந்தொகை கூறவில்லை. ஆனால், புராணங்கள் தருமி என்பவன் பாண்டியனுடைய ஐயத்தைத் தீர்த்துப்பொற்கிழியை அடையும்படி செய்யவேண்டி இறையனாராகிய சிவனே எழுதித் தருமியிடம் கொடுத்ததாகக் கூறுகின்றன.

மதுரையில் சிவன் புரிந்த அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் பற்றித் திருவிளையாடற் புராணங்கள் கூறுகின்றன: தருமிக்குப் பொற்கிழி யளித்தமையும், நக்கீரருக்குச் சிவன் அருள் புரிந்தமையும் மதுரையில் நடந்த

செயல்காகும். எனவே, திருவிளையாடற் புராணங் கூறும் கதையை இங்குக் காண்பது நலம்.

### 3.15 1. தருமிக்குப் பொற்கிழி அருளியமை

வம்ச சூடாமணி என்னும் பாண்டியன் தன் தேவியுடன் சந்திரக்காந்தக் குன்றில் சம்பக வனத்தில் இருந்த போது, அவனுக்கு ஒரு நறுமணம் தோன்றும்படி காற்று வீசியது. அரசன் தன் மனைவியின் கூந்தலிலிருந்து நறு மணம் வீசுவதை உணர்ந்தான். அவனுக்கு இந்த மணம் இயற்கையானதா அல்லது செயற்கையானதா என்ற ஐயம் உண்டாயிற்று. தனது ஐயத்திற்குப் பதில் கூறு பவர்க்கு ஐயாயிரம் பொன் பரிசளிக்கப்படும் என்று அறிவித்தான்.

அவ் ஊரில் தருமி என்னும் ஏழை பார்ப்பான் ஒருவன் வசித்து வந்தான். அவன் தான் திருமணம் செய்து கொள்ள வேண்டிப் பொருள் தேடிக்கொண்டிருந்தான். அவ்வேளையில் சிவன் தருமிக்கு அருள வேண்டி, 'கொங்குதேர் வாழ்க்கை' எனத் தொடங்கும் பாடலை எழுதித் தருமியிடம் கொடுத்தான். தருமி அந்தப் பாடலைப் பாண்டியன் அவைக்கு எடுத்துச் சென்றான். அந்தப் பாடலில் குற்றமிருப்பதாகக் கண்ட நக்கீரர் தருமிக்குப் பொற்கிழி கொடுக்காதபடி தடுத்துவிட்டார். சிவன் புலவனாக வந்து அப் பாடலில் என்ன குற்றம் இருக்கிறது என்று நக்கீரரை வினவினான். நக்கீரர் கற்புடைய பெண்களின் கூந்தலில் வாசனைப் பூவின் சார்பாலன்றிச் செயற்கையாலும் இயற்கையாலும் மணம் இல்லை என்றார்.

சிவன் நெற்றிக் கண்ணைக் காட்டினான். அதற்கு நக்கீரர் அஞ்சாமல், 'இந்திரன் போல் உமது உடம்பு முழுதுங் கண்ணானாலும் உமது பாடல் குற்றம் குற்றமே.' என்றார். சிவனது நெற்றிக் கண்ணிலிருந்து உண்டான வெப்பந் தாங்கமுடியாமல் நக்கீரர் பொற்றாமரைக் குளத்தில் போய் விழுந்து மூழ்கினார்.[43]

## 3. 16. சிவன் கீரனுக்கு அருள் புரிதல்

நக்கீரர் பொற்றாமரைக் குளத்தில் மூழ்கித் துன்பம் அடைவதைக் கண்டு கூடியிருந்த புலவர்கள் வருந்திச் சிவனை வணங்கி, 'பெருங்கருணை கொண்டு நக்கீரர் செய்த பிழையைப் பொருத்தருள வேண்டும்.' என்று வேண்டிக்கொண்டனர்.

மதுரை சோமசுந்தரக் கடவுள் மீனாட்சிஅம்மையோடு புலவர் கூட்டத்துடன் நின்று அருட் கண்ணாலே பார்த்த போது அவரது பெருங்கருணைக் கடலில் நக்கீரர் ஆழ்ந்து அன்புருவமானார். நக்கீரர் காளத்தியப்பர் மீது நேரிசை வெண்பாவினால் 'கைலைபாதி காளத்தி பாதி என்ற அந்தாதி பாடினார். அதைக் கேட்டுச் சிவன் நக்கீரர் கையைப் பிடித்துக் கரையேற்றி அருளினார்.

நக்கீரர் சோமசுந்தரக் கடவுளையும் மீனாட்சியம்மை யாரையும் வணங்கிச் சிவன் நன்மை செய்வார்க்கு நன்மையும் தீமை செய்வார்க்குத் தீமையும் அருள்வதைப் பொருளாகக் கொண்டு 'கோபப் பிரசாதம்' பாடினார். பின்பு பெருந்தேவ பாணியும் திருவொழு கூற்றிருக்கையும் பாடிச் சிவனை வணங்கினார். ஏனைய புலவர்களும் சிவனை வணங்கினர். சிவன் நக்கீரரிடம், 'நீ முன்புபோல் உன் புலவர் கூட்டத்துடன் இருப்பாயாக' என்று கூறி மறைந்தான்.[44]

இவ்வாறு இதிகாச புராணங்களில் கூறப்பட்டிருக்கும் கதைகளுக்கேற்ப பண்டைத் தமிழிலக்கியங்களில் கதை குறிப்புகள் காணப்படுவதைக் காணலாம். கதைகள் சிலவற்றிற்கு மூலமாக வேதங்களில் சில கதைகள் இருப்பதையும் அறியலாம். கதைகளுக்கிடையே சில மாறுபாடுகளும். இருப்பதைக் கூறப்பட்டுள்ளன. அம் மாறுபாடுகளுக்குச் சமுதாய வளர்ச்சி நிலையே காரணம் என்று கூறலாம். படைப்பாளிகள் ஒவ்வொருவரும் தம் மனப்போக்கிற்கேற்ப ஒரே கதையைப் பலவாறு கூறியுள்ளனர் என்பதை அறியலாம்.

## குறிப்புகள்

1. திருவாசகம், திருச்சாழல், பா. எண். 13.
2. டாக்டர் உ. வே. சாமிநாதையரின் பத்துப் பாட்டின் மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க் கினியருரையும், ப. 72.
3. மேற்படி, ப. 27.
4. ஒட்டக்கூத்தர், தக்கயாகப் பரணி, பா. எண்.120.
5. ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை, சிலப்பதிகாரம், ப. 438.
6. சம்பந்தர், தேவாரம் , ப. 223. பா. எண். 5.
7. ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை, சிலப்பதிகாரம், ப. 438.
8. அபிதான சிந்தாமணி, ப. 474.
9. மேற்படி, பக். 323, 659-660.
10. THE HYMNS OF ATHARVA VEDA, 3: 221.
11. க. சண்முகசுந்தரன், வன்னியர் வரலாறு பல்லவ நாடு தோற்றம், ப. 9.
12. டாக்டர் உ. வே. சாமிநாதையரின் பத்துப்பாட்டின் மூலமும் மதுரை யாசிரியர் பரத்துவாசி நச்சினார்க் கினியருரையும் ப-ள், 342-343.
13. மேற்படி, ப-ள், 343-344.
14. ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை, சிலப்பதிகாரம், ப. 265.
15. திருமூலர், திருமந்திரம், ப. எண். 337-338.
16. நச்சினார்க்கினியர் உரை, தொல்காப்பியம், பாயிரம்.
17. மேற்படி, அகத்திணையியல் நூற்பா, 32.
18. N. Venkataramanayya, RUDRA SIVA, P. 79.
19. மேற்படி, ப. 80.
20. C. V. Narayana Ayyar, ORIGIN AND EARLY HISTORY OF SAIVISM IN SOUTH INDIA, P. 63.

21. Rabindra Kumar Siddhanta Shastree, SAIVISM THROUGH THE AGES, p.p. 110-113.
22. அபிதான சிந்தாமணி, ப. ள். 767-768.
23. திருமூலர், திருமந்திரம், பா. எண். 370.
24. மறைமலையடிகள், தமிழர் மதம், ப, 118.
25. N. Venkataramanayya, RUDYA-SIVA, P. 81.
26. மேற்படி, ப ள். 81-82.
27. மேற்படி, ப. 82
28. மேற்படி. ப. 82.
29. அபிதான சிந்தாமணி, ப. 825.
30. மேற்படி, ப. 1003.
31. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப. 26.
32. மேற்படி, ப. 182.
33. வியாசர், வியாச பாரதம், தானதர்ம பருவம், அத்தியாயம் 17, பா. எண். 81.
34. மேற்படி, பா. எண். 91-92:
35. மேற்படி, அத்தியாயம் 18, பா. எண். 43.
36. அபிதான சிந்தாமணி, ப. 1145
37. வியாசர், வியாச பாரதம், தானதர்ம பருவம் அத்தியாயம், 161, பா. எண் 3:7.
38. அபிதான சிந்தாமணி, ப. ள். 659, 807.
39. Rabindra Kumar Siddhanta Shastree, SAIVISM THROUGH THE AGES, P. 31.
40. மேற்படி, ப. 42.
41. சம்பந்தர், தேவாரம், ப. 67.
42. அபிதான சிந்தாமணி, ப. 767.
43. திருவிளையாடற் புராண வசனம், ப. ள். 242-246.
44. மேற்படி, ப. ள். 246-248.

# 4. சிவன் பற்றிய தத்துவக் கோட்பாடுகள்

4. பண்டைத் தமிழிலக்கியங்களில் சிவனைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. தமிழில் பண்டைத் தமிழிலக்கியங்களில் காணப்படும் குறிப்புகளின் விளக்கமாகவும் தத்துவமாகவும் இடைக்காலத்தில் பக்தி இலக்கியங்களும் சமயத் தத்துவத்தை விளக்கும் இலக்கியங்களும் தோன்றின. அவ்வாறு சிவனைப் பற்றி விளக்கமாகக் கூறுவன பன்னிரு திருமுறை, சைவசித்தாந்தம் போன்ற நூல்கள் ஆகும். எனவே, பண்டைத் தமிழிலக்கியங்களில் குறிப்பாகச் சிவனைப் பற்றிக் கூறும் அனைத்திற்கும் தத்துவக் கோட்பாடுகள் பிற்காலத்தில் கூறப்பட்டுள்ளமையை அறியலாம். நுணுகி ஆராய்வார்க்குச் சிவ புராணங்கள் எல்லாம் வேதப் பொருளை விளக்கி முதல்வன் பொருள் சேர் புகழைக் கூறுவனாக விளங்குவது போலவே சிவனின் உருவம், வாகனம், அணிவன, தொழில்கள் போன்ற அனைத்தும் தத்துவத்தை உட்கொண்டுள்ளனவாகவே விளங்குகின்றன.

## 4, 1. தத்துவம் - விளக்கம்

'தத்துவம்' என்ற சொல்லுக்கு அதிகாரம், உண்மை நிலை, சுபாவம், தத்துவத்திரயம், தேகபலம், அறிவு, இயல்புக்குணம், இந்திரிய பலம் என்ற பொருள்களைக் கழகத் தமிழகராதி கூறுகிறது.[1]

> படைப்புக் காலம் முதல் ஊழிக்காலம்வரை தன் தன்மை மாறாது நிலைத்து உள்ள பெருள்கள் தத்துவங்கள் எனப்படும்.

> தத் + துவம்—தத்துவம், தத்—அது. துவம்—தன்மை எனவே தன் தன்மை கெடாதது தத்துவம்
> என்று வச்சிரவேல் முதலியார் கூறுகிறார்.[2]

எனவே, எக்காலத்தும் தனது தன்மையினின்றும் நீங்காது நிலைத்திருக்கும் பொருளைத் தத்துவம் என்று கருதலாம்

தத்துவத்தைப் பற்றி ரா. ஸ்ரீ தேசிகனும் ஞானப் பிரகாச பரமாச்சாரிய சுவாமிகளும் விளக்கியிருப்பது இங்குச் சிந்திக்கத் தக்கதாகும்.

இறையுணர்வுடையோர் வாழ்க்கையின் விமர்சனம் தத்துவமாகும் என்றும் தத்துவம் இறை ஆராய்ச்சியுமன்று (Theology), விஞ்ஞான ஆராச்சியுமன்று (Science). ஆனால் பரத்தை நாடுவதுதான் தத்துவம் என்றும் கூறுவர். விஞ்ஞானம் பிரபஞ்சத்தின் காரணத்தைப் பற்றி அறிய முன்வரவில்லை. ஆனால் தத்துவம் அதை ஆராய்கிறது. ஒரு நிகழ்ச்சிக்கான காரணம் யாது? அது ஏன் தோன்று கிறது? இவ்வாறு வினாக்களைத் தத்துவம் எழுப்புகிறது. நம்முடைய நாட்டில் தத்துவமும் இறைமையும் ஒன்றாகக் கருதப்படுகின்றன. ஏனெனில், தத்துவத்தின் முடிவு இறைமை என்று காண்பதே ஆகும். மேனாட்டார் தத்துவம் வேறு, இறைமை வேறு என்று கண்டனர். எனவே, நம் நாட்டில் இறை நூலையும் தத்துவ நூலையும் தனித்தனியே பிரிக்கவில்லை. இவ்வாறு ரா. ஸ்ரீ தேசிகன் அவர்கள் தத்து வத்தைப் பற்றி கூறுகிறார்.[3]

தத்துவமும் விளக்கமும் வெவ்வேறாகக் கொள்ளலாம். எனவேதான் தத்துவத்தை அப்படியே சொன்னால் புரிந்து கொள்ள முடியாது என்று முன்னோர்கள் நிகழ்ச்சிகளின் வாயிலாக அதாவது புராணங்கள் மூலம் விளக்கினர் என்று ஞானப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள் கூறுகிறார்.[4]

மேனாட்டுத் தத்துவத்திலிருந்து நம் நாட்டுத் தத்து வத்தை வேறுபடுத்தும் ஸ்ரீ தேசிகன் நம் நாட்டுத் தத்துவமும் இறைமையும் ஒன்றுதான் வேறல்ல என்று கருதுகிறார். ஞானப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள் தத்துவங்களை அப்படியே சொல்ல முடியாது, அவைகளை நிகழ்ச்சிகளின் வழியாகத்தான் கூற முடியும் என விளக்குகிறார். எனவே, சிவனின் தத்துவக் கோட்பாடுகள் சிவன் பற்றிய கதை

களிலும் சிவன் பற்றிய பாடல்களிலும் நின்றிலங்கும் என்பதனால் அவைகளைப் பற்றிச் சிந்திப்பது இன்றியமையாததாகிறது.

## 4. 2. படைப்புக் கடவுள்

சிவனும் சக்தியுஞ் சேர்ந்து உலகத்தைப் படைத்துக் காக்கும் தத்துவம்.

பாரதம் பாடிய பெருந்தேவனார் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய மூன்று நூல்களின் கடவுள் வாழ்த்தில் சிவனைப் பற்றிப் பாடும்போது சிவனுடன் உமையைச் சேர்த்தே பாடுகிறார்.

நீல மேனி வாலிழை பாகத்
தொருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே —ஐங். க. வா.

என்ற பாடலில் நீலமேனியுடைய சக்தியை இடப்பாகமாகக் கொண்ட இறைவனின் இருதாள்களின் நிழற்கீழ் மூவுலகங்கள் தோன்றின என்றார், சிவனின் இடப்பாகம் சக்தியானதால் இடத்தாள் சக்தியின் தாளாகும். சிவன் சக்தி இருவரும் சேர்ந்து உலகங்களைப் படைத்ததால் இருதாள் நிழற்கீழ் மூவுலகங்கள் தோன்றியதாகப் புலவர் கூறுகிறார்.

பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினுங் கரக்கும்
—புறம். கா. வா.7-8.

என்ற பாடலின் வாயிலாக சிவன் தானே தன் இடப்பாகத்தில் பெண்ணுருவம் கொண்டவன் என்பதும், அவ்வுருவைத் தன்னுள் அடக்கி மறைத்தாலும் மறைத்துக் கொள்வான் என்பதும் அறியலாம். எனவே, சிவனோடு இணைபிரியாமல் இருந்து சக்தியும், படைத்தல், காத்தல், அழித்தல் தொழில் புரிகிறாள் என்பதை உணரலாம்.

ஊர்ந்த தேறே சேர்ந்தோள் உமையே.......
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே
—அகம். க- வா. 7,15-16.

என்று உண்மையைச் சேர்ந்த சிவனின் தாள் நிழலில் உலகம் தங்கியிருப்பதாகப் புலவர் கூறுகிறார். திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தின் தொடக்கத்தில்.

*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு* —குறள். 1.

என்று பாடுகிறார். மேலும் அவர் 'அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய், நின்றது மன்னவன் கோல்' என்ற குறட்பாவில் 'ஆதி' என்ற சொல்லை 'முதல்' என்ற பொருளில் கையாளுகிறார்.

பகு என்பதற்குப் பொருள் பிரித்தல். எனவே, பகவன் என்ற சொல் சிவன், சக்தி என இரு கூறாகப் பிரிக்கப்பட்ட கடவுளைக் குறிக்கும் என அறியலாம். எனவே, வள்ளுவர் உலகம் படைத்த முதற் கடவுளை 'ஆதி பகவன்' என்கிறார். அக் கடவுள் சிவனைக் குறிக்கும் என்று கருதுவது மிகவும் பொருந்தும், ஏனெனில், சங்கப் புலவர்கள் சிவனைத்தான் முதற்கடவுளாகக் கூறுகிறார்கள்.

சிவனை மாங்குடி மருதனார் 'தொன்முது கடவுள்' (மது. 41) என்கிறார்; ஆலூர் மூலங்கிழார் 'முதுமுதல்வன்' (புறம்: 166:2) என்கிறார்.

இந்திர விழாவின்போது புகாரில் திருவிழா நடந்த கோயில்களை வருணிக்கும்போது,

*பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
—சிலம்பு 5:169.

என்று இளங்கோவடிகளும்,

*நுதல்விழி நாட்டத் திறையோன்* —மணி,1:54.

என்று சாத்தனாரும் சிவனின் கோயிலைத்தான் முதலில் கூறுகிறார்கள்.

பூதஞ்சேந்தனார் இனியவை நாற்பது கடவுள் வாழ்த்து பாடலில் மும்மூர்த்திகளை வாழ்த்துகிறார். அப்போது,

*கண்மூன்று உடையான்தாள் சேர்தல் கடிதினிதே*

என்று சிவனைத்தான் முதலில் போற்றுகிறார்.

கபிலர் இன்னா நாற்பது கடவுள் வாழ்த்தில் சிவன், பலராமன், திருமால், நான்முகன் ஆகிய நால்வரைப் போற்றும்போது,

முக்கட் பகவன் அடிதொழா தார்க்கின்னா

என்று முதலில் சிவனைத்தான் வணங்குகிறார்.

இவற்றையெல்லாம் நோக்கும்போது சிவனே முழு முதற் கடவுளாக விளங்குபவன் என்பதை நன்கறிய முடிகிறது.

திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் இரண்டு குறட்பாவில் இறைவனின் தாளை வணங்க வேண்டும் என்றும் ஐந்து பாக்களில் இறைவனின் திருவடியைச் சேர வேண்டும் என்றும் வலியுறுத்துகிறார். எனவே, வள்ளுவர் இறைவனின் திருவடி நிழலிலிருந்து உலகம் உண்டானது என்பதை அறிந்து கூறுகிறார் என்பது தெரிகிறது.

மேலும் பசுவாகிய உயிர் பதியாகிய இறைவனின் தாளை அடைதல் வேண்டும் என்ற சின்முத்திரைத் தத்துவமும் இதனுடன் ஒப்புநோக்கிக் கருதத்தக்கது.

முழுமுதற் கடவுளாகிய சிவன் சக்தியுடன் சேர்ந்து இருப்பவன் என்பதை விளக்குவது போல இளங்கோவடிகள், பாண்டியனுடைய குலதெய்வமான மதுராபதியின் தோற்றத்தையும், வேடுவர் பரவுங் கொற்றவையின் தோற்றத்தையும் ஆண் பெண் கலந்த உருவமாகவே கூறுகிறார்.

சடையும் பிறையும் தாழ்ந்த சென்னிக்
குவளை உண்கண் தவளவாள் முகத்தி
கடைஎயிறு அரும்பிய பவளச்செவ் வாய்த்தி
இடைநிலா விரிந்த நித்தில நகைத்தி
இடமருங்கு இருண்ட நீலம் ஆயினும்
வலமருங்கு பொன்னிறம் புரையும் மேனியள்
இடக்கை பொலம்பூந் தாமரை ஏந்தினும்
வலக்கை அஞ்சுடர்க் கொடுவாள் பிடித்தோள்

*வலக்கால் புனைகழல் கட்டினும் இடக்கால்*
*தனிச்சிலம்பு அரற்றும் தகைமையாள்.*

—சிலம்பு. 23 : 1-10.

இளங்கோவடிகள் பாண்டியனின் குலதெய்வமான மதுராபதி தேவி சிவனைப் போல் சென்னியில் சடையும், பிறையும் சூடியும், இடப்பாகம் நீலநிறமும், வலப்பாகம் பொன்னிறமும் கொண்ட மேனியவளாக விளங்குபவள் என்கிறார்.

*மதியின் வெண்தோடு சூடுஞ் சென்னி*
*நுதல்கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்*
*பவள வாய்ச்சி தவளவாள் நகைச்சி*
*நஞ்சுண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்து*
*அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்*
*துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி*
*வளையுடைக் கையிற் சூல மேந்தி*
*கரியின் உரிவை போர்த்தணங் காகிய*
*அரியின் உரிவை மேகலை யாட்டி*
*சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி*
*வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை.*

—சிலம்பு. 12 : 54 - 64.

இளங்கோவடிகள் வேடர்களின் குலதெய்வமான கொற்றவையைச் சிவனைப் போல் சென்னியில் பிறையும் நெற்றிக்கண்ணும் நீலகண்டமும் உடையவளாகக் கூறுகிறார். அவர் சிவன் நஞ்சுண்டதையும், வாசுகி பாம்பை நாணாகக் கொண்டு, மேரு மலையை வில்லாகக் கொண்டு, எரி அம்பு எய்து திரிபுரம் எரித்ததைக் கொற்றவை செய்ததாகக் கூறுகிறார்.

*சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்திச்*
*செங்கண் அரிமால் சினவிடைமேல் நின்றாயால்*
*கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து*
*மங்கை உருவாய் மறையேத்த வேநிற்பாய்*

—சிலம்பு. 12 : வேறு. 9.

சிவன் திரிபுரம் எரித்தபோது திருமால் எருதாக வந்து அவரைத் தாங்கிக் கொண்டான். அந்த எருதின் மேல் கொற்றவையும் நின்றதாக இளங்கோவடிகள் கூறுகிறார். காரணம் கங்கையைச் சென்னியில் சூடிய சிவனின் திரு மேனியில் இடப்பக்கமாகச சக்தி எப்போதுமே அவனு டன் இருப்பதே ஆகும்.

*மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்*
*பாதி நல்லாளும் பகவனு மானது*
*சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லீரேல்*
*வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே*[5]

திருமூலர் சக்தியுந் தன் மணாளனான சிவன் தன் னுடன் இருந்திடப் பாதி உடம்பு பெண்ணுருவமும் பாதி ஆணுருவமும் பெற்றவள் என்கிறார். மேலும் அவர்,

*ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்*
*இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்*
*பருவங்கள் தோறும் பயன்பல வான*
*திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே*[6]

என்று செகம் முழுவதும் சிவன் சக்தியின் திருவிளையாட் டினால் இயங்கி வருவதாகக் கூறுகிறார்.

உலகத்தில் பல மதங்களின் கடவுளர்கள் ஆண் பெண் வடிவங் கொண்டவர்களாகவே காணப்படுகின்றனர்.

மேனாடு, கீழ்நாடுகளிற் பண்டை நாளில் நாகரிகத் திற் சிறப்புற்று விளங்கிய பினீசியர், அசீரியர், கிரேக்கர், உரோமர், துயூத்தானியர், மெகுசிகர், பெருவியர் முதலா னோர் எல்லாம் முழுமுதற் கடவுளை அம்மையப்பர் வடிவமாகவே வழிபாடு செய்தனர் என்று மறைமலை யடிகள் கூறுகிறார்.[7]

எனவே, பண்டைத் தமிழிலக்கிய காலத்தில் முழு முதற் கடவுள் ஆண்-பெண், அதாவது சிவசக்தி சேர்ந்த உருவமே என்றும், அவ் வுருவத்தின் திருவடியிலிருந்து உலகம் தோன்றியது என்றும், அது அவரது படைப்புத் தொழிலைக் காட்டுவது என்றும் அறிந்து கொள்ளலாம்.

இனி பண்டைத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பாகச் சுட்டும் சிவன் பற்றிய செய்திகளின் தத்துவங்களைக் காணலாம்.

## 4. 3. திருமேனி செந்நிறம்

சிவனின் திருமேனி செந்நிறமாக இருக்கிறது என்று பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன.

தத்துவக் கருத்துகளை விளக்கும் அறிஞர்கள் சிலர் இறைவனை இயற்கையோடு ஒப்பிடுவர். எனவே அந்திச் செக்கர் வானமே இறைவனுடைய திருமேனி என கூறுவர் என்று ந.ரா. முருகவேள் கூறுகிறார்.[8]

விண்ணுலக வேந்தன் கொள்கையின் பின் எங்கும் நிறைந்த இறைவன் கொள்கை ஏற்பட்ட போது, தீயின் கூறாகச் சிவன் என்றும், நீரின் கூறாக மால் (மாயோன்) என்றும் பெயரிட்டு இறைவனை வழிபட்டனர் என்று ஞா. தேவநேயன் கூறுகிறார்.[9]

நாளுக்கு நாள் சிவவழிபாடு அதிகமானதால், கதிரவனில் அக்கடவுள் வீற்றிருப்பதாக எண்ணி அவனது செந்நிறமே அக் கடவுளுக்கு உண்டாயிற்று என்று கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுகிறார்.[10]

இவ்வாறு அறிஞர்கள் சிவனின் திருமேனி செந்நிறமாக இருப்பதற்கான காரணத்தைப் பலவாறு கூறுகின்றனர்.

சிவன் என்ற சொல் பண்டைத் தமிழிலக்கியங்களில் காணப்படவில்லை. எனினும் சிவன் என்ற சொல் செம்மை என்ற பொருளில் வருகிறது. மேலும் சிவன் நெருப்பு என்று கூறப்படுகிறது. எனவே, நெருப்பின் நிறமான செம்மை நிறத்தானாக சிவன் கருதப்படுகிறான். மேலும் 'நீலமேனி வாலிழை' என்று சக்தியைக் கூறுவர். நீலமேனி என்று நீரின் தன்மையைச் சக்தியாகக் கூறப்படுகிறது. எனவே, சிவனின் திருமேனி பஞ்சபூதங்களில் ஒன்றான நெருப்பின் அம்சத்தைக் குறிக்கிறது.

### 4. 4. நீலகண்டன்

இது இறைவனுடைய அருளாற்றலை விளக்குவது என்பதை,

*கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த*
*ஆலாலம் உண்டான் அவன்சதுர்தான் என்னேடீ*
*ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட*
*மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ.*[11]

என்று மாணிக்கவாசகர் கூறும் திருச்சாழல் பகுதியால் அறியலாம். சிவன் கொடிய நஞ்சை உண்ட பின்னரும் இறக்கவில்லை. இது அவருடைய நித்தியத் தன்மையைப் புலப்படுத்துகிறது.[12]

இவ்வுலகிலுள்ள மக்களைத் தலையாயோர், இடையாயோர், கடையாயோர் என மூன்று வகையாகப் பிரிக்கலாம். அதாவது தலையாயோர் என்பவர் தம்மை அழித்தேனும் பிறரை வாழச் செய்வர். இடையாயோர் என்பவர் பிறரும் வாழ நாமும் வாழவேண்டும் என்று நினைப்பவர். கடையாயோர் என்பவர் தாம் வாழ எண்ணிப் பிறரைத் துன்புறுத்துபவர். தலையாயராக விளங்குபவர் இம் மண்ணுலகில் பிறர் நலங்கருதித் தாம் எவ்வளவு துன்பம் வரினும் ஏற்றுக்கொள்பவர். 'அளவிலாத அன்பு அளவிலாதத் துன்பம்' என்பதற்கு அவர்கள் வாழ்வு சான்றாகும்-இந்த இயல்பையும் உண்மையையும் விளக்குவதே சிவனின் திருநீலக்கண்டத் திருவுருவம் ஆகும் என்று புதியதொரு விளக்கத்தை ந. ரா. முருகவேள் கூறுகிறார்.[13]

சிவன் பாற்கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு தேவர்களையும் அசுரர்களையும் திருமால் பிரமன் போன்றோரையும் காப்பாற்றி அருள் புரிந்தான். எனவே, இது அவனுடைய ஐந்தொழில்களில் ஒன்றான அருளல் செயலை உணர்த்தும் தத்துவமாக விளங்குகிறது எனலாம்.

### 4. 5. மூன்று கண்கள்

சிவனின் மூன்று கண்களைப் பற்றி பட்டினத்தடிகள்,

முக்கண்ணன் என்பது முத்தீ வேள்வியில்
தொக்கது எண்ணிடை என்பதுஓர் சுருக்கே

என்று கூறுகிறார்.[14]

'மோகாய முக்கண் மூன்றொளி' என்ற திருமந்திர பாடலடிக்கு வேறு பொருளும் கூறுவர். இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞானசக்தி என்கின்ற மூன்று சக்திகளைக் கொண்டவர் கடவுள் என்பதைக் குறிப்பதே அவருடைய முக்கண் என்று காமிகாமம்கூறுகிறது(அர்ச்சனா விதிப்படலம் 335). இவ்வாறே அகோரசிவாசாரியார் போன்ற சமயவாதிகள் இறைவன் கண்கள் இச்சா ஞானக் கிரியைகள் என்றும், சோம சூரிய அக்கினிகள் என்றும் விளக்கிக் கூறுவர் (அகோர சிவாசாரியார், தீக்ஷாவிதி, கிரியக்ரம ஜோதி வியாயானம்).[15]

ஐம்புலன்களையும் அடக்கி முறையாகப் பிரம்மசரிய விரதத்தைச் செய்பவனுக்கு ஞானக்கண் தானே உண்டாகும். முழுமுதல் பொருளான சிவன் தானே ஞான சொரூபமாக இருப்பவர். ஞானக்கண் திறக்கப் பெறின் காமம் கிடையாது. கடவுள் தாம் இவ்வாறு இருப்பதால் மாந்தரும் முக்கண்ணை அதாவது அறிவுக் கண் பெறவேண்டும் என்பதை உணர்த்தவே இவ்வுருவம் அமைகிறது என்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் கூறுகிறார்[16].

மேற்கூறிய செய்திகளிலிருந்து அறிவுணர்ச்சியை அளிப்பதாக ஞானக்கண் இருக்கிறது என்று சிவனின் மூன்றாவது கண்ணிற்குத் தத்துவ விளக்கம் பெறப்படுகிறது.

மாந்தரிடத்தும் மூன்றாவதாகிய ஞானக் கண் என்ற ஒன்று இருப்பதை அறியலாம். அது கட்புலனுக்குத் தெரிவதில்லை. புலன்களை அடக்கிப் பிரம்மச்சரிய விரதத்தில் இருப்பவருக்கு ஞானக்கண் எளிதில் புலனாகும் என்னும் இத் தத்துவத்தை உணர்த்தவே இறைவன் மூன்று கண்களை யுடையவனாகக் கூறப்படுகிறான் என்ற கருத்தும் பெறப்படுகிறது.

### 4.6. சடைமுடி

பழந் தமிழிலக்கியங்களில் புரிசடை, அவிர்சடை, நீணிமிர்சடை, தாழ்சடை என்பன காணப்படுகின்றன.

சடைமுடி ஞானத்தின் அடையாளம் என்பர். எனவே தான் ஞானிகள் சடைமுடி கொண்டுள்ளனர். முற்று முணர்ந்த பெரு ஞானியாகத் திகழ்பவன் சிவன். எனவே, ஆன்மாக்களுக்கு ஞானத்தை அருள வேண்டிச் சடைமுடியுடன் விளங்குகிறான். பனித்த சடை, செஞ்சடை என்பன திருமுறைகளில் காணப்படுவன.

இவற்றால் சடையின் நிறமும் தன்மையும் அறியலாம். 'நுண்சிகை ஞானமாம்' என்பது திருமந்திரம் இச் சடையில் ஒன்றுபட்டுக் குவிந்த ஞானத்தை விளக்கும் முடிச்சடையும், உயிர்களுக்கு ஞானமூட்டும் பரந்த நிலையை உணத்தும் பரந்த சடையும் உண்டு.[17]

### 4. 7. கொன்றை

சிவனுக்குரிய மலராகப் போற்றப்படுவது கொன்றை மலராகும். இது சரக்கொன்றை, சிறு கொன்றை, புலிநகக் கொன்றை, பெருங்கொன்றை, மந்தாரக் கொன்றை, மயிற் கொன்றை, செம்மயிற் கொன்றை, பொன்மயிற் கொன்றை, முட்கொன்றை, கருங்கொன்றை யெனப் பலவகைப்படும்.[18]

சிவன் ஓங்கார வடிவினனாவான். கொன்றை மலரின் உட்பாகத்தில் ஓங்கார வடிவம் போலக் காணப்படுகிறது. எனவே, ஓங்கார வடிவினனாகிய சிவனே கொன்றை மலரை அணியத் தகுந்தவன். மேலும் சரக்கொன்றைப் பொன் னிறமாகக் காணப்படும் என்று சி. ஜகந்நாதாசார்யர் கருத்து தெரிவித்துள்ளார்.[19]

விநாயகரின் துதிக்கையைப் போல எருக்கம் பூ காணப் படுவதால் எருக்கம் பூமாலை விநாயகருக்கு உரியதாகக் கூறப்படுகிறது. நாகலிங்கப் பூவின் உட்பாகம் நாகலிங்க வடிவம்போலக் காணப்படுவதால் லிங்கத்திற்குரியதாகக் கூறப்படுகிறது. அதுபோல் ஓங்கார வடிவினன் என்னும் தத்துவத்தை விளக்கும் வகையில் கொன்றை மலர் சிவனுக் குரியதாகக் கருதப்படுகிறது.



கொன்றை மலர்

### 4. 8. கங்கை

கூப்பிய கரத்துடன் கங்கை சிவனின் சடையிலுள்ளது. இது இறைவனின் எண்குணத்துள் அளவில்லாத ஆற்றலை உணர்த்தும். எப்போதும் நீர் பெருகிக்கொண்டே வருகின்ற கங்கையையும் ஒரு மயிர்க்காலில் கட்டும் வல்லமையுள்ளவன் சிவன் என்பதை அறியலாம்.[20]

அருள் உலகுக்கும் புறவுலகுக்கும் பயன்படும் ஒரு பொருள் இதில் புதைந்துள்ளது. யோகியர்களின் உச்சந்தலையில் ஸஹஸ்ராரத்தினின்று அமிர்த தாரை வடிகிறது. அதனைப் பருகி அவர்கள் ஆனந்தம் அடைகின்றனர். சிவன் யோகியர்க்கெல்லாம் கடவுள் ஆகின்றார். அவரது உச்சந்தலையினின்று வரும் கங்கை இந்த அமிர்த தாரையின்

சின்னமாகும். அதனால் அவருக்குக் கங்காதரன் என்ற பெயர் வந்தது என்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் கூறுகிறார்.[21]

## 4. 9, பிறை

சிவன் சடையில் அணிந்துள்ள பிறை அவரது பேரறிவைக் குறிக்கிறது என்று காமிகாமம் (அர்ச்சனா விதிப்படலம். 335) கூறுகிறது.[22]

தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
யாமதி யானென அமைந்த வாறே[23]

என்று பட்டினத்தடிகள் சிவனின் பிறையைப் பற்றிக் கூறுகிறார்.

இறைவனின் அருளாற்றல் உயிரின் வினையினைக் கெடுத்து மேலான பதவியைக் கொடுக்கவே பயன்படும். அதுபோலப் பிறைமதி முழுமதியாய்ச் செருக்குற்றுத் தக்கன் முதலியோர் சாபம் இடத் தேய்மதியாகி இறைவனின் திருவடியை அடைந்தது. இறைவன் அதன் சாபத்தை நீக்கித் தன் திருவடிமேல் வைத்துக்கொண்டமை வினை கெடுத்து உயர்வு அளிக்கும் குறிப்பை உணர்த்துகிறது.[24]

இக்கருத்தையே ந ரா. முருகவேளும் கூறுகிறார்.[25]

இது சிவபெருமானின் ஐந்தொழில்களில் ஒன்றான அருளல் தொழிலை உணர்த்துகிறது.

எனவே, 'குற்றம் புரிதல் மனித இயல்பு; அதனை மன்னித்தல் இறை யியல்பு' என்ற கருத்திற்கேற்ப, பிழை செய்வார் தம் பிழைகளை யுணர்ந்து இறைவனை நாடின் அருள்புரிவான் என்ற சிறந்த உண்மையைச் சிவன் அணிந்துள்ள பிறை விளக்குவதை அறியலாம்.

## 4. 10. திருநீறு

சிவன் தனது திருமேனியில் திருநீறு அணிகிறான். திருஞான சம்பந்தர் 'பராவணமாவது நீறு' என்று கூறு

வதால், திருநீறு பராசக்தியின் வடிவமாக இறைவனின் திருமேனி முழுவதும் பிரிவின்றிக் கூடியிருத்தலைக் காட்டுகிறது. அகத்திய தேவார திரட்டில் பதிகத்தின் கருத்து வரும் இடத்தில் 'மலராத...நீற்றுக் கொடியை நேர்பட எடுத்தும்' என்னும் பகுதி உயிர்களின் பாச வினையை நீக்க இறைவன் மேனி முழுதும் திருநீறு அணிந்திருக்கிறான் என்று குறிக்கிறது. இதனை உமாபதி சிவாசாரிய சுவாமிகள் தம் கோயிற் புராணத்தில், 'பாசமும் அங்கது அழியப்பண்ணும் திருவெண்ணீறும்' என்று கூறுகிறார். திருநீறு முடிந்த முடியைக் குறிப்பது. திருநீறு சாணத்திலிருந்து தயாரிக்கப் படுகிறது. சாணம் கருமையானதாகவும் சார்பால் அழுக்கைக் கெடுக்கும் தன்மையதாகவும் இருக்கிறது. அதனைத் தீயால் சுடுவதால் குற்றம் நீங்கித் தூய வெண்ணீறாகிறது. அதுபோல் ஆன்மாக்கள் தன் தன்மை கெடின் தூய பொருளாக விளங்கும் நிலையை அடையும். சுட்ட திருநீற்றைச் சுட்டாலும் தன் வெண்மைத் தன்மை நீங்காது. மாறாத தனிப்பொருளான அதனை இறைவன் திருமேனியில் அணிவது, தானும் தன்னைச் சாரும் பொருளும் அநாதி நித்தியமானவை என்பதை உணர்த்துவதாகும்.[26]

இதனால் திருநீறு என்பது பாராசக்தியின் வடிவமாகவும் மலத்தைக் கெடுப்பதாகவும் அநாதி நித்தியப் பொருளாகவும் விளங்குவதை உணரலாம்.

### 4. 11. பூணூல்

இது இறைவனுடைய மார்பில் குறுக்காக உந்திவரை தொங்குவதாகும். இது மூலாதாரத்திலிருந்து நாபிக்கு வரும் குண்டலினியைக் குறிப்பது. 'நூலது வேதாந்தம்' என்று திருமந்திரம் கூறுவதால் வேதத்தின் முடியாகிய பிரணவ காயத்திரியைக் குறிக்கிறது.[27]

### 4. 12. புலித்தோலாடை

அகங்காரம் என்னும் புலியைச் சிவனே கொன்று அதனுடைய தோலை அரையில் ஆடையாக அணிந்துள்ளான் என்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் கூறுகிறார்.[28]

**4. 13. யானைத் தோலாடை**

மனிதனின் உட்பகை யானைபோல் பலமாக இருந் தாலும் அதனைச் சிவபக்தர்கள் ஆழ்ந்த பக்தியினாலும் ஒழுக்கத்தினாலும் போக்கிக்கொள்ளலாம் என்று இரபிந்தர குமார் சித்தாந்த சாஸ்திரி கூறுகிறார்.[29]

**4. 14. மழு**

மழு 'பரையின் வடிவாய் பாசச்சேதம் பண்ணுவது என்னும் காரண ஆகமம் ஆகும்.'[30] என்று தத்துவம் கூறப் படுகிறது.

மழு பாராசக்தியின் உருவம் என்பதையும் லயத்தானம் என்பதையும் தெரிவிப்பது. பராசக்திக்கு மேலானவரும் லயசிவமாயிருப்பவரும் தாம் என்னும் கருத்தை அன்பர் களுக்கு உணத்துவதற்காக சிவன் மழு ஏந்தியுள்ளார் என்பர் என்று மயிலை சீனி. வேங்கடசாமி கூறுகிறார்.[31]

**4. 15. சூலம்**

சூலம் மூன்று பிரிவுகளையுடையது. அம் மூன்றும் முக்குணங்களை உணர்த்துவன என்று காமிகாமம் கூறு கிறது. (அர்ச்சனா விதிப்படலம் 335) பௌஷ்கரவிருத்தி (பௌஷ்கராகமம்) ஆரணி, செனனி, இரோதயித்திரி என்ற மூன்று சக்தியுடையதாகி மூன்று தொழில்களைச் செய்து மூன்று மலங்களை நீக்கி முக்தியை அளிப்பது என் னும் கருத்தைக் கூறுகிறது.[32]

ஆரணி என்பது அழித்தல் தொழிலையுடையதாய் உயிர்களைத் தத்துவத்தினின்றும் தத்துவார்த்தத்தை அடைவிப்பது. செனனி என்பது ஆக்கல் தொழிலுக்குக் காரணமாவது. இரோதயித்திரி என்பது உயிர்களைப் போகங்களில் நிறுத்துவது. எனவே, திரிசூலம் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று சக்திகளைக் குறிக்கிறது.[33]

மூவிலை யொருதாட் சூலம் ஏந்துதல்
மூவரும் யானென மொழிந்த வாறே[34]

என்று பட்டினத்தடிகள் கூறுகிறார். இதனால் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னும் மூவரும் தானே என்பது பொருள் விளங்குகிறது.

*கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக் கோன்*
*மாற்றாரை வெல்லும் படைபகராய் - ஏற்றார்*
*அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்*
*கழுக்கடைகாண் கைக்கொள் படை*[35]

என்று மாணிக்கவாசகர் கூறியுள்ளதால் அன்பர்களிடம் மும்மல அழுக்கு அடையாதிருக்கும்படி பாதுகாப்பதே இதன் தத்துவம் என்று உணரலாம்.

நடராசப் பெருமான் சிறந்த தலங்களிலுள்ள மக்கள் இறந்துபடின் அவர்கள் செய்த தீவினைக்கேற்ற நரக வேதனை இல்லை என்றும், இறைவன் வைரவக் கோலத்தில் தாங்கிய சூலப்படையின் நுனியில், ஒரு கணப்பொழுது வருந்துதலே தண்டனை என்பதுமான தலவரலாற்றுக் குறிப்புகளும், அழுக்கு அடையாவகை ஆளுவதையே அறிவிப்பது. சூலம் உயிர் வடிவமானது; உயிர்களுக்குத் தீங்கு சாராத வண்ணம் எப்போதும் இறைவன் கரத்தேந்திக் காத்துக் கொண்டே இருக்கிறார் என்று மற்றொரு விளக்கமும் காணப்படுகிறது.[36]

## 4. 16. காபாலம்

இது மங்கள சொருபத்தையும் இறைவன் விருப்பு வெறுப்பு அற்றவன் என்பதையும் விளக்குவது.[37]

பிரம்மதேவன் உள்ளிட்ட அனைவரும் இதில் அடக்கம் என்று சி. ஜகந்நாதாசார்யர் கருத்து தெரிவித்துள்ளார்.[38]

## 4. 17. நந்தி

சிவனுடைய வாகனமும் கொடியும் நந்தி ஆகும். நந்தி என்பதற்கு மகிழ்ச்சியுடையது என்பது பொருள். இது வெண்மை நிறமுடையது.

சிவன் கோயில்களில் சிவலிங்கமும், அதற்கு நேர்எதிரில் நந்தியும் பலிபீடமும் இருக்கின்றன. இவைகள் முறையே பதி, பசு, பாசம் என்று கொள்ளுவர். இவைகள் வேதாகமங்களில் கூறப்படும் பதி, பசு, பாசம் என்றே கொள்ளலாம்.[39] இவை மூன்றும் அநாதி நித்யம் என்பதைத் திருமூலர் திருமந்திரத்தின் வாயிலாக அறியலாம்.

*ஆய பதிதா னருட்சிவ லிங்கமாம்*
*ஆய பசுவு மடலே றெனநிற்கும்*
*ஆய பலிபீட மாகுநற் பாசமாம்*
*ஆய அரனிலை யாய்ந்துகொள் வார்க்கே.*[40]

பாசம் நீங்கிய ஆன்மா சிவனுடன் நிலைத்த தொடர்பு கொண்டிருப்பது என்பது தத்துவமாகக் கூறப்படுகிறது. எனவே, சிவனை வழிபடுவார் பாசமாகிய மும்மலத்தைப் பலிபீடத்தில் விட்டுவிட்டால் நந்திக்கும் சிவனுக்குமுள்ள இடைவெளி அளவே பதிக்கும் (சிவனுக்கும்) ஆன்மாவிற்கும் உள்ள இடைவெளி, ஆகையால் எளிதில் பதியாகிய சிவனை அடையலாம் என்று கூறலாம்.

### 4. 18. திரிபுரம் எரித்தமை

திரிபுரம் எரித்த செயல் தூலம், சூக்குமம், காரணம் என்னும் மூவகை உடல்களுக்கும் காரணமாக உள்ள ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் அழித்து இறைவன் உயிர்களுக்குச் செய்யும் அருள்திறத்தை காட்டுவதாகும்.

*அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்*
*முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்*
*முப்புர மாவது மும்மல காரியம்*
*அப்புறம் எய்தமை யாரறி வாரே.*[41]

என்று திருமூலர் கூறுகிறார்.

இம் மூன்று மலங்களும் உயிர்களிடத்தில் தங்கித் தூய்மையை மறைத்து அரணுடைய கோட்டைபோல

வலிமையாக உள்ளன. இம்மூன்றை அழித்தால்தான் வீடுபேறு அடைய முடியும். எனவே, இறைவன் தாண்டவத்தைச் செய்து மும்மலமாகிய முப்புரத்தை அழிக்கிறார்.

இறைவன் திரிபுரத்தை அழித்தபோது கொடுகொட்டி, பாண்டரங்கம் என்னும் இரண்டு தாண்டவத்தை ஆடினார். இவற்றின் விளக்கம் இரண்டாவது இயலில் கூறப்பட்டுள்ளது.

கொடுகொட்டி, பாண்டரங்கம் என்கின்ற திரிபுர தாண்டவங்கள் காத்தல் செயல் ஆகும்[42] என்றும், மறைத்தல் செயலாகிய திரோபவம் ஆகும்[43] என்றும் இருவேறு தத்துவங்கள் கூறப்படுகின்றன.

சிவன் முப்புரம் எரித்ததன் உட்பொருளை வை. இரத்தின சபாபதி அவர்கள் வேறுவிதமாகக் கூறுகிறார். அது வருமாறு:

> மனித உடம்பில் 360 நாடிகள் உள்ளன. அதை ஒட்டியே ஒரு ஆண்டு அமைகிறது. அவைகள் பலவாகப் பிரிந்து சென்றாலும், மூன்று இடங்களில் இணைகின்றன. இணையும் இடத்திற்கு முடிச்சு என்ற பொருள் தரும் 'கண்டம்' என்ற சொல் பயன்படுத்தப் படுகிறது. அவ்வாறே அக்கினி கண்டம், சூரிய கண்டம், சந்திர கண்டம் என்ற மூன்று இணைப்புகள் உள்ளன.
>
> மூலாதாரத்தையும் மணிபூரத்தையும் இணைப்பது அக்கினி கண்டம். அதற்குத் தெய்வம் நான்முகன். சுவாதிட்டானம் அநாகதம் இணைந்த இடம் சூரிய கண்டம். அதற்குத் தெய்வம் திருமால்.
>
> விசுத்தி ஆக்ஞை என்ற இரண்டும் இணைந்த இடம் சந்திர மண்டலம். அதற்குத் தெய்வம் உருத்திரன்.
>
> இம் மூன்று முடிச்சுகளிலும் உள்ள அழுக்குகளை நீக்கி ஆன்மீகத் தன்மையுடையனவாக அவைகளை மாற்றிய செயலே திரிபுரம் எரித்த செயல்.[44]

## 4. 19. உமையொருபாகன் — அர்த்தநாரீஸ்வரர்



சைதன்யம், ஜடம் ஆகிய இரண்டு தத்துவங்களை உடையது இயற்கை. அறிவும் ஆனந்தமும் சைதன்யத்தைச் சேர்ந்தவைகள். எது அறிகிறதோ, உணர்கிறதோ, மகிழ்கிறதோ அது சைதன்யம். எந்த உடலின் மூலமாக, மெய்யின் மூலமாக, கருவியின் மூலமாக அறிவு மிளிர்கிறதோ அந்தக் கருவிக்கு ஜடம் என்று பெயர். உயிர்த் தத்துவம் சிவம்; உடல் தத்துவம் சக்தி உடல் இல்லாது உயிர்தன்னை விதவிதமாக விளங்காது. உயிர் இல்லாது உடல் ஒன்றுக்கும் உதவாது. உயிரும் மெய்யும் கொள்ளுகிற கூட்டுறவால் இயற்கைத் திட்டம் இனிது நிறைவேறுகிறது. ஒவ்வோர் உயிரும் அதனதன் தாய் தந்தையின் பாதிப் பகுதி அம்சம் பெற்றே உண்டாகின்றது என்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் கூறுகிறார்.[45]

உலகிலுள்ள சமுதாய வாழ்க்கையில் ஆண்-பெண் இருவரும் ஒன்றுகூடி அன்பினால் இணைந்து ஒருவருக்

கொருவர் துணையாய் வாழும் வாழ்வு நலம் தரும் என்ற உண்மையை இத்திருவுருவம் உணர்த்துகிறது என்று ந.ரா. முருகவேள் கூறுகிறார்.[46]

இக் கருத்துகளால் உலகிலுள்ள உயிர் வாழ்க்கையின் உண்மையை விளக்கும் தத்துவமாக உமையொருபாகன் வடிவம் அமைந்திருப்பதைக் காணலாம்.

## 4. 20 இராவணன் கயிலையைப் பெயர்த்தல்

ஞானசம்பந்தர் தேவாரத்தில் ஒவ்வொரு பதிகத்திலும் பெரும்பாலும் எட்டாம் பாட்டில் இராவணன் கதையைக் கூறுகிறார்.

*அரக்கனார் அருவரை யெடுத்தவன் அலறிட*
*நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே*
*கருக்குவாள் அருள்செய்தான் கழுமல வளநகர்ப்*
*பெருக் குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே*[47]

*இலங்கை மன்னன் தன்னையிடர்கண் டருள்செய்த*
*சலங்கொள் சென்னி மன்னாஎன்னத் தவமாமே.*[48]

சிவன் இராவணன் கயிலையை எடுத்தபோது ஒரு கால்விரலை ஊன்றி அவனை நெருக்கினார். இராவணன் தலையையும் கை நரம்பையும் அறுத்து யாழ் செய்து வாசித்ததைக் கேட்டுச் சிவன் உவந்து அவனுக்கு வாள், தேர், நாள் கொடுத்து அருள்புரிந்தாள். சிவனது அருட் செயலை என்ன தவமோ என்று சம்பந்தர் வியந்து பாடுகிறார்.

சிவன்கோபங் கொண்டு தீங்கு செய்பவரைத் தண் டிப்பவனாயினும், அவர்கள் திருந்தியபோது அவர்களுக்கு அருள்செய்பவன் என்ற தத்துவத்தை இக் கதை உணர்த்தும்.

## 4. 21. தக்கன் யாகம் அழித்தல்

செருக்குற்ற தக்கன் முழுமுதற் கடவுளாகிய சிவனையே அழிக்க எண்ணிக் கொடிய யாகம் செய்தான். அதற்கு பிரம்மா, விஷ்ணு, தேவர்கள் ஆகிய அனைவரும் உடந்

தையாக இருக்கிறார்கள். இறைவன் அவர்களுடைய ஆணவத்தை அடக்க எண்ணி அந்த யாகத்தையும், யாகத்திற்கு வந்திருந்த அனைவரையும் அழித்துவிடுகிறான். இச் செயல் அவனுடைய ஐந்தொழிலில் ஒன்றான அழித்தலின் பாற்படும். பின்னர் மீண்டும் அவர்களை உயிர் பெற்று எழும்படி செய்கிறான். இச் செயல் படைத்தல் தொழிலைக் காட்டுகிறது.

சிவன் அவர்கள் செய்த பாவங்களைப் போக்கித் தூய்மையாகவே அவர்களை அழித்தான் என்பது,

காம னுடலுயிர் காலன்பற் காய்கதிரோன்
நாமகள் நாசிசிரம் பிரமன் கரம்எரியைச்
சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையுந்
தூய்மைகள் செய்தவா தோணோக்க மாடாமோ.[49]

என்று மாணிக்கவாசகர் கூறும் திருத்தோணோக்கப் பகுதியால் அறியலாம்.

### 4. 22. ஆலமர் கடவுள் — தக்ஷிணாமூர்த்தி

சிவன் கல்லாலின் கீழ் தென்திசையைப் பார்த்தவாறு அமர்ந்து சின்முத்திரையைக் காட்டி நால்வர்க்கு வேதங்களின் பொருளைக் கூறினான் என்பது கதை.

### 4. 23. சின்முத்திரையின் தத்துவம்

சித் + முத்திரை—சின்முத்திரை
சித் — ஞானம்
முத்திரை—அடையாளம்

ஞானப்பொருளின் அடையாளமாகச் சின்முத்திரை விளங்குகிறது. பெருவிரலும் சுட்டுவிரலும் ஒன்றையொன்று வளைந்து சார்ந்து இருக்க, ஏனைய மூன்று விரல்களும் விலகித் தனித்து இருக்கும். இந் நிலையே சின்முத்திரை யாகும். பெருவிரலின் துணையின்றி நம்மால் ஒரு காரியமும் செய்யமுடியாது, அது சின்முத்திரையில் பதியைக் குறிப்பதாகும். பொதுவாகச் சுட்டுவிரல் தன்னியல்பில் பெருவிரலை விட்டு விலகி ஏனைய மூன்று விரல்களுடன் சேர்ந்து இருக்கும். அந் நிலை பசு என்று

அழைக்கப்படும் உயிரானது பதியைச் சேராமல் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும் மலத்தில் அழுந்திப் பிறப் புத் துன்பத்தில் உழல்கிறது. உயிரானது பிறப்பு இறப்புத் துன்பங்களிலிருந்து விடுபட வேண்டுமாயின் பதியாகிய இறைவனை அடைய வேண்டும் என்பதை உணர்த்துவதே சின்முத்திரைத் தத்துவமாகும்.[50]



தக்ஷிணாமூர்த்தி

ஆலமரம் இயற்கைக்குச் சின்னமாகிறது. இறைவன் அதன் கீழ் அமர்ந்து இருப்பதால் இயற்கையும் இறை வனும் ஒன்று என்பது அறிவுறுத்தப்படுகிறது. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்கு கருத்து களையும் (புருஷார்த்தங்களையும்) நிலைநாட்டும் வண்ணம் இக் கோலம் அமைந்திருக்கிறது என்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் கூறுகிறார்.[51]

## 4. 24. ஆதிரையான்

வல்லபாச்சாரியார் இயற்றிய நட்சத்திர சூடாமணி என்னும் நூலில் திருவாதிரை நட்சத்திரம் பற்றிக் கூறியது வருமாறு:

திருவாதிரை நட்சத்திரம் இரத்தம் போன்ற சிவந்த நிறமானது. அதனை உருத்திர தேவா என்று அழைப்பர். அவன் மூன்று கண்கள், இரண்டு கைகள் உடையவன், சூலாயுதம் உடையவன், ரிஷப வாகனம் உடையவன். உக்ர சுபாவம் கொண்டவன், ஊர்த்துவ முகம் (மேல் நோக்கும் பார்வை) உடையவன் வெண்மையான உடை அணிந்தவன்.[52]

முதல்வன், தன்னுடைய சக்தியின் வடிவாக அமைந்து தனது திருவருளைக் காட்டியதால் சிவன் ஆதிரை நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று கூறப்படுகிறான்.[53] மேலும் இருபத்தேழு நட்சத்திரங்களில் 'திரு' என்ற அடை மொழியுடன் கூடியது 'திருவாதிரை', 'திருவோணம்' என்ற இரண்டு நட்சத்திரமாகும், திருவோணம் திருமாலுக்குரிய நட்சத்திரமாகும். திருமால் அவதாரம் செய்ததாக வழக்குண்டு. எனவே, அவருச்குரிய நட்சத்திரமாக திருவோணத்தைக் கூறுவது பொருந்தும். ஆனால் சிவன் அவதாரம் செய்ததாக வழக்கில்லை. எனினும் அவன் அடியார்க்கு காட்டிய திருவருளாலும் திருவாதிரை நட்சத்திரம் சிவனின் சிவந்த திருமேனி போலச் சிவந்த நிறத்தில் காணப்படுவதாலும் திருவாதிரை நட்சத்திரம் சிவனுக்குரியதாகக் கூறப்படுகிறது.

வடமொழியில் திருவாதிரை நட்சத்திரம் 'ஆருத்திரா' என்று கூறப்படுகிறது. இதில் 'ருத்திரா' என்பது சிவனின் தன்மையைக் குறிப்பதாக விளங்குகிறது. எனவே மேற்கூறிய காரணங்களால் திருவாதிரை நட்சத்திரம் சிவனுக்குரிய நட்சத்திரம் எனபதை அறியலாம். எனவே சிவனை 'ஆதிரையான்', 'ஆதிரை முதல்வன்' என்று பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன.

### 4.25. சிவலிங்கம்

சிவலிங்கத் திருமேனியில் எல்லாத் தத்துவங்களும் அடங்கியிருப்பதை சிவசாத்திர நூல்கள் விரிவாகக் கூறுகின்றன. ஈசானம், தத்புருஷன், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்கின்ற ஐந்து வடிவங்கள் கூறப்படும். இவற்றைப் பஞ்ச பிரம மூர்த்தம் என்பர். இவற்றுள் ஈசானம் வடகிழக்கை நோக்கியுள்ள உச்சி முகம். தத்புருஷம் கிழக்கே நோக்கியுள்ள முகம், அகோரம் தென்முகம், வாமதேவம் வடக்கு முகம், சத்யோசாதம் மேற்கு முகம் ஆகும். இவற்றைப் பற்றி விவரமாக சதாலிங்கம் என்ற திருமந்திரப் பகுதியில் 1730-1752-ஆம் பாடல்களில் கூறப்பட்டுள்ளன. இவ்வாறே சிவலிங்கத் திருமேனியில் ஆறு அத்துவாக்கள், திரிமூர்த்திகள், முப்பத்தாறு தத்துவங்கள் முதலியன எல்லாம் அடங்கியிருப்பதைக் காமிகம், காரணம், வாதுளம் முதலிய ஆகமங்களிலும், சித்தாந்த சாராவளி, சிவஞான சித்தியார், முதலிய சமய நூல்களிலும் விரிவாகக் காணலாம். ஆறு அத்துவாக்கள் சிவலிங்கத் திருமேனியில் அமைந்திருப்பதையொட்டி கலா நியாசம், தத்துவ நியாசம் புவன நியாசம், வர்ண நியாசம், பத நியாசம், மந்திர நியாசம் என்ற ஆறும் செய்யப்படுவதுண்டு. பிறகு ஆவாகனம், ஸ்தாபனம், சாந்நித்யம், நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனம், அர்க்கியம், புஷ்பதானம் ஆகிய பத்து சமஸ்காரங்களும் பிறகு ஜப சமர்ப்பணையும் செய்யப்படுவதுண்டு. இவற்றைத் தொகுத்துக் கூறுவது போலப் பெரிய புராணம் சாக்கிய நாயனார் வரலாற்றில் எட்டாம் பாடலில் 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்' என்று சேக்கிழார் கூறுகின்றார்.

சிவலிங்கத்தில் அடிப்பாகம், நடுப்பாகம், மேல்பாகம் என மூன்று பாகங்கள் உண்டு. இவைகளை முறையே பிரம பாகம், விஷ்ணு பாகம், ருத்திர பாகம் என்பதுண்டு.

ருத்ர பாகத்தைச் சிவபாகம் என்றும் விஷ்ணு பாகத்தையும் பிரம பாகத்தையும் சேர்த்துச் சக்தி பாகம் என்றும் ஆவுடையார் என்றும் சொல்வதுண்டு[54].

சிவலிங்கத்தை நோக்கும்போது உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் தோன்றி வளர்ந்து, பின்னர் மறைந்து, அதாவது ஒரேயடியாக அழிந்துவிடாமல் மீண்டும் தான் தோன்றிய நிலையைப் புதிய நிலையை அடைய வேண்டி மறைந்து, மீண்டும் தோன்றுகிறது என்பதை அறியலாம். எனவே, எந்தப் பொருளுக்கும் அழிவில்லை. அது நித்யமானது என்பதைக் காட்டவே சிவலிங்க வடிவம் அமைகிறது.

இவ்வாறு பண்டைத் தமிழிலக்கியங்கள் சிவனைப் பற்றிக் கூறும் கருத்துகள் ஒவ்வொன்றுக்கும் பிற்காலத்தில் பக்தி இலக்கியங்களாலும், சமய வாதிகளாலும் தத்துவங்கள் கூறப்படுகின்றன. தத்துவங்களிலும் சில மாறுபட்ட கருத்துகள் உள்ளன. இவற்றுக்குக் காரணம் நாளடைவில் வளர்ந்துவரும் சமுதாய வளர்ச்சியே ஆகும் எனலாம்.

## குறிப்புகள்


1. கழகத் தமிழ் அகராதி, ப. 460.
2. க. வச்சிரவேல் முதலியார், சைவமும் வைணவமும், ப. 76.
3. ரா. ஸ்ரீதேசிகன், மேனாட்டுத் தத்துவம், ப-ள். 9-12.
4. ஞானபூமி, அக்டோபர் 1983, ப. 10.
5. திருமூலர், திருமந்திரம், பா. எண். 1157.
6. மேற்படி, பா. எண். 396.
7. மறைமலையடிகள், தமிழர் மதம், ப. 85.
8. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப. 190.
9. ஞா. தேவநேயன், தமிழர் மதம், ப. 37.
10. கா. சுப்பிரமணிய பிள்ளை, தமிழர் சமயம், ப. 46.

11. திருவாசகம், திருச்சாழல், பா. எண். 8.
12. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 101.
13. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப. 207.
14. பட்டினத்தடிகள், திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது, பா. எண். 6, அடி எண் 6-7.
15. (அ) ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப் பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 98.
(ஆ) மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப. 18.
16. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங் கள், ப. 137.
17. ஆடல்வல்லான் ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப-ள். 98-99.
18. அபிதான சிந்தாமணி, ப. 517.
19. சி. ஐநந்நாதாசார்யர் அவர்களிடமிருந்து 20-4-84 அன்று நேரில் பெற்ற செய்தி.
20. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 99.
21. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங் கள், ப. 140.
22. மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப. 18.
23. பட்டினத்தடிகள், திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது, பா. எண். 6, அடி எண் 1-2.
24. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 99.
25. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப-ள். 191, 197.
26. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 100.

27. (அ) மேற்படி, ப. ள். 102-103.
(ஆ) மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப. 197.

28. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங்கள், ப. 148.

29. Rabindra Kumar Siddhanta Shastree, SAIVISM THROUGH THE AGE, P. 42.

30. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 106.

31. மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப. 22.

32. (அ) ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப் பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 106.
(ஆ) மயிலை. சீனி வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப.20.

33. மேற்படி, ப. 21.

34. பட்டினத்தடிகள், திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது, பா. எண். 6, அடி எண் 11-12.

35. திருவாசகம், திருத்தசாங்கம் ப. எண். 7.

36. ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமா நடராசப்பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 106.

37. மேற்படி, ப-ள். 99, 105.

38. சி. ஜகந்நாதாசார்யர் அவர்களிடமிருந்து 20-4-84 அன்று நேரில் பெற்ற செய்தி.

39. சோமசுந்தரம் செட்டியார், சி. ஜகந்நாதாசார்யர் (தொகுப்பாசிரியர்), சைவசித்தாந்தச் சொற்பொழிவுகள், ப. 133.

40. திருமூலர், திருமந்திரம், ப. எண். 2411.

41. மேற்படி, ப. 343.

42. (அ) ஆடல்வல்லான் (ஸ்ரீ ஞானமாநடராசப் பெருமான் மஹாபிஷேக மலர்), ப. 78.

(ஆ) மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப. 62.

43. மேற்படி, ப. 62.

44. வை. இரத்தினசபாபதி, வீரசைவம், ப-ள் 164-165.

45. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங்கள், ப. 136.

46. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப-ள் 172-173.

47. சம்பந்தர், தேவாரம், ப. 134.

48. மேற்படி. ப. 102.

49. திருவாசகம், திருத்தோணோக்கம், பா. எண். 1.

50. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப. 30.

51. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர். திருவாசகம், ப.206.

52. வல்லபாச்சாரியார், நட்சத்திர சூடாமணி, ப. 13.

53. வச்சிரவேல் முதலியார், சைவமும் வைணவமும், ப-ள் 58.59.

54. ம. பாலசுப்பிரமணிய முதலியார், 'சிவன்' கலைக் களஞ்சியம், தொகுதி-4, ப. 711.

# 5. சிவன் - ஒரு கருத்து வளர்ச்சி

5. ஆதியில் விலங்குகள் போல் வாழ்ந்து வந்த மக்கள் மனிதப் பண்புடன் வாழ்வதற்கு வழிகாட்டியாக விளங்கியது தெய்வ நம்பிக்கை யாகும். இந் நம்பிக்கைக் காரணமாக இயற்கைப் பொருள்களான ஞாயிறு, திங்கள், மின்னல், இடி, புயல், மழை, வெள்ளப் பெருக்கு போன்றவற்றில் கடவுளைக் கண்டு வணங்கினர். இவ்வாறு வழிபடப்பட்ட இயற்கை நாளடைவில் அறிவு வளர வளர தந்தையாகவும் தாயாகவும் நண்பனாகவும் அவர்களுக்கு உதவி செய்கின்ற கடவுளாக மாறிற்று. இதனையே மேனாட்டினர் அனைத்துக் கடவுள் கொள்கை (Pantheism) என்பர்.[1]

மனிதன் வளர்ந்து வருவதற் கேற்பச் சமயக் கருத்துகளும் வளர்ந்து வருகின்றன. இவ் வளர்ச்சியைக் கூர்ந்து நோக்கின் இரண்டு செய்திகள் புலப்படும். ஒன்று அடிப்படையில் மாறாதிருக்கும் சில தத்துவங்கள். மற்றொன்று அத் தத்துவங்களின் விளக்கமாய் இருக்கும் சில செய்திகள். முன்னது சித்தாந்தம் என்றும் பின்னது சமயச் சடங்குகள் என்றும் கூறப்படுகின்றன. சுருங்கக் கூறின் தத்துவப்பகுதி, சமயப்பகுதி எனலாம். இரண்டாவதாகக் கூறப்படும் சமயப்பகுதி சமுதாயத்திற் கேற்பவும் காலத்திற் கேற்பவும் மாறி வருவதைக் காணலாம்.[2]

மனிதன் வணங்கும் கடவுளர் பலவாக இருக்கின்றனர். சைவத்தின் முக்கியக் கடவுளாகக் கூறப்படுவது சிவன். அக் கடவுள் சிவன் என்று பொதுவாக அழைக்கப்பட்டாலும் பல வடிவங்களையும் பெயர்களையும் கொண்டு விளங்குகிறான். இதற்குக் காரணம் சமுதாயத்தில் விளைந்த மாற்றங்களே யாகும். இவ்வியலில் 'சிவன்' என்னும் கருத்து பலவாறு வளர்ந்து வந்துள்ளமையினைச் சமுதாய மாற்றத்துடன் பொருத்திக் காட்டப்படுகிறது.

பண்டைத் தமிழிலக்கியங்கள் சிவனைப் பற்றிக் கூறும் செய்திகள் மட்டும் சமுதாய நோக்குடன் இங்கு ஆராயப் படுகின்றன. சிவனின் ஏனைய வடிவங்களும் அவனுக்குரிய பொருள்களும் இங்குக் கருதப்படவில்லை. ஆனால் இலிங்க வடிவம் பற்றி மட்டும் இங்குக் கருதப்படுகிறது. அதற்குக் காரணம் பண்டைத் தமிழிலக்கியக் காலத்திற்கு முன்பு இலிங்க வடிவில் சிவனை வணங்கி வந்தமையே யாகும் இவ் வடிவிலிருந்துதான் ஏனைய வடிவங்கள் தோன்றின.

## 5. 1. வடிவங்கள் தோன்றக் காரணம்

இறைவன் அடியவர்களிடம் கொண்ட கருணை காரணமாக வடிவம் எடுத்து வந்ததாகக் கூறுவர். மனித னுக்கு மனிதன் விருப்புவெறுப்புகள் மாறுகின்றன. எனவே, ஒன்றாக உள்ள இறைவனைப் பல வடிவங்களில் வழி படுகின்றனர் என்று அ. அய்யாசாமி கூறுகிறார்.[3]

## 5. 2. இயற்கை வழிபாடு

பண்டைக்கால மக்கள் எதனையும் பகுத்தறிந்து கொள்ள நினைத்தனர். எனவே, எல்லாச் செயல்களுக்கும் காரணமாக ஏதோ ஒரு சக்தி இருப்பதை உணர்ந்தனர். அச் சக்தியைத் தெய்வமாகக் கருதினர். இதனால் தம்மு டன் காணப்படும் அனைத்து இயற்கைப் பொருள்களை யும் தெய்வமாக வணங்கி வழிபட்டனர். இவ்வாறு மக்கள் தொடக்கத்தில் இயற்கையைத் தெய்வமாக வணங்கினர்.

## 5. 3. இலிங்க வழிபாடு

பண்டைக்கால மக்கள் குறிஞ்சி நிலம் முதலிய மலைப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர் என்பது அறிஞர்கள் கருத்து. அவ்வாறு வாழ்ந்து வந்த மக்கள் இயற்கைப் பொருள் வழிபாடுகளிலேயே ஒளி வழிபாடு மிகவும் இன்றியமை யாதது என்பதை உணர்ந்தனர். எனவே, பகலில் சூரிய னையும், இரவில் சந்திரனையும், இவை இரண்டையும் காண முடியாத இருள் நேரத்தில் நெருப்பினையும் அவர் கள் தெய்வமாக வணங்கி வந்தனர். பொருட்களைப்

பார்ப்பதற்கு உதவுவது ஒளி யாகும். நெருப்பின் உதவியால் பயன்கள் பல அடைந்தனர். தாம் வேட்டையாடிக் கொன்ற விலங்குகளைப் பச்சையாக உண்ணாது நெருப்பில் சுட்டு உண்டனர். குளிர் அதிகமான காலத்து நெருப்பு மூட்டிக் குளிர் காய்ந்தனர். எனவே, நெருப்பினை இறைவனின் இயல்புடையதாக எண்ணித் தெய்வமாக வழிபடலாயினர். இவ்வாறு தோன்றிய நெருப்பு வழிபாட்டிலிருந்து இலிங்க வழிபாடு தோன்றி இருக்கலாம். நெருப்பு எரியும் போது குவிந்து மேல் நோக்கி எழுகிறது. அதுபோல் இலிங்கத்தின் மேல்பகுதி நீண்டு குவிந்து காணப்படுகிறது.

ந. ரா. முருகவேள் அவர்களும் இக் கருத்தையே கூறுகிறார். நெருப்பைக் குறிக்கும் தீ என்னும் சொல்லினின்று தெய்வம், தேவர், தேவதை முதலிய சொற்கள் தோன்றியமை இங்கே கருதத்தக்கது. நெருப்பு வழிபாடே இறைவழிபாடாகக் கொண்டனர். இதனால் எரியோம்புதல். முத்தீ வேட்டல் முதலிய சமயக் கடமைகள் தோன்றின. அதனால் தீ வளர்க்கும் குழிக்கு (யாக குண்டத்திற்கு) அறிகுறியாக வட்ட வடிவமான பீடமும், அக் குழியில் வளர்க்கப்படும் தீயினுக்கு அறிகுறியாகக் குவிந்து நின்ற வடிவிலுள்ள இலிங்கமும் நாளடைவில் ஏற்பட்டன என்று அவர் இலிங்க வடிவத்தின் தோற்றம் பற்றிக் கூறுகிறார்.[4]

ந. ரா. முருகவேள் கூறும் கருத்தால் அதைப் படிப்போர் உள்ளத்தில் பண்டைக் கால மக்கள் யாகம் செய்ய அறிந்திருந்தனரா என்ற வினா எழக்கூடும். அவர்கள் இறை வழிபாட்டுக் கடமைகளில் ஒன்றான யாகத்தை அறிந்து செய்யவில்லையானாலும் தங்கள் வாழ்க்கைச் சூழலுக்காகத் தீ மூட்டினர் என்பது மேலே கூறப்பட்டது. அவ்வாறு தீ மூட்டும்போது வட்ட வடிவமான பீடத்தை உருவாக்கியிருக்கலாம். இதனைக் கருத்தில் கொண்டு ந. ரா. முருகவேள் இலிங்க வடிவம் உருவாயிற்று என்று கூறியிருக்கலாம்.

ஆய்வாளர்கள் புதையுண்டு கிடந்த நகரங்களை ஆய்ந்து கண்டபோது கிடைத்த பெரும்பாலான வழி பாட்டு உருவங்கள் இலிங்க வடிவில் உள்ளவை யாகும். எனவே, பழந்தமிழ் மக்கள் நெருப்பு வணக்கத்தைக் குறிக்க இலிங்க வடிவமான குறியீட்டைப் பயன்படுத்தி வந்தனர் என்பதை அறியலாம்.

## 5. 4. மனித உருவமும் அவனுக்குரிய பொருட்களும்

தான் பெற்ற அனுபவத்தை மனிதன் தன் படைப் பில் வெளியிடுவது இயல்பு. எனவே, இயற்கை வழிபாட்டி லிருந்து பண்டைய மக்கள் நாகரிகம் வளர வளர மனித உருவ வடிவில் இறைவனை வழிபடலாயினர். அதனால் அவர்கள் பயன்படுத்திய பொருள்களை இறைவனுக்கும் உரியதாகக் கொண்டனர்.

### 5. 4. 1. மூன்று கண்கள்

லெமூரியா நாட்டிலுள்ள ஆதி மக்களில் ஒருவகை யினர் பன்னிரண்டு அல்லது பதினைந்து அடி உயரமுடைய வராய் முன் தலையில் தசைக்கோளம் (Pineal gland) உள்ள இடத்தில் கண் போன்ற உறுப்பும் உருண்டையான நெற்றியும் உடையவராய் இருந்தனர் என்பது ஸ்காட் எலியட்டின் கருத்தாகும்.[5] இதே போன்ற கருத்தை திரு. கா. அப்பாதுரை அவர்களும் குமரிக்கண்டம் நூலில் கூறியுள்ளார்.[6]

எனவே, அவ் வினத்தவர் வழிவந்த மக்கள் இறைவ னுக்கும் பண்டைய முன்னோர் வடிவைப் படைத்துக் கூறினரென்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

### 5. 4. 2. செந்நிறம்

இயற்கை வழிபாட்டுடன் தெய்வ வணக்கத்தைத் தொடங்கிய பண்டைய மக்கள் நெருப்பின் நிறமான சிவந்த நிறத்தை மனித உருவில் வழிபடும்போது இறை வனுடைய நிறமாகக் கருதினர் எனலாம்.

### 5, 4.3 தாழ்ந்த நீண்ட சடை

பண்டைய மக்கள் நீண்ட சடைகளுடன் காணப்பட்டதால் இறைவனுக்கும் நீண்ட சடையைப் படைத்தனர்.

### 5. 4. 4. தோலாடை

பண்டைய மக்கள் வேட்டையாடும் தொழிலைச் செய்து வந்தனர். விலங்கினங்களை வேட்டையாடி அவற்றின் தோலை ஆடையாக அணிந்தனர். வேட்டையாடும் தொழிலில் மிகவும் அரிய செயலாகக் கருதப்படுவது புலியை வேட்டையாடுதலாகும். எனவே, புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்தனர். யானைத் தோலை உடம்பின்மேல் போர்த்துக்கொண்டனர். எனவே, அந்நிலையில் சிவனை வழிபடும் போது புலித் தோலாடையும், யானைத் தோல் போர்வையும் சிவனுக்கு உரியதாகக் கொண்டனர். இதே கருத்தை கா. சுப்பிரமணிய பிள்ளையும் கூறுகிறார்.[7]

### 5. 4. 5. கணிச்சி மழு

பண்டைய மக்கள் வேட்டையாடும் போது கற்கருவிகளைப் பயன்படுத்தினர். அக் கற்கருவிகளின் முனை கூர்மையுடையதாகக் காணப்படும். அக் கற்கருவிகளில் ஒன்று மழு. இதற்குக் கோடாரி, குந்தாலி, கணிச்சி என்னும் பெயர்களும் உண்டு. எனவே, சிவனுக்கும் உரிய ஆயுதமாக மழுவை ஏற்றிக் கூறினர். இதே கருத்தை ஐ·அண்ணாமலையும் கூறுகிறார்.[8]

### 5. 4. 6. கொன்றை மாலை

குறிஞ்சி நிலத்திற்குறிய கொன்றை சிவபெருமானுக்கு மாலையாக ஏற்றிக் கூறாராம். என்று ஞா. தேவநேயன் கூறுகிறார்.[9]

கொன்றைப் பூ முல்லை நிலத்திற் குறியது.[10] எனவே தேவநேயன் அவர்கள் கூறும் கருத்து பொருந்துவதாகத் தெரியவில்லை.

### 5. 4. 7. ஏறு– நந்தி

பண்டைய மக்கள் வேட்டுவ வாழ்க்கையிலிருந்து வேளாண்மை நாகரிக வாழ்க்கையை எய்தினர். வேளாண்மை செய்வதற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ள சில கற்கருவிகளை ஆய்வாளர் கண்டுபிடித்துள்ளனர். மேலும் மாடு, ஆடு, புள்ளிமான், கோழி, பன்றி, காட்டுப் பூனை, காண்டா மிருகம் ஆகியவற்றின் எலும்புகளை ஆய்வாளர் கண்டுபிடித்துள்ளனர்.[11] இவ்விலங்குகளில் மாடு (ஏறு) வயலை உழுவதற்காகப் பயன்படுத்தப்பட்டது. மக்கள் சமுதாயம் தாம் செய்யும் தொழிலுக்குக் காரணம் இறையருளே என்று நம்பியதால் வேளாண்மைக்கு உற்ற துணையாகப் பயன்பட்ட ஏற்றைச் சிவனுக்குரிய வாகன மாகவும் கொடியாகவும் வைத்து வழிப்பட்டனர் எனலாம்.

### 5. 4. 8. சூலம், வில்

இவை இரண்டும் இரும்பாலானவை. பண்டைய மக்கள் வேளாண்மை நாகரிகத்திலிருந்து இரும்பைப் பயன்படுத்திய இரும்புக் காலத்தில் சூலம், வில் ஆகிய இவ்விரண்டும் சிவனுக்குரியதாகக் கருதப்பட்டன. வேட்டுவ வாழ்க்கையில் விலங்குகளை வேட்டையாடக் கல்லாலான மழு, கணிச்சி போன்ற கருவிகளைப் பயன்படுத்தினர். இரும்புக் காலத்தில் விலங்குகளைக் கொல்ல இரும்பாலான சூலம், வில் இவற்றைப் பயன்படுத்தினர். எனவே இவ் விரண்டையும் சிவபெருமானின் ஆயுதமாகக் கூறினர்.

## 5. 5. அர்த்தநாரீஸ்வரர் — உமையொருபாகன்

மனித உருவ வழிபாட்டில் சிவனை வழிபடத் தொடங்கிய பண்டைய மக்கள் இயற்கைப் பொருள்கள் அனைத்திலும் ஆண் பெண் என்ற இரண்டு நிலை இருப்பதை அறிந்து இறைவழிபாட்டிலும் ஆண் கடவுள் பெண் கடவுள் என வழிபட்டனர். பின்னர் ஆண் பெண்ணின் இணைவால் அனைத்துப் பொருட்களும் தோன்றுகின்றன என்பதை உணர்ந்து இறைவழிப்பாட்டிலும் ஆண் பெண் என்ற தனித்த நிலையை விடுத்து இரண்டையும் ஒரே வடி

வத்தில் வைத்து வழிபடலாயினர். மேலும் பண்டைக் காலத்தில்ஆண் பெண் ஒன்று சேர்ந்த வடிவில் மக்கள் இருந்திருக்கக் கூடும் என்று பண்டைய மக்கள் நம்பியிருக்கலாம். எனவே, சிவனும் உமையும் சேர்ந்து அம்மையப்பர் (அர்த்நாரீஸ்வரர்) வடிவத்தில் வழிபடலாயினர்.

## 5. 6. தக்ஷிணாமூர்த்தி—தென்முக் கடவுள்

மக்கள் நாகரீகம் வளர வளரத் தங்கள் அறிவுப் பசிக்காகப் பல கருத்துகளை அறிந்துகொள்ள முயன்றனர். எனவே, நல்ல செயல்களையும், கருத்துகளையும், விஞ்ஞானத்தையும், மெய்ஞ்ஞானத்தையும் கேட்டறியவும் கண்டறியவும் கல்வி கற்கலாயினனர். கல்வியில் வல்லவர்கள் தாங்கள் கற்றவற்றைப் பிறர்க்கு எடுத்துக்கூறினர். கல்வியைக் கற்றுத் தருபவர் ஆசானாகவும், கற்றுக்கொள்பவர் மாணவனாகவும் கருதப்பட்டனர்.இவ்வாறு ஆசிரியர் மாணவர் உறவு முறை ஏற்பட்டபோது தோன்றியதே தக்ஷிணாமூர்த்தி வடிவமாகும். சிவனின் இவ் வடிவத்தில் பசுவாகிய உயிர் பதியாகிய இறைவனை அடைய வேண்டும் என்னும் மெஞ்ஞானத்தை விளக்கும் கல்வியைக் கற்றுக் கொடுக்கும் நிலையில் ஆலமரத்தின் அடியில் அமர்ந்திருக்க அவருக்குக் கீழ் நால்வர் கல்வியைக் கற்றுக்கொள்ளும் மாணவர்களாக அமர்ந்திருக்கின்றனர்.

## 5. 7. நடராசர்

சிவன் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்னும் மூன்று நடனங்களை ஆடுவதாகப் பண்டைத் தமிழிலக்கியங்கள் கூறுகின்றன.

கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய பண்டைய மக்கள் கலைகளை அறிந்துகொள்ள விரும்பினர். கலைகள் அறுபத்து நான்கில் ஒன்று நடனக் கலை. இதனை மக்கள் விரும்பிக் கற்று அதன் பலவித நுணுக்கங்களை அறிந்த பின்னரே நடராசர் வடிவத்தை உருவாக்கி இருக்கலாம். இந்த நடராசர் உருவம் தோன்றியதும் ‘அவனன்றி ஓரணுவும் அசையாது’ என்ற தத்துவத்தையும் கூறினர்.

மேற்கூறிய சிவனின் வடிவங்களும் பொருள்களும் சமுதாயத்துடன் தொடர்புடையன. பிறை அணிதல், கங்கையைச் சூடுதல், நீலகண்டனாதல் திருநீறு அணிதல், பூணூல் அணிதல், காபாலம் ஏந்துதல் போன்ற செயல் களுக்கும், அழிக்குங் கடவுள், எண்கையான், தவத்தோன், உயிர்களைக் காப்போன் போன்ற குணங்களுக்கும், இமை யோன், ஆதிரையான் போன்ற சிறப்புகளுக்கும், திரிபுரம் எரிந்தபோது கொண்ட வடிவம், இராவணன் கயிலையை பெயர்த்தபோது இருந்த நிலை போன்றவற்றிற்கும் சமுதாய அடிப்படையில் விளக்கம் காண்பது சிக்கலானது. ஏனெனில், இவை பெரும்பாலும் கதையுடன் தொடர்புடை யதாகக் காணப்படுகின்றன. கதைகளில் எது முந்தியது எது பிந்தியது என்று திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. ஏனெனில் ஒரு கதையே பலவிதமாகக் கூறப்படுவதையும் காண்கிறோம்.

இவ்வாறு பண்டைய மக்கள் இறை வழிபாட்டை இயற்கை வழிப்பாட்டிலிருந்து தொடங்கி இயற்கையில் ஒன்றான நெருப்பை இலிங்கம் என்னும் குறியீட்டு வழி பாடாக வணங்கினர். அதிலிருந்து மனித வடிவ வழி பாடாகச் சிவ வணக்கம் மாறியது. அவர்கள் பயன் படுத்திய பொருள்களும் சிவனுக்குரியதாக மாறின. ஆண் பெண் உறவுமுறையை விளக்கும் அர்த்தநாரீஸ்வரர் வடிவமும் ஆசிரியர், மாணவர் உறவைக் குறிக்கும் தக்ஷிணாமூர்த்தி வடிவமும் நடனக் கலையை உணர்த்தும் நடராசர் வடிவமும் தோன்றின. இவ்வாறு 'சிவன்' என்னும் கருத்து சமுதாய மாற்றத்திற்கேற்ப மாறி வளர்ந்து வந்தி ருப்பதை உணரலாம்.

## குறிப்புகள்

1. ம. பாலசுப்பிரமணிய முதலியார், ''சிவன்'' கலைக் களஞ்சியம், தொகுதி - 4. ப-ள். 710-711.
2. தி. சேஷாத்திரி, ஹிந்து மதம் (ஓர் அறிமுகம்), ப-ள். 4-5.

3. அ. அய்யாசாமி, இறைவனைத் தேடுங்கள், ப. 70.
4. ந. ரா. முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப.61.
5. கா. சுப்பிரமணிய பிள்ளை, தமிழர் சமயம், ப. 44.
6. கா. அப்பாதுரை, குமரிக்கண்டம் (அ) கடல் கொண்ட தென்னாடு, ப. 67.
7. கா. சுப்பிரமணிய பிள்ளை, தமிழர் சமயம் ப. 45.
8. ஐ. அண்ணாமலை, ''சங்ககாலச் சிவவழிபாடு'', பதினைந்தாவது ஆய்வுக்கோவை தொகுதி-3.ப.4.
9. ஞா. தேவநேயன், தமிழர் மதம், ப. 39.
10. அகநானூறு பா. எ. 4, வரி. 1-2.
11. தமிழ்நாட்டுவரலாற்றுக் குழு, தமிழ்நாட்டு வரலாறு (தொல் பழங்காலம்), ப. 192.

# 6. ஆய்வு முடிவுகள்

உலகிலுள்ள சமயங்களுள் மிகவும் தொன்மை வாய்ந்தது சைவ சமயம். இச் சமயத்தின் தலைமைக் கடவுளாகக் கூறப்படுவது சிவன். அக் கடவுள் பல வடிவங்களில் வழிபடப்படுகிறான். மற்ற சமயங்களின் கடவுளர் சிவனைப் போன்று பல வடிவ நிலைகளில் வழிபடப்படுவதில்லை. ஆனால் வைணவச் சமயத்தின் தலைமைக் கடவுளாக விளங்கும் திருமால் பல வடிவங்களில் வழிபடப்படுகிறார். திருமாலின் வடிவ வளர்ச்சி நிலைகள் அவருடைய அவதார முறைப்படி அமைந்திருக்கின்றன. சிவனின் வடிவ வளர்ச்சி நிலையைப் பற்றிக் கூறுவதற்குச் சரியான சான்றுகள் கிடைக்கவில்லை. இங்கே சிவனைப் பற்றிய வடிவங்களின் வளர்ச்சி நிலை சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளின் லளர்ச்சி நிலைகளைக் கொண்டு ஓரளவுக்கு ஆராயப்பட்டுள்ளது.

சிவ வழிபாட்டின் தொன்மைக்குச் சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட உருவச் சின்னங்கள் சான்று பகர்கின்றன. சிந்து சமவெளி காலத்துக்குப் பின்னர் உண்டானது வெதகாலம். அக்காலத்தில் பல தெய்வங்கள் வழிபடப்பட்டன. அவற்றுள் ஒன்று உருத்திரன் வழிபாடு. இக் கடவுளுக்குக் கூறப்படும் பண்புகள் பெரும்பாலும் சிவனுக்குக் கூறப்படும் பண்புகளுடன் ஒத்துள்ளன. எனவே, வேதாாலத்தில் சிவ வழிபாடு உருத்திர வழிபாடு என்னும் பெயரில் வழங்கி வந்தது எனலாம். வேதகாலத்திற்கு அடுத்துத்தோன்றிய புராண இதிகாச காலங்களில் சிவனை இலிங்க வடிவில் வழிபடப்பட்டது. புராண இதிகாசக் காலத்திற்குப் பின்னர், பண்டைத் தமிழிலக்கிய காலத்தில் சிவனைப் பல வடிவங்களில் வழிபடப்பட்டது.

பண்டைத் தமிழிலக்கிய காலத்தில் சிவ வழிபாடு இருந்திருந்த போதிலும் அக்கடவுளுக்கென்று தனி இலக்

கியம் இல்லை. இவ் விலக்கியங்களில் சிவனைப் பற்றிக் கூறுமிடத்து சிவன் என்ற சொல்லாட்சி பயன்படுத்தப் படவில்லை. அக்கடவுளின் பண்பு நலன்களைக் குறிக்கும் சொற்களே பயன்படுத்தப்பட்டுள்ளன.

பண்டைத் தமிழிலக்கியங்கள் நடைமுறை வாழ்க்கை யைத் தான் அதிகம் பேசுகின்றன, அதனால் கடவுள் பற்றிய செய்திகளைத் தங்களது பாடல்களின் மூலம் மக்களிடம் பரவச் செய்வதற்குப் பண்டைத் தமிழிலக்கி யப் புலவர்கள் அதிக இன்றியமையாமையைக் கொடுக்க முடியவில்லை என அறிய முடிகிறது. திருமுருகாற்றுப் படை பரிபாடல் தவிர மற்ற இலக்கியங்கள் அமைந்திருக் கும் முறையால் இதனை உணரலாம்.

பண்டைத் தமிழிலக்கியங்களில் சிலவற்றில் சிவனைப் பற்றிய வாழ்த்துப் பாடல்கள் உள்ளன. அப் பாடல்கள் அனைத்தும் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப் பட்டிருக்கின்றன. கடவுள் வாழ்த்துப் பாடல்களை விடுத்து பண்டைத் தமிழிலக்கியப் பாடல்களில் சிவனின் செயல்கள் குறிப்புகளாகவும், அவனுடைய சிறப்புகள் ஒப்புமையாக வும் கூறப்பட்டுள்ளன. எனவே, பண்டைத் தமிழிலக்கிய காலத்தில் சிவவழிபாடு இருந்தமையை அறியலாம்.

புவவர்கள் அரசர்களின் செல்வம், வெற்றி, நீண்ட நாள் வாழ்வு. திறமை முதலானவற்றுக்குச் சிவனுடைய பெருமைகளை ஒப்புமைப்படுத்தி பாடியிருப்பதைப் பண் டைத் தமிழிலக்கியங்களில் காணமுடிகிறது.

பண்டைத் தமிழ் இலக்கியப் பாடல்கள் சிலவற்றில் தலைவன் பொருள் தேடும் பொருட்டுச் செல்லும் வழியின் இயல்பு பற்றிப் பேசுமிடத்தும், தலைவி தன் குழந்தையைப் பற்றிப் பேசுமிடத்தும் சிவனின் சிறப்புகள் ஒப்பிடப்பட் டுள்ளன.

சிவனின் திருக்கோல மமைப்பு, கொன்றை மாலை, பிறை, கங்கை, திருநீறு, புலித்தோலாடை, யானைத் தோலாடை முதலான சிவனின் அணிகலங்கள், கணிச்சி,

மழு, சூலம், வேல் முதலான சிவனின் ஆயுதங்கள் ஆகியன பற்றியும் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பேசுகின்றன.

சிவனின் கொடியும் வாகனமுமான எருது பற்றியும், கொடு கொட்டி, பாண்டரங்கம், கபாலம் ஆகிய சிவனது ஆடல்கள் பற்றியும், சிவனது எண்வகைக் குணம், தவம், காத்தல், அழித்தல் முதலானவை பற்றியும் பண்டைத் தமிழிலக்கியங்கள் பல்வேறு இடங்களில் பேசுவதையும் காண முடிகிறது.

சிவனுடைய மைந்தனான முருகனைப் பற்றிப் பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகியவற்றில் சிறப்பாகவும் ஏனையவற்றில் குறிப்பாகவும் பேசப்படுகின்றன. சிவனுடைய முதல் மைந்தனாக அகத்தியரைச் சொல்லுவதற்குச் சில தமிழிலக்கியங்கள் வழிவகுக்கின்றன. சிவனுடைய மைந்தனாக விநாயகர் இருக்கலாம் என்பது ஐந்திணை எழுபது கடவுள் வாழ்த்துப் பாடல் மூலம் அறிய முடிகிறது. விநாயகர் வழிபாடு கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்பது ஆய்வாளர் கருத்துகள்.

சிவன் பற்றிய கதைகளைப் பண்டைத் தமிழிலக்கியங்கள் குறிப்பாகவும் சுருக்கமாகவும் கூறுகின்றன. அதனால் அக்காலங்களில் சிவனோடு தொடர்புடைய கதைகள் வழக்கில் இருந்தன என்பதை உணரலாம். அக்காலத்திற்கு முன்பு சிவன் பற்றிய கதைகள் இருந்தன என்பதற்கு வடமொழி இலக்கியங்கள் சான்றுகளாக உள்ளன. சிவனோடு தொடர்புடைய கதைகளைப் பல்வேறு மாற்றங்களுடன் புராணங்களும் இதிகாசங்களும் கூறுகின்றன. அவற்றுள் மனித நிலையைக் கூறும் வகையில் சில கதைகள் அமைந்திருக்கின்றன. இத்தகைய கதைகளின் மாறுபாடுகளுக்கு அக்காலச் சமுதாயச் சூழ்நிலைகளே காரணம் எனலாம்.

சிவன் பற்றிய தத்துவங்கள் பண்டைத் தமிழிலக்கியங்களில் இல்லாமல் இல்லை. பிற்காலத்தில் தோன்றிய சமய இலக்கியங்களில் சிவன் பற்றிய தத்துவங்கள் மிகுதி

யாகக் கூறப்பட்டிருக்கின்றன. சமயவாதிகளும் பல தத்து வங்களைக் கூறுவர். பண்டைத் தமிழிலக்கிய காலத்தில் சமயங்களில் வேறுபாடிருந்தும் அவ்வளவாகப் போட்டி இல்லை. அக்காலச் சமுதாய அமைப்புகளே அதற்குக் காரணம் எனலாம். பிற்காலத்தில் சமயங்கள் பலவாகிப் போட்டியும் பூசலும் ஏற்பட்ட நிலையில் சமயவாதிகள் தங்கள் சமயங்களை உயர்த்தும் போக்கில் தத்தம் சமயங் களின் கடவுளின் சிறந்த செயல்களையும் தத்துவங்களை யும் எடுத்துக் கூறினர். அதனால் சமயத் தத்துவங்கள் நாளுக்கு நாள் பலவாறாகப் பெருகின எனலாம்.

சிவனுக்குரிய கதைகளும் தத்துவங்களும் பலவாறு மாற்றமடைந்து வந்திருக்கின்றன. இதற்கு ஏற்பவே வடிவங்களும் மாறிவந்திருக்கின்றன. இவ் வடிவங்கள் சிவனுக்குரிய பொருள்களாக மாறுவதற்கு அக்காலச் சூழலே காரணம் எனலாம்.

தொன்மைச் சமுதாயத்தில் இயற்கையைத் தெய்வ மாக வணங்கினர். பின்னர் இயற்கையில் ஒன்றான நெருப்பை இலிங்கம் என்னும் குறியீட்டு வழிப்பாடாக வணங்கினர். அதன் பிறகு மனித வடிவ நிலையில் சிவனை வணங்கினர். அதன் அடிப்படையில் மக்கள் பயன்படுத்திய பொருட்களும் சிவனுக்குரியதாக மாறின. இத்தகைய நிலையிலேயே ஆண் பெண் சேர்ந்த பொதுத் தோற்ற நிலைகளை விளக்கும் அர்த்தநாரீஸ்வரர் வடிவமும், ஆசிரியர் மாணவர் உறவைக் குறிக்கும் தக்ஷிணாமூர்த்தி வடிவமும், நடனக் கலையை உணர்த்தும் நடராசர் வடிவ மும், தோன்றின எனலாம். அதனால் 'சிவன்' என்னும் கருத்து சமுதாயச் சூழலுக்கு ஏற்ப மாறிவந்திருக்கின்றன எனத் தெளியலாம்.

சிவனின் பல்வேறு வடிவங்களுள் பண்டைத் தமிழிலக் கியங்கள் கூறும் வடிவங்களையும் பொருள்களையும் அடிப் படையாகக் கொண்டு சமுதாயத்துடன் தொடர்புபடுத்தி இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டிருப்பதால் மற்ற வடிவ நிலை களும் பொருட்களும் ஆராயப்படவில்லை. தற்காலம்வரை

வளர்ந்துள்ள சிவன் பற்றிய கருத்துகளையும் வடிவங்களையும் பற்றி இவ்வாய்வின் தொடர்ச்சியாக மேற்கொள்ளலாம்.

இது தவிர, புராணக் கதைகள், தத்துவங்கள் இவற்றின் மாறுதல்களுக்கான காரணத்தையும் அடிப்படையாகக் கொண்டு சிவன் பற்றிய கருத்துகளைச் சமுதாயப் பின்னணியுடன் தொடர்புபடுத்தியும் ஆய்வு நிகழ்த்தலாம்.

வேதகால உருத்திரனும் தமிழிலக்கியச் சிவனும் பண்புகளால் ஒத்துள்ளமையால் அவற்றை ஒப்பிட்டும் ஆராயலாம்.

வழிபாட்டு முறைகளில் காலந்தோறும் மாறிவரும் மாற்றத்திற்கான காரணத்தையும் சமுதாயச் சூழலுடன் ஒப்பிட்டு ஆய்வதற்கும் சான்றுகள் உள்ளன.



அரி அரன்

ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயு நீயே — பரி. 4: 67 – 70

# துணைநூற் பட்டியல்


அண்ணாமலை, ஐ. 'சங்ககாலச் சிவ வழிபாடு' பதினைந்தாவது ஆய்வுக்கோவை (தொகுதி - 3), இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர், 1983.

அப்பாதுரை, கா. குமரிக்கண்டம் (அ) கடல் கொண்ட தென்னாடு, கழக வெளியீடு, சென்னை, 1975.

அய்யாசாமி, அ., இறைவனைத் தேடுங்கள், கவிதா வெளியீடு, சென்னை, 1981.

அன்தோனவா, கொ. அ., போன்காரத்-லேவின், கி. ம., கத்தோவஸ்கி, கி. கி., இந்தியாவின் வரலாறு, பூ. சோமசுந்தரம் (மொழி), முன்னேற்றப் பதிப்பகம் மாஸ்கோ, 1979.

ஆறுமுக நாவலர்., திருவிளையாடற் புராணம், வசனம், ஆறுமுகநாவலர் அச்சகம், சென்னை, 1961.

இரத்தினசபாபதி, வை., வீர சைவம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1977.

இராசமாணிக்கனார், மா., சைவ சமய வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1972.

இராமநாத பிள்ளை. ப., சோமசுந்தரனார், பொ. வே. (உரை), பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள் (இரு பகுதிகள்), கழகம், சென்னை, 1973.

கந்தையா பிள்ளை, ந. சி., சிந்து சமவெளித் தமிழர், முத்தமிழ் நிலையம், சென்னை, 1947.

கழகத்தார், பதினெண்கீழ்க்கணக்கு, கழகம், சென்னை, 1963.

கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழ் அகராதி, கழகம், சென்னை, 1964.

சண்முகசுந்தரன், க., வன்னியர் வரலாறு பல்லவ நாடு தோற்றம், தமிழ்மறைப் பள்ளி, சென்னை, 1971.

சண்முகசுந்தரம், க., சங்க இலக்கிய வாலாறு தமிழ் ஆய்வகம், சென்னை, 1984.

சாமிநாதையர் உ. வே., (பதி), சிலப்பதிகாரம், (அடியார்க்கு நல்லாருரை), ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1927.

சாமிநாதையர் உ. வெ. (பதி) தக்கயாகப்பரணி, ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு சென்னை, 1930.

சாமிநாதையர், உ. வே., (பதி) பரிபாடல், (பரிமேலழகர். உரை) ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு. சென்னை, 1956.

சாமிநாதையர், உ. வே., (பதி) ஐங்குறுநூறு, ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை. 1957.

சாமிநாதையர், உ. வே., (பதி) பத்துப்பாட்டு, (நச்சினார்க்கினியர் உரை) ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1961.

சாமிநாதையர், உ. வே., (பதி), புறநானூறு ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1963.

சிங்காரவேலு, ஆ., (தொ—ர்), அபிதான சிந்தாமணி, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், புது தில்லி. 1981.

சிவன் பிள்ளை, தி., (உரை), பிங்கல நிகண்டு, இந்து தியாலாஜிகல் யந்திரசாலை, சென்னை, 1890.

சுப்பிரமணிய பிள்ளை, கா. தமிழர் சமயம், கழகம், சென்னை, 1953.

சுப்பிரமணிய பிள்ளை, கே., (பதி), ஞானசம்பந்தர் தேவாரம், ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் 26 - ம் நினைவு நாள் வெளியீடு, ஸ்ரீ வைகுண்டம், 1971.

சேஷாத்திரி, தி., இந்துமதம் ஓர் அறிமுகம், அத்வய பிரசுரம், மதுரை, 1975.

சோமசுந்தரம் செட்டியார்., சைவ சித்தாந்தச் சொற்பொழிவுகள், சி. ஜகந்நாதாசார்யர் (தொ—ர்) சென்னை, 1972.

ஞானப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள்., ஞானபூமி மாத இதழ், அக்டோபர், சென்னை, 1983.

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாட்டு வரலாறு, தொல்பழங்காலம், தமிழ்நாடு அரசு, சென்னை, 1975.

திருமூலர்., திருமந்திரம், சைவசித்தாந்த மகாசமாஜ வெளியீடு, சென்னை. 1940.

திருவாடுதுறை, ஆதினம், ஆடல் வல்லான் ஸ்ரீ ஞானமா நடராசப் பெருமான் மணிவிழா மலர், திருவாவடுதுறை, 1967.

துரைசாமிப் பிள்ளை, சு, (உரை), பதிற்றுப்பத்து, கழகம், சென்னை, 1963.

தேவநேயன், ஞா., தமிழர் மதம், நேசமணி பதிப்பகம், வடார்க்காடு மாவட்டம், 1972.

நச்சினார்க்கினியர் (உரை), தொல்காப்பியம், கழகம், சென்னை, 1974.

நச்சினார்க்கினியர் (உரை), கலித்தொகை, கழகம், சென்னை, 1970.

பாசம், ஏ. எல்., வியத்தகு இந்தியா, வேலாயுத பிள்ளை (மொழி), இலங்கை, 1963.

பாலசுப்பிரமணிய முதலியார், ம., ''சிவன்'' கலைக் களஞ்சியம் தொகுதி-4, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

மறைமலை அடிகள், தமிழர் மதம், கழகம், சென்னை, 1974.

முருகவேள், ந, ரா., தெய்வத் திருவுருவங்கள், தணிகைப் பதிப்பகம், சென்னை, 1974.

வச்சிரவேல் முதலியார், க., சைவமும் வைணவமும்., தமிழ்நாடு அரசினர் அறநிலைய ஆட்சித்துறை, சென்னை, 1969..

வேங்கடசாமி, மயிலை, சீனி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், சென்னை, 1948.

வேங்கடசாமி நாட்டார், ந. மு., துரைசாமிப் பிள்ளை, சு., (உரை), மணிமேகலை, பாகனேரி த. வை. இ. தமிழ்ச் சங்க வெளியீடு, சென்னை, 1953.

வேங்கடசாமி நாட்டார், ந. மு., (உரை), சிலப்பதிகாரம், பாகனேரி த. வை. இ. தமிழ்ச்சங்க வெளியீடு சென்னை, 1953.

வேங்கடசாமி நாட்டார், ந. மு., வேங்கடாசலம் பிள்ளை, ரா. (உரை), அகநானூறு, பாகனேரி, த. வை. இ, தமிழ்ச் சங்க வெளியீடு, சென்னை, 1965.

ஸ்ரீ தேசிகன். ரா., மேனாட்டுத் தத்துவம் (பண்டைக் காலம்) ஜகன்மோகினி காரியாலயம், சென்னை, 1962.

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் (உரை), திருவாசகம், தபோவன வெளியீடு, திருச்சி, 1968.

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங்கள், ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனம், திருச்சி, 1965.

Bhandarakar R. G., VAISNAVISM, SAIVISM, AND MINOR RELIGIOUS SYSTEMS, Varanasi, 1965.

John Marshall., MOHENJODARO AND THE INDUS CIVILIZATION, Vol., I. Indological Book House, Delhi, 1973.

Narayana Ayyar, C. V., ORIGIN AND EARLY HISTORY OF SAIVISM IN SOUTH INDIA, University of Madras, 1936.

Nandita Krishna, "Two thousand years of Solitude", INDIAN EXPRESS, Madras, dated July 15, 1984,

Rabindra Kumar Siddhanta Shastree., SAIVISM THROUGH THE AGES, Munshiram Manoharlal Publishers Pvt Ltd, New Delhi, 1975.

Sastri, J. C., (Ed) THE SIVA-PURANA, Part. I, Motilal Banarsidass, Delhi,1970.

Sastri, J. C. (Ed) THE LINGA PURANA, PART I. Motilal Banarsidass, Delhi, 1973.

Venkataramanayya. N., RUDRA-SIVA University of Madras, 1941.

Griffith Ralph, T. H., (Tn) THE HYMNS OF ATHARVA VEDA, The Chowkhamba Sanskrit, Serious Office, Varanasi, 1968.

Griffith Ralph, T .H. (Tn) THE HYMNS OF THE REGVEDA, Motilal, Banarsidass, Delhi, 1973.

Swami Tyagi Sananda (Ed) SVETASVATAROPANISAD, Sri Ramakrishna Math, Madras, 1943.

Valmiki., RAMAYANAM (Text), Gita Press and Publication, Gorakpur, . 1943.

Vyasar, SRIMAN MAHABHARATHAM (Text), Gita Press and Publication, Gorakpur, 1966.

Vallabha Chariyar NATCHATRA SUDAMANI (Place and year of publication are not available).



## இந் நூலாசிரியர் ச. இரேணுகா

இவர் சென்னை, சூளைமேட்டில், அரசு மகளிர் உயர்நிலைப் பள்ளியில் படித்து 1977-மார்ச்சு எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் விருப்பப்பாடம் வேதியலில் பள்ளியில் முதற் பரிசு பெற்றார்.

இவர் சென்னை, இராணி மேரி கல்லூரியில் பி.யூ.சி.யிலும் பி.ஏ.விலும் முதற் பகுதியில் சமஸ்கிருதமும் மூன்றாம் பகுதியில் தமிழும் பயின்றார். இவர் கல்லூரி தேர்வுகளில் சிறந்த மதிப்பெண் பெற்று பி.ஏ.வில் இலக்கிய வரலாற்றில் இரண்டாம் பரிசு பெற்றார்; எம்.ஏ.வில் தமிழில் முதற் பரிசு பெற்றதோடு முதுகலையில் கலையியல் துறைகளில் பயிலும் மாணவியர்களில் தலைச் சிறந்த மாணவிக்கு அளிக்கப்படுவதான பெறுதற்கரிய லேடி பெண்ட்லேண்டு பரிசு பெற்று மாண்புற்றார். மேலும் பாரதி விழா மற்றும் நேரு நினைவு நாள் கட்டுரைப் போட்டிகளில் முதற் பரிசுகளும் முத்தமிழ் விழா கட்டுரைப் போட்டியில் இரண்டாம் பரிசும் பெற்றார்.

இவர் பி.ஏ. தேர்வுகளில் சிறந்த மதிப்பெண்கள் பெற்றதால் சென்னைப் பல்கலைக் கழகம் இவருக்கு எம்.ஏ. படிப்பதற்கு நேஷனல் ஸ்காலர்சிப் ஸ்கீம் 1981-82 ன் கீழ் மெரிட் ஸ்காலர்சிப் அளித்தது. இவர் முதல்தர மாணவியாக விளங்கியவர்.